# சித்தர் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள்

ஆய்வாளர்

**ஆ. உஷா**

**(பதிவு எண் : 9313)**

தமிழ்

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக முனைவர்

பட்டத்திற்காக (Ph.D) அளிக்கப்பெறும் ஆய்வேடு



மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்

திருநெல்வேலி – 627 012.

ஜீன் 2018

# மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்
# திருநேல்வேலி - 627 012

## உறுதிமொழி

'சித்தர் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள்' என்னும் தலைப்பில் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு தூத்துக்குடி ஏ.பி.சி மகாலெட்சுமி மகளிர் கல்லூரியின் தமிழாய்வு மையத்தில் மேற்கொள்ளப்பட்டது. மேலும் இவ்வாய்வானது என் சொந்த முயற்சியால் உருவானது எனவும், இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப்பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

நான் பல்கலைக்கழகத்தின் கொள்கை மற்றும் கருத்துத் திருட்டு குறித்து புரிந்து கொள்கிறேன். இந்த ஆய்வு மற்றும் வெளியீடுகள் எனது சொந்தமுயற்சியால் உருவானது எனவும், இதைத் தவிர வேறு எந்த ஆய்வேடுகளிலிருந்தும் நகலெடுக்கப்பட்டிருக்கவில்லை என்றும், விருது அல்லது மதிப்பீட்டிற்கு இதற்கு முன் சமர்ப்பிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

ஆ.உஷா
ஆய்வாளர்

முனைவர் கு. நீதா
நெறியாளர்
உதவிப் பேராசிரியர்,
ஏ.பி.சி மகாலெட்சுமி மகளிர் கல்லூரி
தூத்துக்குடி.

## நன்றியுரை

**'சித்தர் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள்'** என்ற தலைப்பில் ஆய்வினை மேற்கொள்ள அருள் புரிந்த இறைவனுக்கு எனது இதய மலரிலிருந்து மனதார நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வினை மேற்கொள்ள எனக்கு அனுமதி தந்த மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம் மற்றும் நிர்வாகிகளுக்கும் எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்குப் பல வகையிலும் உதவிப் புரிந்து, அவ்வப்போது ஆக்கமும் ஊக்கமும் அளித்த சிறந்ததொரு நெறியாளர் முனைவர் கு.நீதா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

ஏ.பி.சி.மகாலெட்சுமி மகளிர் கல்லூரியின் செயலர் திருமதி.சுப்புலெட்சுமி சொக்கலிங்கம் அவர்களுக்கும், கல்லூரியின் முதல்வர் முனைவர்.இரா.செ.வாசுகி அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் முனைவர்.நீ.கந்தம்மாள் அவர்களுக்கும் என் நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

ஆய்வினைச் செய்ய இசைவு தந்த எம் கல்லூரி நிர்வாகி பக்தானந்த மகராஜ் அவர்கள், கல்லூரிச் செயலர் யதீஸ்வரி சரவணபவப்ரியா அம்பா அவர்கள், கல்லூரி முதல்வர் முனைவர்.எம்.மலர்விழி அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆராய்ச்சிக்கு ஆலோசனை வழங்கி ஊக்குவித்த தமிழ்த்துறைத் தலைவர் முனைவர்.ச.பர்வத கிருஷ்ணம்மாள் மற்றும் துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றி.

ஆய்விற்குத் தேவையான நூல்களைத் தந்து உதவிய மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக நூலகத்தார்க்கும், ஸ்ரீ சாரதா மகளிர் கல்லூரி நூலகத்தார்க்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னுடைய ஆய்வுக்கு உறுதுணையாய் நின்று, இணைந்து செயல்பட்ட என் அன்புக் கணவர் முனைவர்.ச.சேது அவர்களுக்கும், எனது மகன்கள் கதிர்வேல் வெற்றிவேல் மற்றும் எனது குடும்பத்தார்க்கும் நன்றியை உரித்தாக்குகிறேன்.

**ஆ.உஷா**

# பொருளடக்கம்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

ப. - பக்கம்

பதி - பதிப்பு

ப.ஆ. - பதிப்பாசிரியர்

உ.ஆ - உரையாசிரியர்

தொ.ஆ - தொகுப்பு ஆசிரியர்

மேலது - மேற் கூறிய நுல்

சிவவாக் - சிவவாக்கியர்

திரு - திருமந்திரம்

அ-ள் - அடிகள்

பா. - பாடல்

# இயல் 1

## பதினெண் சித்தர்கள்

மனிதர்களிடம் காணப்படாத வியக்கத்தக்க ஆற்றலைக் கொண்டவர்களைச் சித்தர்கள் என்று அழைக்கின்றனர். இவர்கள் மெய்ஞ்ஞானம் நிரம்பியவர்கள். மருத்துவம், மந்திரம், இரசவாதம் போன்றவை தெரிந்தவர்கள். எளிய வாழ்க்கை வாழ்ந்தவர்கள் இறப்பை வென்றவர்கள். அச்சம் அறியாதோர். கூடுவிட்டுக் கூடுபாயும் வல்லமை மிக்கோர் ஆவார். ஆழமான யோகமும், ஞானமும் பற்றிப் பல பாடல்களைப் பாடியவர்கள். இவர்கள் பாடலில் மக்கள் வழக்கிற்கேற்ற மொழிநடையும், வடிவமும் எளிமையாகத் தென்பட்டாலும், அவை ஆழமான பொருள் கொண்டவைகளாகத் திகழ்கின்றன. சமுதாய மறுமலர்ச்சிக்கு வித்திட்ட பதினெண் சித்தர்கள் குறித்து விளக்குவதாக இவ்வியல் அமைந்துள்ளது.

### 1.1 சித்தர்கள்

சித்தர்கள் சமயக் கோட்பாடுகளைப் புறந்தள்ளிவிட்டு, தங்களுக்கென்றொரு கொள்கையை வகுத்துக் கொண்டு அதன் வழி ஒழுகினர். மதம், சாதி பேதங்கள், உயர்வு, தாழ்வு இவை அனைத்தையும் கடந்து நின்றார்கள். சித்தர்களைப் பற்றிய பல்வேறு கதைகளும் கருத்துகளும் நாட்டில் நிலவி வருகின்றன. சித்தர்கள் பற்றிய செய்திகள் எல்லாம் செவி வழியாகவும் நூல் வழியாகவும் மட்டுமே கிடைக்கக் கூடியவையாக இருக்கின்றன. சித்தர்கள், உலகத்தின் பொருள் வாழ்க்கை நெறிக்கு உடன்படாதவர்களாகத் தங்களுக்கென்று தனி வழியை வகுத்துக் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். சித்தர்கள் என்றால் சித்துகள் செய்பவர்கள். சித்து என்பது எல்லாவற்றையும் உணர்ந்து கொள்ளும் தன்மை எனப் பொருள். தமிழில் “சித்தர்” என்னும் சொல் ஏறத்தாழ 15 நூற்றாண்டுகளாக வழக்கில் இருந்து வந்துள்ளது. சித்தர் என்ற சொல்லுக்கு இயற்கை இகந்த செயல்பாடு, அற்புதம், மனநிறைவு, திடமனம் எனப் பல பொருள் உண்டு.

அதாவது மனிதன் புறத்தே உள்ள பொருள்களை மட்டுமல்லாமல் தன் அகத்தே உள்ள மனத்தையும் அடக்கிக் கட்டுப்படுத்தி, மனித சக்திக்கு அப்பாற்பட்ட செயல்களைச் செய்து முடிப்பவர் என்றும் பொருள் கொள்கின்றனர். சித்தர்கள் நம் நாட்டில் குறிப்பாக, தமிழகத்தைப் பொறுத்தவரை மூவகையாகப் பிரித்து பார்க்கப்படுகின்றனர். முதலாவதாக, இறை நம்பிக்கையில் ஊறித் திளைத்து மனநிறைவு பெற்றவர்கள். இரண்டாவதாக சித்தத்தைச் சிவன் பால் செலுத்திய போதிலும் இயற்கையை எதிர்த்துப் போராடி இயற்கையை வசப்படுத்தி மனித சமூகத்தின் நல்வாழ்வுக்காக இயற்கைப் பொருள்களைப் பயன்படுத்தியவர்கள். மூன்றாவது இயற்கையை எதிர்த்துப் போராடும் போது கடவுள் நம்பிக்கையில் ஈடுபடாது பொருள் முதல்வாதிகளாக இலங்கியவர்கள். இம்முப்பிரிவுகளிலும் மருத்துவர்கள் உண்டு. ஸித் என்னும் வடமொழி வேர்ச் சொல்லே ஸிது என்றாகி ஸித்த என்னும் சொல்லாக உருமாறியது. இது எண்வகைச் சித்துகளைக் கைகூடப் பெற்றவர்களைக் குறிக்கும். இதுவே தமிழில் சித்தர் என்றாகியது.

“ஒளியில் ஒளிபோய் ஒடுங்கிய வாரும்
தெளியும் அவரே சிவசித்தர் தாமே”[1]

அளப்பரும் கரணங்களான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கனுள் சித்தமிசை அறிவைக் குடியேற்றி வாழும் நிலை அறிந்தவர்கள் சித்தர்கள். இவர்கள் ஆசனங்கள் பலவற்றை மேற்கொண்டும், பிராணாயாமம் வாசி யோகம் போன்ற சுவாசப் பயிற்சிகளை மேற்கொண்டும், உடலை ஓம்பி உயிருக்கு ஆக்கம் தேடிக் கொண்டனர். நரை, திரை, பிணி, மூப்பு மற்றும் சாக்காடு ஆகிய அனைத்தையும் வென்று மரணமில்லாப் பெருவாழ்வு என்னும் மாபெரும் கலையை அறிந்தவர்கள் சித்தர்கள். தாமறிந்த கலையை “யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்” என்னும் அருள் நோக்கில் உலக மக்களுக்கு அறிவித்தவர்களும் சித்தர்கள் ஆவர். சித்தர் என்ற சொல்லுக்கு பலவகையான அர்த்தங்களை பலர் தந்துள்ளனர். அவற்றில் ‘உலகியலைத் துறந்தவர்கள், உலக நடப்பிலிருந்து வேறுபட்டவர்கள், சித்துகள் ஆடுவதில் வல்லமை பெற்றவர்கள் ஆகியவை

முக்கியமானதாகக் கருதப்படுகின்றன. சிந்தித்தல் என்பதற்கு அடைதல் என்று கூறினால் ‘இறை நிலையை முழுமையாக அடைந்தவர்கள் சித்தர்கள் என்றும் பொருள் கொள்ளலாம்.

செகமெலாம் சிவமென்றே அறிந்தோன் சித்தன்

சிறந்து மனத் தெளிவாகிச் சேர்ந்தோன் சித்தன்[2]

சித்தர்கள் சிவனை போற்றிப் துதிக்கின்றனர் என்பதை இப்பாடல் வழி அறியலாம். திருமூலரும் தன் பாடல் வழி இதே கருத்தை வலியுறுத்தி கூறியுள்ளார்.

சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்

சுத்தாசுத் தத்துடன் தோய்ந்துத் தோயாதவர்

முத்தாரம் முக்திக்கு மூலத்தர மூலத்துச்

சத்தார் சதாசிவத் தன்மையர் தாமே[3]

**1.2 சித்தர் தன்மைகள்**

சித்தர்கள் சமயக் கோட்பாடுகளைப் புறந்தள்ளிவிட்டு, தங்களுக்கென்றொரு கொள்கையை வகுத்துக் கொண்டு அதன் வழி ஒழுகினர். மதம், சாதி பேதங்கள், உயர்வு தாழ்வு இவை அனைத்தையும் கடந்து நின்றார்கள். சித்தர்களைப் பற்றிய பல்வேறு கதைகளும் கருத்துகளும் நாட்டில் நிலவி வருகின்றன. சித்தர்கள் பற்றிய செய்திகள் எல்லாம் செவி வழியாகவும் நூல் வழியாகவும் மட்டுமே கிடைக்கக் கூடியவையாக இருக்கின்றன. சித்தர்கள், உலகத்தின் பொருள் வாழ்க்கை நெறிக்கு உடன்படாதவர்களாகத் தங்களுக்கென்று தனி வழியை வகுத்துக் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர்.

பயனுடையவை எவை என்பதைப் பிரித்தறிந்து அவற்றுள் புதுமைகளைப் புகுத்துகின்ற அறிஞர்களாகவும், சமுதாயத்தில் உள்ள ஏற்றத்தாழ்வுகளை, சாதி

சமய மத பேதங்களை மாற்றக் கருதிய சீர்த்திருத்தவாதிகளாகவும் காணப்படுகின்றனர். நோயற்ற வாழ்வும் சாகாநிலையும் மனிதன் அடையக் கூடிய இடம் என்று நிரூபித்தனர். சித்தர்களின் முறைகள் அறிவியல் பார்வைக்கு உடன்பாடாக இருக்கின்றன.

### 1.3 சித்தர்களின் புறத்தோற்றம்

காடுகள், மலைகளில் வாழும் சித்தர்கள் தங்களது தோற்றம் எத்தகைய வடிவத்தை கொண்டிருக்க வேண்டும் என்று தீர்மானித்திருந்தனர். சிவனையே சித்தராக எண்ணிய சித்தர்கள், சிவபெருமானுக்குரிய தோற்றத்தையே தாமும் புனைந்தனர்.

சிவபெருமானின் தோற்றத்தைப் பற்றிக் கூறும் பரஞ்சோதி முனிவர், தலையில் கற்றைச் சடை, மார்பில் முப்புரிநூல், உடல் முழுவதும் திருநீறு, செவிகளில் தோடு, இடையில் புலித் தோல் ஆடை, தோளில் திருநீற்றுப்பை, கழுத்தில் மணிமாலைகள், இடதுதோளில் யோகதண்டம், ஒரு கையில் மழு,மறு கையில் பொன் பூணிட்ட பிரம்பு எனத் தோற்றமளித்ததாகக் குறிப்பிடுகின்றனர்.[4]

### 1.4 சித்தர் தொகை வரையறை

சித்தர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளோ ஆவணங்களோ கல்வெட்டுகளோ எதுவுமே காணக்கூடியதாக இல்லை. இந்நிலையில் சித்தர்கள் எத்தனைபேர்கள் என்பதில் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. திரேதாயுகத்தில் ஆயிரம்பேர், துவாபார யுகத்தில் ஐந்நூறு பேர், கலியுகத்தில் மூவாயிரம் பேர் சித்தர்கள் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. சித்தர்கள் மொத்தம் 88000 பேர் என்று விஷ்ணு புராணம் குறிக்கிறது. சதகோடி சித்தர் கூட்டம் என்று காரைச் சித்தர் ஒரு கணக்குச் சொல்கிறார். புத்த சமய சித்தர்கள் எண்பத்துநான்கு பேர் என்று குறிப்பிடப் பெறுகின்றனர். வடநாட்டுச் சித்தர்கள், நவநாத சித்தர்கள் ஒன்பது பேர் என்றும், தமிழ்நாட்டுச் சித்தர்கள், அட்டாதச சித்தர்கள் என்கிற பதினெட்டு பேர் என்றும் குறிப்பிடுவது மரபு.[5]

கயிலாயக் கம்பளிச் சட்டைமுனி நாயனார் தம் பாடலில் கோடிக்கணக்கான சித்தர்கள் பற்றிய குறிப்பைப் பதிவு செய்துள்ளார். இவரது பாடலில்

ஆடையிலே விண்ணுக்குள் சித்தர் கோடி[6]

என்ற வரிகள் கோடிக் கணக்கான சித்தர்களைச் சுட்டுகிறது.

வகுளிநாதர் என்ற மௌனச் சித்தர் தம் பாடலில் ஆயிரக்கணக்கான சித்தர்கள் ஒருவருக்கொருவர் தொடர்புடையவர்களாக வாழ்ந்ததைப் பற்றித் தம் பாடலில்,

ஆயிரம்பேர் சித்தருடன் அனுதினமும் பாடி

ஆனந்தத் திருநடனம் ஆடுவோமே[7]

என்று குறிப்பிட்டுள்ளார். கோடி பேர், ஆயிரம் பேர் என்றேல்லாம் சித்தர்கள் குறிப்பிடுவது வரையறை செய்யப்பட்ட எண்ணிக்கையல்ல, சித்தர்களை எண்ணிக்கை கணக்கில் அடக்க முடியாது. அவர்கள் கணக்கிலடங்காதவர்கள் என்ற பொருளிலே குறிப்பிடப்பட்டுள்ளனர்.

### 1.5 சித்துகள்

'சித்து' எனப்படும் இயற்கை மீறிய ஆற்றல் கைவரப் பெற்றவர்களாகச் சித்தர்கள் இருந்தனர் என்பதை அவர்களைப் பற்றிய செய்திகள் பலவும் வலியுறுத்துகின்றன. இதன் அடிப்படையில், 'சித்துகள் கைவரப் பெற்ற அனைவரும் சித்தர்கள்' என்று தீர்மானிக்க முயல்வது பொருந்தாது. அது உண்மைக்கு மாறானதுங்கூட.

சித்துகள் பொதுவாக எண் வகைப்படும். அவற்றை அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்று வடமொழியில் கூறுவர். இவற்றைத் தமிழில் முறையே அணுவைப் போல் நுண்மையாதல், மிகப் பெரியதாதல், மிக நுண்மையாதல், மிக எடையாதல், எங்கும் செல்லும் ஆற்றல்,

எண்ணியது எய்தும் ஆற்றல், எதையும் ஆக்கும் ஆற்றல், எவரையும் தன்வயப்படுத்தும் ஆற்றல் எனக் கூறலாம்.

மரபாகச் சொல்லப்படும் எண்வகைச் சித்திகளும், தேகத்தைக் கல்பசித்தி செய்தலும் கரும சித்தி எனப்படும். கல்பசித்தி என்பது உடல் அழியாமல் பாதுகாக்கும் வழிமுறைகளை குறிப்பிடுவது ஆகும். இச்சித்துகளின் கால அளவு மூன்றே முக்கால் நாழிகை முதல் மூன்றே முக்கால் ஆண்டுகள் வரை என்பர். பிராண கல்பதேகி என்பது புதைந்த தேகத்தைக் கெடுமுன் உயிர்ப்பித்தல் போன்ற அறுபத்து நான்கு சித்திகளை யோக சித்தி என்பர். இது பிற சித்துகளை உள்ளடக்கியது பிற சித்திகளைக் காட்டிலும் பெருமை வாய்ந்தது. சித்துகளின் எண்ணிக்கை பலகோடி எனும் குறிப்பு திருவருட்பாவில் பல இடங்களில் காணப்படுகிறது.

சித்தாடும் வல்லமையைப் பாம்பாட்டிச் சித்தர், கட்டுக் கடங்காத பாம்பைக் கையிலெடுத்து ஆட்டுவோம், இந்திரன் உலகத்தை இங்கே காட்டுவோம், தூணையும் துரும்பாகவும் துரும்பைப் பெருந்தூணாகவும், ஆணைப் பெண்ணாகவும் பெண்ணை ஆணாகவும் ஆக்கிக் காட்டுவோம், எட்டு மலைகளைப் பந்தாய் எடுத்து எறிவோம், ஏழு கடலையும் குடித்து ஏப்பமிடுவோம், மண்டலத்தைக் கையால் மறைப்போம், வானத்தை வில்லாய் வளைப்போம், நெருப்புக்குள் மூழ்கி விடுவோம், நீருக்குள் முழ்கி மூச்சை அடக்குவோம், பாயும் புலியைத் தாக்கி விடுவோம், இப்பெரிய உலகைச் செம்பொன்னாக மாற்றுவோம், செங்கதிரைத் தண் கதிராகச் செய்வோம், இப்பெரிய உலகத்தை இல்லாமற் செய்வோம் என்று எடுத்துரைக்கின்றார்.

அறுபத்து நான்கு கலைகளையும் அறிவோம் அதற்கு மேல் ஒரு கலையும் அறிவோம் சீறும் புலி, யானை, யாளி, சிங்கம் முதலான எல்லாம் எங்கள் சிற்றடிக்குக் குற்றேவல் செய்யச் சொல்லுவோம். வீறுபெற்ற கடவுள்களை எங்களோடு விளையாடச் சொல்வோம். என்று ‘சித்தி’ பெற்ற சித்தர் தங்களின் வல்லமையை உரைக்கக் காண்கிறோம். சித்தி என்பது, வெற்றியென்னும்

பொருளில் இங்கே வழங்கப் பெறுவது அறியத்தக்கது. தங்களின் ஆற்றலையும் முயற்சியையும் கொண்டு பெற்ற வெற்றியை உரைப்பதாகக் கொண்டால் அது சாலச் சிறப்புடையதாக இருக்கும். சித்துகள் அறுபத்து நான்கெனவும் அதற்கும் அதிகமான சித்துகள் உண்டென்றும், அச்சித்துகளைக் கைக்கொண்டவர் வல்லமையும் மேலே காட்டப் பெற்றன. சித்துகளின் விளக்கங்கள் புராண இலக்கியங்களிலும் பக்தி இலக்கியங்களிலும் காணக் கிடைக்கின்றன.

## 1.6 சித்தர் நெறியும் சமய நெறியும்

சித்த நெறியையும் சமய நெறியையும் பிரித்தறியாமல் இரண்டையும் ஒன்றாகப் பார்ப்பதனால் இந்த நிலை ஏற்படுகிறது. ‘இறை’ என்ற ஒன்றனைப் பற்றிய சிந்தனையில் சித்தமும் மதமும் வேறு வேறு திசையில் நிற்பன. அச்சொல்லைப் பயன்படுத்துவதில் மட்டுமே ஒரே நிலையிலிருந்தாலும் ‘இறை’ எனச் சுட்டிக் காட்டுவதில் வேறு வேறானவை.

தத்துவமும் மதமும் கலந்து உருவானது சித்தர் நெறி என்று மேலை நாட்டார் கருதுகின்றனர். ஐம்பொறிகளின் வழிவரும் புறஉலக அனுபவம், வேறுபாடுகளும் முரண்பாடுகளும் உடையதாக இருக்கிறது. எனவே, அதனை ஒதுக்கிவிட்டு உள்ளுணர்வில் சித்தனையைச் செலுத்தி உலகியலை விலக்கி இறைவனையே எண்ணியிருப்பவர்கள் சித்தர்கள் என்று சமய நெறியிலிருந்து சித்தர் நெறி வேறானவை என்பது விளக்கப் பட்டுள்ளது.

## 1.7 சித்தர்களின் குறிக்கோள்

சித்தர்கள், இந்த உலகத்திலுள்ள பொருளியல்சார் வாழ்க்கை நெறிகளை ஏற்றுக் கொள்ளாதவர்கள். தாங்கள் எண்ணிய ஒரு இலக்கை நோக்கிச் சென்று அதன் பயனை அறிந்து ஆனந்தம் கொள்பவர்கள்.

கால இட எல்லைக்குள் அடைபடும் இவ்வுலகையும் அதிலுள்ள பொருள்களையும் நடக்கும் நிகழ்ச்சிகளையும் அறிவதும் கட்டுப்படுத்துவதும் அதனால் மகிழ்வதும் சித்தர்களின் இறுதிக் குறிக்கோள் அல்ல.

இவற்றையெல்லாம் கடந்து மேல் செல்வதே அவர்களின் குறிக்கோள். சித்தர்கள் தங்களின் நோக்கங்களை ஒரு எல்லைக்குள்ளேயே நிறுத்திக் கொண்டு முடங்கிவிடாமல், மேலும் மேலும் கடந்து சென்று புதிய புதிய அனுபவங்களைப் பெற்று ஆனந்தம் அடைபவர்களாகக் காணப்படுகின்றார்கள்.

### 1.8 சித்தர்களும் சமுதாயமும்

சமுதாய நெறிமுறைகள் என்னும் இலக்கண வரையறைக்கு அப்பாற்பட்டதாக இருக்கும் சித்தர்களின் நெறிகளில், சமுதாயத்தினை சீர்த்திருத்துவது சித்தர்களின் கடமையாக இருந்தது என்பதை உணர முடிகிறது.

மருந்து, மந்திரம், யோகம் முதலியவற்றால் உயர்ந்த இவர்கள் மருந்து, மந்திரம் முதலியன கண்ட காரணத்தால் இவர்களைப் புதியன கண்டோர் (Inventors) எனலாம். சாதி, மதம், சமயம், சடங்கு முதலியனவற்றைச் சாடியவர்கள் ஆதலின் இவர்களைச் சமுதாயச் சீர்திருத்த வாதிகள் (Social Refromers) எனலாம். சித்தர்கள், சமுதாயத்திற்காகப் புதியன கண்டறியும் சீர்த்திருத்தவாதிகள் என்பதால், அவர்களையும் இச்சமுதாயத்தின் அங்கமாகவே கருதலாம்.

சித்தர்கள் சாதி, சமய வேறுபாடுகளைக் கடந்தவர்கள். மூடநம்பிக்கைகளுக்கு இடந்தராதவர்கள். சடங்குகளையும், சடங்குகளோடு தொடர்புடைய வழிபாடுகளையும் ஏற்காதவர்கள். தங்கள் வாழ்க்கையில் கண்டறிந்த உண்மைகளைத் தெளிவாக எடுத்துரைப்பதுவே இவர்களின் நோக்கம். இவர்கள் தத்துவ ஞானிகள் மெய்ஞ்ஞானிகள் யோகிகள், மருத்துவர்கள் எனும் சிறப்புப் பெற்றவர்களாக இருந்துள்ளனர்.

### 1.9 இலக்கியங்களில் சித்தர்கள்

சங்க இலக்கியங்களில் சித்தர் என்ற சொல் கையாளப் பெறவில்லை. சிலப்பதிகாரத்தில் நாடுகாண் காதையில் முதன் முதலாகச் சித்தன் என்னும் சொல் இரு இடங்களில் காணப் பெறுகின்றது. இதற்கு உரைகூறும் அடியார்க்கு

நல்லார் சித்தன் எண்வகை சித்திகளையும் உண்டாக்கியவன், சித்தன் கிருதகிருத்தியன். செயத்தகுவனவற்றைச் செய்து முடித்தோன், கண்மங்களைக் கழுவினோன் என இரு வகையாகப் பொருள் கூறுகின்றனர்.

### 1.9.1 தொல்காப்பியம் சுட்டும் சித்தர்கள்

தமிழ் இலக்கண நூல்களில் நமக்கு கிடைத்த அரிய நூலான தொல்காப்பியம், சித்தர்களை 'அறிவன்' என்றும் 'நிறைமொழி மாந்தர்' என்றும் அழகுற அழைக்கிறது. இதனைக் குறிக்கும் நூற்பாவானது,

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்

நெறியின் ஆற்றிய அறிவன் தேயம்"[8]

என்று உணர்த்துகிறது. மேலும்,

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த

மறைமொழி தானே மந்திரம் என்ப"[9]

என்று சித்தர்களை சுட்டிக் காட்டுகிறது.

### 1.9.2 மணிமேகலை காட்டும் சித்தர் இயல்புகள்

இரட்டைக் காப்பியங்களில் இரண்டாவதான மணிமேகலையும் சித்தர் இயல்புகளைச் சுட்டுகிறது. 'இருத்தி' என்னும் தமிழ்ச் சொல்லுக்குச் சித்தி என்று பொருள். மணிமேகலை கதாபாத்திரமான கந்திற்பாவை மணிமேகலையிடம், அவளது எதிர்காலத்தைப் பற்றிக் கூறும் போது, அளவற்ற சித்திகளுடன் புத்தபிரான் தோன்றுவார். எனப்படுகிறது. அப்பாவை மணிமேகலையை நோக்கி கூறும் போது,

"அறவெயில் விரித்து ஆங்கு அளப்பு இல் இருத்தியோடு

புத்த ஞாயிறு தோன்றும் காறும்"[10]

என்று உரைக்கிறது. கண்ணகி, தனது பிறவிநோய் ஒழியும் தன்மையைப் பற்றிக் கூறும்போது,

"அத்திறம் ஆயினும் அநேக காலம்

எத திறத்தார்க்கும் இருத்தியும் செய்குவம்"[11]

என்றுரைத்து, பிறவிநோய் தீர்க்கும் தன்மை பெற்று, அதன்பின் எவருக்காகவும் பல்வேறு சித்திகள் புரிந்து இருப்போம் என்று கூறுகிறாள். கடவுள் தன்மை பெற்று பிறவிநோய் அற்றவர் சித்தர் எனப்படுவர் என்ற கருத்தை மணிமேகலை சுட்டுகிறது.

### 1.9.3 சித்தர்களின் சிறப்பை உணர்த்தும் குறுந்தொகை

'கடுகு சிறுத்தாலும் காரம் குறையாது' என்பது போன்று சங்க இலக்கிய எட்டுத்தொகையில் அமையும் அகப்பாடல்களில் சிறப்புமிக்கது குறுந்தொகை எனலாம். இதில் அமைந்துள்ள வெள்ளி வீதியார் பாடல் ஒன்று சித்தர்களின் சித்திகளைப் பட்டியலிடுகிறது. இப்பாடலின் கருத்து தலைவனிடம் இல்லாத குணங்களைப் பேசும்போது, சித்தர்களின் பெருமையை விளக்குவதாக அமைந்துள்ளது.

தலைவியைப் பிரிந்த தலைவனிடம் எவ்வித சிறப்பு செய்கையும் இல்லாததால், அவரை எளிதில் கண்டுபிடித்துவிடலாம் என்கிறாள் தோழி. தோழி தலைவியை நோக்கி,

"நிலந்தொட்டுப் புகாஅர் வானம் ஏறார்

விளங்கு இரு முந்நீர் காலின் செல்லார்"[12]

என்று கூறுவதாக அச்செய்யுள் அமைந்துள்ளது. இதில் பூமியில் புகுதல், வான் வழிச் செல்லுதல், கடலின்மேல் நடத்தல் முதலிய சித்தர்களுக்குரிய சித்து நிகழ்ச்சிகள் இடம் பெற்றிருக்கின்றன. இவை, எண்வகைச் சித்திகளுள் அடங்கும். தவயோக முதிர்ச்சியாலும், மெய்ஞ்ஞான வலிமையாலும் எண்வகைச் சித்திப் பேற்றைப் பெற்றவர்கள் சித்தர்கள் எனக் கருதப்பெறுகின்றனர்.

### 1.9.4 சித்தர்களின் சித்தியைக் கூறும் புறநானூறு

தமிழகத்தின் பல்வேறு புலவர்கள், பல்வேறு சூழலில் படிய பாடல்களைக் கொண்ட நுல் புறநானூறு. அரசியல் கருத்துகளும் வாழ்க்கை நெறி முறைகளும், பண்டைய மரபுகளும், போர் நெறிகளும் தன்னகத்தே கொண்ட பல்கலைக் களஞ்சியம் புறநானூறு ஆகும். சங்க இலக்கிய நூலான புறநானூற்றிலும் சித்தர் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இதில் சித்தர்கள் தோற்றத்தைப் பற்றிக் கூறும் போது,

"நிலமிடை வாழ்நர் அலமரல் தீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்குக்
கால்உண வாகச் சுடரோடு கொட்டும்
அவிர்சடை முனிவர்"[13]

என்று குறிப்பிடுகிறது. காற்றையே உணவாகக் கொண்டு பல நூற்றாண்டுகள் வாழ்வதும், 'சித்தாகாசம்' என்கிற வான்வழியே செல்லுதலும் ஆகிய செயல்களை செய்பவர் 'அவிர்சடை முனிவர்' எனக் குறிப்பிடுகின்றது. முனிவர்கள், யோகிகள், ஞானிகள் என்றெல்லாம் சித்தர்களைக் குறிப்பிடும் மரபு உண்டு. எனவே, புறநானூற்றுப் பாடலிலும் உள்ள நிலத்துள் செல்லுதல் முதலிய செயல்கள் சித்துச் செயல்களையும், அவிர்சடை முனிவர் என்கிற சொல் சடை முடியை உடைய சித்தர்களையும் குறிக்கின்றன எனக் கொள்ள முடிகிறது.

### 1.9.5 சைவத் திருமுறைகள்

சித்தர் என்ற சொல் வழக்கு, சைவத் திருமுறைகளில் இடம் பெற்றுள்ளது. கடவுளைக் காண முயல்கின்றவர்கள் 'பக்தர்கள்' என்றும், கடவுளைக் கண்டு தெளிந்தவர்கள் 'சித்தர்கள்'[14] என்றும் தேவாரம் சுட்டுகின்றது.

"சித்தர் தாள்தொழ மூத்தராவரே"[15]

என்று சம்பந்தர் தேவாரத் தொடரிலும்,

"சித்தர் சித்தம் தைத்த புகழ்ப்

பத்தர் சித்தர் பலர் ஏத்தும்"[16]

என்று சுந்தரர் தேவாரப் பகுதியிலும்,

"ஒண்டிறல் யோகிகளே பேரணி யுந்தீர்கள்
திண்டிறல் சித்தர்களே கடைக்கூழை செண்மீன்கள்"[17]

என்ற திருவாசக அடிகளிலும் சித்தர்கள் குறித்த குறிப்புகள் உள்ளன.

### 1.9.6 பெரிய புராணம்

சேக்கிழார் எழுதிய திருத்தொண்டர் புராணம் எனும் பெரிய புராணம் திருமுறைகளில் பனிரெண்டாம் திருமுறையாகும். இதில் திருநாவுக்கரசு நாயனார் புராணம் என்ற பகுதியில் அப்பரின் சிவதரிசனம் பற்றிய செய்தியைக் குறிப்பிடுகிறார். அப்போது இறைவனை வணங்கும் உயர்ந்தோர்களுள் சித்தர்களும் இருந்ததை சுட்டியுள்ளார். இறைவனை வணங்குவோர் பட்டியலைக் குறிப்பிடும் போது,

"தேவர் தானவர் சித்தர்விச் சாதரர் இயக்கர்"[18]

என்று குறிப்பிட்டு சித்தர்களை இணைத்துப் பாடியுள்ளார்.

## 1.10 சித்தர் நெறிகள்

சித்தர் நெறி சமயம் கடந்தது. அதே சமயத்தில் சமயத்தோடு தொடர்பு கொண்டது. என்றாலும், சமயம் வேறு, சித்த நெறி வேறு. சித்த நெறி சமயத்துள் இருக்கிறது. ஆனால், சமயநெறி சித்தர் நெறியில் இல்லை.

சித்தர் நெறியை மதங்களோடு இணைத்துப் பேசலாம். ஆனால், மதங்களில் உயர்வு தாழ்வு காண்பது சித்தர் நெறிக்குப் பொருந்தாச் செயல். சித்தர்கள் தங்களுடைய இறையனுபவத்தைத் தம்மைச் சுற்றியுள்ள மக்கள் சார்ந்துள்ள மதக் கோட்டுபாடுகளின் வடிவமைப்பில் சொல்லியிருக்கிறார்கள். மக்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஒரே நோக்கத்திற்காகத் தங்கள் அனுபவங்களைச் சமயச்

சொற்களில் சொல்லியிருக்கின்றார்கள். சித்தர்கள் பயன்படுத்திய சொற்களைக் காரணம் காட்டி அவர்களையும் அச்சமய எல்லைக்குள் அடக்க முற்படுவது சரியாகாது. எந்த மதத்தையும் பண்பாட்டையும் சாராமல் தனித்தியங்கும் ஆற்றலுடைய பொது நெறியே சித்த நெறி[19] என்று சித்தர் நெறியைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. சித்தர்களின் வாழ்வையும் வரலாற்றையும் நோக்கும் போது, அவர்கள் மேற்கொண்ட சில நெறிகள் கூறப்படுகின்றன.

அவை சாதி, மத இன பேதங்களைச் சாடுவது, மக்களை ஏமாற்றும் பொய்மையான சடங்குகள், சம்பிராதயங்களுக்கு கண்டனம் தெரிவிப்பது, மக்களின் அறியாமை இருளை நீக்குவது, அரசியல் மற்றும் செல்வந்தர்களிடமிருந்து மக்களை மீட்டெடுப்பது போன்றவை சித்தர்களின் நெறிகளாக கூறப்படுகின்றன.

### 1.11 சித்தர்களின் ஆற்றல்கள்

சித்தர்கள் அழியாத உடம்பைப் பெற்றவர்கள், இரும்பைத் தங்கமாக்கும் இரசவாதக் கலையை அறிந்தவர்கள், கூடுவிட்டுக் கூடுபாயும் சக்தி பெற்றவர்கள், முக்கால நிகழ்வுகளையும் அறியக் கூடியவர்கள், நினைத்தவுடன் நினைத்த வடிவம் எடுத்துக் கொள்ளும் ஆற்றல் பெற்றவர்கள், நீரிலும், நெருப்பிலும் வானத்திலும் நடந்து செல்லும் வல்லமை பெற்றவர்கள் உலகம் முழுவதையும் தன் வசப்படுத்தி நடத்தும் வசித்துவம் ஆற்றல் பெற்றவர்கள் என்றும், இயற்கைக்கு மாறான அற்புதங்களையெல்லாம் செய்ய வல்லவர்கள் என்றெல்லாம் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

சித்தம் என்பது புத்தி, மனம்

சித்து – புத்தியால் ஆகிற காரியம்

சித்தர் – புத்தியைக் கட்டுப்படுத்தியவர்

இவர்கள் யோகத்தின் மூலமும், தியானத்தின் மூலமும் புத்தியைக் கட்டுபடுத்தியவர்கள்.

### 1.12 சித்தர் வகைகள்

“யோக சித்தர், ஞானச் சித்தர், காயச் சித்தர், சன்மார்க்கச்சித்தர்”[20] எனச் சித்தர்களை வகைப்படுத்துவர். தவயோகங்களில் சிறந்து விளங்கியவர்கள் யோக சித்தர்கள். ஞானநிலையை அடைந்து ஞான வழியைக் காட்டியவர்கள் ஞானச் சித்தர்கள், மருத்துவம், வாதம் ஆகியவற்றை அறிந்து உடலையும், உள்ளத்தையும் நிலைப்படுத்தியவர்கள் காயச் சித்தர்கள் ஆவர். இவர்கள் காயகற்ப முறையறிந்தவர்கள்.

இந்திய சித்தர் மரபை நான்கு வகையாகப் பிரிக்கலாம். சங்கத சித்தர், ரச சித்தர், நாத சித்தர், மகேஸ்வர சித்தர், ஆவர். இதில் சங்கத சித்தர் எனப்படுபவர்கள், பௌத்த சமயத்தைச் சேர்ந்தவர்கள். ரச சித்தர்கள் மருத்துவத் துறையை சார்ந்தவர்கள்.[21]

சிவபெருமானின் அனுபூதிநிலைப் பெயர் ‘ஆதிநாதர்’ என்பதாகும். ஆதிநாதனான சிவமரபைச் சேர்ந்தவர்கள் நாத சித்தர்கள் என்று அழைக்கப்பட்டனர். தென்னாட்டைச் சரர்ந்த சித்தர்களே மகேஸ்வர சித்தர்கள் எனப்பட்டனர்.

### 1.13 பதினெண் சித்தர்கள்

சித்தர்கள் பலர் இருப்பினும் வழக்கில் பதினெண் சித்தர்கள் எனும் மரபுள்ளது. சரியை என்பது முதல் நிலை. சாதாரணமாக ஒரு மார்கத்தைப் பின்பற்றிக்கொண்டு அதன் வழியில் செல்வது. நம்மைக் காட்டிலும் ஒரு உயர்ந்த சக்தியானது இந்த பிரபஞ்சத்தில் உண்டு எனும் நம்பிக்கையில் மத வழிபாடுகளை மேற்க்கொண்டு, ஒழுக்க நெறிகளை கடைபிடிக்க முயல்வதாகும்.

கிரியை என்பது இரண்டாம் படி நிலையாகும். இது தீவிரமான சமய சடங்குகளுக்குள் ஊடுருவும் கட்டமாக அமையும். இந்து மதத்தில் எந்திரம் எழுதுவது, யாகம் செய்வது, மாந்திரீகம், ஏவல் போன்றவைகளும், கிறிஸ்தவ மதத்தில் ஞானஸ்நானம் செய்வது, பேயோட்டுதல் (Exorcism), தீவிர பிராத்தனை,

ஜபம் செய்வது போன்றவைகளும், இஸ்லாமிய மதத்தில் ஏடு எழுதுவது, மந்திரித்துத் தருவது, மந்திரங்கள் ஓதுவது போன்றவைகளும் இந்த ”கிரியை” என்ற நிலையில் அடங்கும்.

சித்தர்கள் சரியையில் சரியை, சரியையில் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம், கிரியையில் சரியை, கிரியையில் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம், யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை, யோகத்தில் ஞானம், ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்ற பதினாறு நிலைகளையும் பழுதறப் பயின்று பதினேழாவது நிலையில் தன்னையும், தன்னுயிரையும் தான் முழுமையாக அறிந்து பதினெட்டாம் நிலையில் இறைவனை உணர்ந்து கண்டு தெளிந்தவர்கள் சித்தர்கள்.

இப்பதினெட்டு நிலைகளையும் படிகளாக்கி அதனைக் கடந்து இறவா நிலை அடைந்து இறை அனுமதி பெற்று அட்டமா சித்திகளை அடைந்தார்கள் சித்தர்கள். ஆதலினாலே சித்தர்கள் எண்ணற்றோர் இருப்பினும் இந்த பதினெட்டு நிலைகளையும் கடந்து கடவுளை அடைந்த யாவரையும் பதினெண் சித்தர்கள் என்கின்றனர்.

“பாடுவார் பதினெண் பேர் நூல்களெல்லாம்
பாலகனே இத்தயிலம் கொண்டு சாதி”[22]
“வாதினூல் அதீதம் பதினெண்பேர் சித்தர்
வசனித்த நூல்களும் பலிதம்”[23]

என்றவாறு சித்தர்கள் பதினெட்டுபேர் என்று சித்தர்களே குறிப்பிட்டுள்ளனர். பதினெட்டு என்ற எண்ணிக்கையில் பதினெண் கணங்கள், புராணங்கள் பதினெட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, பதினெண் மேற்கணக்கு, மெய்யெழுத்து பதினெட்டு, பதினெட்டாம் படி, மற்றும் இராமாயணப் போர் பதினெட்டு மாதங்களும்,தேவாசுரப் போர், பதினெட்டு ஆண்டுகளும், செங்குட்டுவன் கனக விசயப் போர் பதினெட்டு

நாழிகையும், பதினெட்டு நாள் பாரதப் போர், கலம்பக உறுப்புகள், வாத்தியம் பதினெட்டு, யாகம் பதினெட்டு, உபபுராணம் பதினெட்டு, தர்ம நுல்கள் பதினெட்டு, குற்றம் பதினெட்டு, இப்படி பதினெட்டு என்ற எண்ணின் பால் கொண்ட ஈடுபாட்டின் காரணமாக 'சித்தர்களையும் பதினெட்டு' என்ற எண்ணின் பால் அடக்கி காட்டுகின்றனர். தமிழிலுள்ள பதினெட்டு மெய்யெழுத்துக்களோடு சித்தர்களின் எண்ணிக்கையை ஒப்பு நோக்கி காட்டுகின்றனர்.

சித்தர்கள் பற்றிய பட்டியலில் புலிப்பாணிச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், அகப்பேய்ச் சித்தர், குதம்பைச் சித்தர், அழுகனிச் சித்தர், கடுவெளிச் சித்தர், சிவாக்கியர், பட்டினத்தடிகள், திருவள்ளுவர், சண்டேசர் ஆகியோரது பெயர்களும் காணப்படுகின்றன. இதனை,

"சித்தர்கள் தான் பதினெண்பே ராத்தாள் சொன்ன
செயலெல்லாம் கண்டுணர்ந்து தெளிந்திட்டார்கள்"[24]

என்ற பாடல் தெளிவுறுத்துகிறது.

சித்தர்கள் எல்லோருமே நல்ல மொழிப் புலமை உடையவர்கள். அவர்களின் பாடல்களில் எளிமையையும் கடுமையையும் காணலாம். நன்தமிழ் நடையில் தம் சிந்தனை ஓட்டத்தில் கிடைத்த அரும்பெரும் கருத்துக்களைப் பாடலாகப் பாடியுள்ளனர்.

சித்தர்களை ஒன்பதின்மர், பதினெண்மர் என அபிதான சிந்தாமணி சுட்டுகின்றது.

சித்தர்கள் ஒன்பதின்மர்

சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அனாதிநாதர், வெகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், சடேந்திரநாதர், கோரக்கநாதர்

சித்தர்கள் பதினெண்மர்

அகத்தியர், போகர், கோரக்கர், கைலாசநாதர், சட்டைமுனி, திருமூலர், நந்தி, கூன்கண்ணர், கொங்கணர், மச்சமுனி, வாசமுனி, கூர்மமுனி, கமலமுனி, இடைக்காடர், புண்ணாக்கீசர், சுந்தரானந்தர், உரோமரிஷி பிரமமுனி., இவர்களன்றித் தன்வந்திரி, புலஸ்தியர், புசுண்டர், கருவூரார், இராமதேவர், தேரையர், கபிலர் முதலியோரும் இப்பட்டியலில் இடம் பெறுகின்றனர்.

பதினெண் சித்தர்களும் சமாதியான ஸ்தலங்களை குறிக்கும் நெற்கட்டும் செவல் மன்னர் பூலித்தேவர் காலத்தில் உள்ள பழைய ஓலைச் சுவடி சான்று பாடல்,

“ஆதி காலத்திலே தில்லை திருமூலர்
அழகுமலை இராமதேவர்
அனந்த சயன கும்பமுனி திருப்பதி கொங்கணவர்
கமலமுனி ஆரூர்
சோதி அரங்க சட்டமுனி கருமை கருவூரார்
சுந்தரானந்தர் கூடல்
சொல்லும் எர்ரிகுடியில் வாங்மீகரோடு நற்
பாதி அரிச்சங்கரன் கோவில் பாம்பாட்டி
பழனிமலை போகநாதர்
திருப்பரங்குன்றமதில் மச்சமுனி
பத்ஞ்சலி இராமேஸ்வரம்
சோதிவைத்தீஸ்வரன் கோவில் தன்சந்திர்பேரையூர்
கோரக்கர் மாயீரங் குதம்பர்
திருவருணையோர் இடைக்காட சம்மதியிற்
சேர்ந்தனர் எமை காக்கவே”[25]

தஞ்சை சரசுவதி மகால் நூலகப்படத்தில் குறிப்பிடும் பதினெண் சித்தர்கள், திருமூலர், இராமதேவர், கும்பமுனி, இடைக்காடர், தன்வந்திரி வான்மீகர்,

கமலமுனி, போகர், மச்சமுனி, கொங்கணர், பதஞ்சலி, நந்திதேவர், சட்டைமுனி, சுந்தரானந்தர், குதம்பைச்சித்தர், கரூவூரார், கோரக்கர், பாம்பாட்டிச் சித்தர் ஆகியோர் மட்டுமே இவ்வாய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது.

## 1.14 சித்தர்கள் வரலாறு

### 1.14.1 திருமூலர்

சித்தர்களில் முதன்மையானவராகத் திகழ்ந்தவர். இவர் மூலன் என்ற இடையனின் உடம்பில் கூடு விட்டு கூடு பாய்ந்ததால் திருமூலர் என்று அழைக்கப்பட்டார். இவர் எழுதிய திருமந்திரம் ஏனைய திருமுறைகளை விட காலத்தால் முந்தியது., மேலும் இவர் வடபுலத்து முனிவர் பதஞ்சலி போன்றோரோடு தமிழ் நாட்டிற்கு வந்தவர் என்பர். இவர் சிவபெருமானிடமும் நந்தீசரிடமும் உபதேசம் பெற்றவர். அட்டமா சித்திகள் அனைத்தையும் அறிந்து கைதேர்ந்தவர். தமிழ் முனிவர் அகத்தியரிடம் கொண்ட அன்பால் அவருடன் சில காலம் தங்குவதற்கு எண்ணி, தான் வாழ்ந்த திருகைலையிலிருந்து புறப்பட்டு பொதிகை மலையை அடைதல் பொருட்டு தென்திசை நோக்கிச் சென்றார். திக்கேதாரம், பசுபதி, நேபாளம், அவிமுத்தம் (காசி), திருக்காளத்தி போன்ற திருத்தலங்களைத் தரிசித்தார்.

“நாடும் நகரமும் நற்றிருக் கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாகக் கொள்வானே”[26]

என்றவாறு ஒவ்வொரு திருத்தலங்களிலும் உள்ள சிவயோகிகளைக் கண்டு மகிழ்ந்தார்.

### 1.14.1.1 மூலன் திருமூலராக எழுந்தருளுதல்

திருவாவடுதுறை இறைவனை வழிபட்டுச் செல்லும் போது காவிரிக் கரையிலுள்ள பொழிலினிடத்தே பசுக் கூட்டங்கள் கதறி அழுவதனைக் கண்டார். அந்தணர்கள் வாழும் சாத்தனூரிலே ஆநிரை மேய்க்கும் ஆயனாகிய மூலன் என்பவன் தன் விதி முடிந்த காரணத்தினால் இறந்து கிடந்தான். மூலன் இறந்ததைக் கண்ட பசுக்கள் அவன் உடம்பினைச் சுற்றி சுற்றி வந்து வருந்தி கண்ணீர் விட்டன. பசுக்களின் துயர் கண்ட சிவயோகியார் (திருமூலர்) அவற்றின் துன்பம் துடைக்க எண்ணம் கொண்டார். இதன் காரணமாக தன் உடலை மறைவான இடத்தில் கிடத்திவிட்டு, கூடு விட்டு கூடு பாய்தல் என்னும் தன் சித்தியினால், தனது உயிரை இடையனது உடம்பினுள் புகுமாறு செலுத்தித் திருமூலராய் எழுந்தார்.

### 1.14.1.2 திருமூலரது காலம்

திருமூலருடன், ஒத்த காலத்தில் வாழ்ந்தவர்களைப் பற்றிய குறிப்புகள், மூலரின் காலத்தைக் கணக்கிட உதவுகின்றன. திருமூலர் மகாபாரத காலத்தில் வாழ்ந்துள்ளார். கிருஷ்ணன் மற்றும் மார்க்கண்டேயர் போன்றோருக்கு உபதேசித்துள்ளார் என்ற செய்தி பரவலாகக் காணப்படுகிறது.[27] இதன்படி மகாபாரதக் காலமான கி.மு.5,4-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் திருமூலர் என்று கணக்கிடப்படும்.

உடலுக்குத்தான் முதுமை, மரணம் என்பவை எல்லாம் ஏற்படமுடியுமே தவிர ஆன்மாவுக்கு ஏற்பட முடியாது. ஒரு மனிதன் உயிரோடிருக்கும் காலத்தில் ஞானம் பெற்றுத் தன் உடலை உதறிவிட்ட பிறகும் அதே ஞானத்தோடு வாழக்கூடிய தகுதி பெற்றுவிட்டால் அவன் யுக யுகங்களாக வாழ்ந்துக் கொண்டே இருக்கலாம். திருமூலர் திருமந்திரத்தில்,

"எண்ணிலி கோடி யுகமிருந்தேனே"[28]

என்று சொல்வதற்கு பொருள் இதுவாகத் தான் இருக்க முடியும். உடலிலுள்ள ஆன்மா, தான் வேண்டும் போது ஒரு உடலைத் தேடிக் கொள்ளவும் முடியும். வேண்டாத போது உதறிவிடவும் முடியும். அத்தகைய உயர்ந்த நிலையை அது அடைந்து விடுகிறது. எனவே, இத்தகு நிலைத் தான் திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் வாழக் காரணமாக இருக்க முடியும்.

திருவாவடுதுறையில் மூலன் உடலில் புகுந்ததற்கும், அவ்வுடல் வழி திருமந்திரம் மூன்றாயிரம் அருளியதற்கும் நந்தியம்பெருமான் அருளே முன்னின்றது எனப்படுகிறது.

''நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்
நந்தி அருளாலே மூலனை நாடினோம்
நந்தி அருளாவ தென்திசையும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நானிருந் தேனே''[29]

### 1.14.1.3 தன் நிலையை உணர்த்துதல்

மூலன் எழுந்ததைக் கண்ட பசுக்கள் மகிழ்ந்து அன்பினால் அவரது உடலினை நக்கி, மோந்து, களிப்போடு துள்ளிக் குதித்தன. அங்கு மேய்ந்த அப்பசுக்கள் சாத்தனூரை நோக்கி நடந்தன. அவற்றைத் தொடர்ந்து சென்ற சிவயோகியார் பசுக்கள் தத்தம் வீடுகளுக்குச் சென்றதைக் கண்டார். அதே சமயம் வீட்டிலிருந்து வெளியே வந்த மூலனின் மனைவி, மூலன் வடிவத்தில் இருந்த சிவயோகியரை வீட்டிற்குள் அழைத்தாள். திருமூலரோ தான் அவளுடைய கணவன் அல்லன் என்றும், அவன் இறந்து விட்டான் என்றும் கூறினார். அவள் அவ்வூர் பெரியவர்களிடம் முறையிடவும், மூலன் தான் ஏற்றிருந்த உடலிலிருந்து விலகி தான் ஒரு சிவயோகியார் என்பதை நிருபித்தார். பிறகு மீண்டும் மூலனின் உடம்பில் புகுந்தார். அவர் தன் உடலைத் தேடிச் சென்று அது கிடைக்காததால் மூலனின் உடலிலேயே தங்கி தனது பயணத்தை தொடர்ந்தார். இதுவே மூலன் திருமூலரான வரலாறு ஆகும்.

### 1.24.1.4 திருமந்திரம்

திருமூலர் திருவாவடுதுறைத் திருக்கோயிலை அடைந்து, 'திருமந்திரம்' என்னும் நூலை ஓராண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் பாடல்களைப் பாடி அருளினார். இவரது வரலாற்றை சேக்கிழார் பெரிய புராணத்தில் விரிவாகக் கூறியுள்ளார். திருமூலரின் 16 சீடர்களில் காலங்கி சித்தரும் முக்கியமனவராகக் கருதப்படுகிறார். பாண்டிய மன்னனின் ஆணைப்படி, திருமூலர் சமாதியை மூலவராகக் கொண்டு, கருவூரார் சிதம்பரம் கோயிலை அமைத்தார்.

### 1.14.1.5 மரணமிலாப் பெருவாழ்வு

சித்தர்கள் காலங்கடந்து வாழ்ந்துள்ளனர். திருமூலர் தனது பாடலில், பல கோடி யுகம் வாழ்ந்த செய்தியினைக் குறிப்பிடுகிறார். இவரது திருமந்திரத்தில்,

"இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி"[30]

### 1.14.2 போகர்

அகத்திய முனிவர், போக சித்தரை சீன தேசத்தவர் என்று கூறுகிறார். புலிப்பாணியின் குரு என்றும், இவருடைய தாய் தந்தையர் சீனாவில் பெண்களுக்குத் துணி வெளுத்துக் கொடுத்துப் பிழைத்து வந்தனர் என்றும் கூறப்படுகிறது. பழனி, தண்டாயுதபாணி கோயிலில், நவபாஷாணத்தில் மூலவர் சிலையைச் செய்தார். இந்த உலகில் நடைபெறும் தீய செயல்களை எல்லாம், அந்த நவபாஷாணச் சிலை ஏற்றுக் கொண்டு, நன்மையை வெளியிடுவதாக மக்கள் நம்பிக்கை கொள்கின்றனர். அந்தந்த கிரகங்களின் தன்மைகளைக் கொண்ட நவபாஷாணங்கள் மூலம் சிலை செய்து, அத்தனையையும் ஒரே இடத்தில் அடக்கி வைத்தவர்., மேலும் இந்தச் சிலையை வணங்கினால் நவகோள்களின் அருளையும் பெற முடியும் என்கின்றனர்.

### 1.14.2.1 போகர் ஏழாயிரம்

போகர் ஏழாயிரத்தில் அவரே தம்மைப் பற்றிக் கூறுகையில்,

"உரைத்தோமே எந்தனிட சாதி மார்க்கம்
உத்தமனே விஸ்கவர்மன் என்னலாகும்
திரைத்ததொரு எந்தனது தலைமுறைதானப்பா
திரளான பதினெட்டுத் தலைமுறையே யாகும்"[31]

என்கிறார். தாம் விஸ்வகர்மா குலத்தில் பிறந்ததாகவும், தாம் பதினெட்டாவது தலைமுறை என்றும் போகர் கூறுகிறார். சித்தர்கள் பெற்ற கலையைக் கொண்டு, மக்கள் வாழ்க்கையை உயரச் செய்ய வேண்டும் என்று விரும்பினார். வாழத் தெரியாமல் வாழும் மனித சமுதாயத்துக்கு நல்ல வழிகாட்டியாக இருக்க வேண்டுமென்று விரும்பினார். இவரின் எண்ணத்தை மற்ற சித்தர்கள் எதிர்த்தனர். ஆனாலும் மனித குலத்தை நல்வழியில் வாழவைக்க வேண்டுமென்று ஆவல் கொண்டார். மூலிகை ரகசியங்களை, 'போகர் ஏழாயிரம்' என்ற நூலில் எழுதியுள்ளார்.

### 1.14.2.2 பேரின்ப நிலை

போகர் உலக வாழ்க்கையை வெறுத்துக் கானகம் சென்று காலங்கிநாதரைக் குருவாக ஏற்றுக் கொண்டு ஆன்மீகத்தில் இறங்கினார். குருவின் திருவருளால் அனைத்துக் கலைகளையும் கற்றுத் தேர்ந்தார். தன்னைப் போல் சிறந்த யோகி எவரும் இல்லை என்ற கர்வத்தோடு இருந்தார். சூட்சும வடிவில் இருந்த சித்தர்கள் தோன்றி தங்களுடைய ஆயிரங் காலத்து ஆனந்தத் தவமானது, போகரின் வருகையால் இடையூறு ஏற்படுவதாகக் கூறினார்கள். அப்போது தான் போகருக்கு தன்னுடைய நிலை புரிந்தது. அனைத்து சித்தர்களைப் போலத் தானும் பேரின்பம் பெற வேண்டுமென்று விரும்பினார். எனவே அவருக்கு சுமிர்தமணிப் பழம் என்ற தேவக் கனியை சித்தர்கள் வழங்கினார்கள். இந்தப் பழத்தைச் சாப்பிட்டால் ஆயுள் முழுக்க பசிக்காது, நரைக்காது, இளமை நீடிக்கும் என்று சொல்லி, அதை அவரிடம் கொடுத்தனர். அவ்வாறாக போகர் அக்கனியை உண்டு பசி, தாகம், மூப்பு மூன்றையும் வெற்றி கொண்டார்.

### 1.14.2.3 மூலிகைகளின் இரகசியம்

போகர் சஞ்சிவி மூலிகையையும், அதன் சிறப்பையும் மனித குலத்துக்கு தெரிவிக்க விரும்பினார். அந்த மூலிகை எவர் கைகளிலும் எளிதில் கிடைக்காது. அதனை தம்பணா மந்திரத்தினால் கட்டுப்படுத்தி, அதன் தன்மையையும் எழுதி வைத்தார். சிவபெருமான், போகர் எழுதியவைகளை, மனதை ஒருமுகப்படுத்தியவர்களால் மட்டுமே காண முடியும் எனக் கூறி இவருக்கு ஆசி வழங்கினார்.

### 1.14.2.4 நவபாஷாண சிலை

இவர் சீன மொழியில் பல நூல்களை இயற்றியுள்ளார். இவர் பழனி மலையில் கடும் தவம் இயற்றி, முருகனின் அருளைப் பெற்றார். அப்போது முருகப் பெருமான் போகரிடம், பழனி மலையில் தன்னை மூலவராக நவபாஷாணம் எனப்படும் ஒன்பது வகையான கூட்டுப் பொருளைக் கொண்டு பிரதிஷ்டை செய்யுமாறு வேண்டிக் கொண்டார்., இறைவனின் விருப்பப்படியே செய்தார். பிறகு, மூலவர் சிலையில் அபிசேகம் செய்த பஞ்சாமிர்தத்தை உட்கொண்டார். நவபாஷாண மூர்த்தியான திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரனை உருவாக்கியவரும் இவரே ஆவார். இவர் பழனி மலையில் சமாதியாகியுள்ளார்.

### 1.14.3 கருவூரார்

> ‘‘சீரான கருவூரார் பிறந்த நேர்மை
>
> தேற்றமுன் கருவூரார் எனலாமே’’[32]

சைவத்திருமுறைகளில் -9ஆம் திருமுறையில் கருவூரார் பாடி இருப்பதாகக் காண்ப்படும் பத்து பதிகங்களில் மூன்றாவது நீங்கலாக மற்ற பதிகங்களின் இறுதியிலும் தன்னைக் கருவூரான், கருவூரானேன் என்றே குறிப்பிட்டுள்ளார். கருவூரில் பிறந்தததாலே கருவூரார் என்று அழைக்கப்பட்டார்.

போகமுனி அருளால் வந்த பாலன்'' என்றும், ''காயகல்ப முறையைப் பயன்படுத்தி நீண்டகாலம் வாழ்ந்தவர்'' என்றும் கூறப்படுகிறது. சித்தர்கள் வரலாறுகளை ஊன்றிப் பார்க்கும் போது இவர் கி.பி -5ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரை சுமார் 700 ஆண்டுகள் வாழ்ந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது.

இவர் சோழ நாட்டின் கருவூரில் பிறந்தவர். இளம் வயதிலேயே ஆன்மீகத்தில் அதிக ஈடுபாடு உடையவர். போகரிடம் தன்னைச் சீடராக ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினார். அதற்கு அவர் அம்பாளை வணங்குமாறு கூறினார். அவ்வாறு அம்பாளை வணங்கி அனைத்து சித்துக்களையும் அறிந்து கொண்டார்.

### 1.14.3.1 சோழ மன்னரின் கட்டளை

ஒரு சமயம் சோழ மன்னர் இரணியவர்மன் தீர்த்தமாடிய குளத்தில் ஆடல்வல்லானின் அற்புத நடனத்தைக் காணும் பேறு பெற்றார். அந்த அதிசய உருவத்தை உலக மக்கள் அனைவரும் கண்டு ரசிக்கும் வண்ணம் தத்ரூப சிலையாக வடிக்க வேண்டும் என்று அவர் விரும்பினார். நாற்பத்தி எட்டு நாட்களில் சிலையைச் சொக்கத் தங்கத்தில் செய்து முடிக்க வேண்டும் என்று மன்னன் கட்டளை இட்டான். சொக்கத் தங்கத்தில் யாராலும் செய்து முடிக்க இயலாத நிலையில் போகரின் கட்டளைப்படி கருவூரார் அரசவைக்குள் நுழைந்தார். ஒரு மணி நேரத்திலேயே அந்த சிலையை செய்து முடித்தார்.

### 1.14.3.2 இறைவனுடன் கலந்து மறைதல்

அந்தச் சிலையானது சொக்கத் தங்கத்தில் செய்யப்படாதது கண்டு கோபமான மன்னன், கருவூராரைச் சிறையில் தள்ள உத்தரவிட்டான். அப்போது மன்னரின் கண் முன்னே தோன்றிய போகர், 'சொக்கத் தங்கத்தில் சிலை செய்தால், அது பார்ப்பவர்கள் கண்களைக் குருடாக்கிவிடும் என்பதால் தான் சிறிது செம்பும் மூலிகைகளும் சேர்த்துச் செய்து இருக்கிறார் அவரை உடனே விடுதலை செய்' என்று கட்டளை இட்டார். மன்னன் கருவூராரை வணங்கி வழிப்பட்டான். இவர் புகழ் மீது பொறாமை கொண்ட வேதியர்கள் பலர் அதிகமான

புகார்களைக் கூறினார்கள். அதிலிருந்து அவர் தப்பித்தார் எனவே அவர் மீது கோபம் கொண்ட வேதியர்கள் அவரை கொலை செய்யும் நோக்கத்தோடு துரத்தியதில் அவர் திரு ஆனிலையப்பர் கோயிலுக்குள் நுழைந்து கருவறையில் உள்ள சிவலிங்கத்தைத் தழுவினார். அப்படியே இறைவனுடன் கலந்து மறைந்து போனார்.

இவர் திருவிசைப்பா வாத காவியம், கருவூரார் வைத்தியம், கருவூரார் பூரண ஞானம் கருவூரார் சிவஞான போதம் போன்ற ஏராளமான நூல்களை எழுதியுள்ளார். இவர் சனீஸ்வர அம்சம் ஆவார் என்று அறியப்படுகிறது.

### 1.14.4 சட்டைமுனி

"கருதினான் சட்டைமுனி அனந்தங் கோடி
கருவாக அவன் குலந்தான் சேணியனாகும்"[33]

சட்டைமுனியின் தாய் தந்தையர் வேளாண் குடிமக்கள் என்றும், இவர் கோயில் வாசலில் நின்று யாசகம் பெற்றுத் தம் தாய் தந்தையரை காப்பற்றி வந்தார் என்றும், அமுத கலை ஞானத்தில் கூறப்படுகிறது.

இவர் சிறிது காலம் இல்லறத்தில் ஈடுபட்டு, பின்பு அதிலிருந்து விடுபடலானார். ஒரு நாள் கோவில் வாசலில் யாசகத்திற்காக நின்று கொண்டிருந்த போது வட நாட்டிலிருந்து வந்த சங்கு பூண்ட தவசியைக் கண்டார். சட்டைமுனியும் அவருடனேயே புறப்பட்டு விட்டார். அவரிடம் உபதேசம் பெற்றபடியே சட்டைமுனி பல இடங்களைச் சுற்றி வந்தார் என்று அகஸ்தியர் கூறுகின்றார்.

#### 1.14.4.1 சித்தர் நெறிகள்

சித்தர் நெறிகளை முழுவதும் கற்றுக் கொண்ட இவர், தான் கற்றுக் கொண்ட உண்மைகளை உலகம் முழுவதும் பரப்ப வேண்டுமென்று விரும்பினார். எனவே உலக நன்மைக்காக பல நூல்களை எழுதத் தொடங்கினார்.

“சித்தர்கள் தாம் எழுதும் நூல்களைத் தீயவர்கள் கற்றுக் கொண்டு தவறாக பயன்படுத்தி உலக மக்களுக்குக் கெடுதல் செய்து விடக்கூடாது என்பதற்காகப் பரிபாஷையிலேயே (மறைப்பு மொழி) எழுதுவது வழக்கம். ஆனால் சட்டைமுனி எல்லாவற்றையும் வெளிப்படையாகவே கொட்டி விட்டார்”[34] என்று சித்தர்கள் பலரும் சட்டைமுனியைக் கண்டித்தனர்.

### 1.14.4.2 கயிலாயக் கம்பளிச் சட்டைமுனி

“கயிலாயக் கம்பளிச் சட்டைமுனி” என்று இவர் அழைக்கப்படுவதிலிருந்து, சிவபெருமானோடு இவர் நெருங்கிய தொடர்பு உடையவர் என்றும், கயிலாயத்தின் குளிர்தாங்க முடியாமல் எப்பொழுதும் கம்பளிச் சட்டை அணிந்து கொண்டிருக்கும் பழக்கமுடையவராக இருக்கலாம் என்று போகர் தனது போகர் ஏழாயிரம் என்னும் பெரு நூலில் ஆறாவது காண்டத்தில் கூறியுள்ளார்.

“பாலனாம் சிங்களவ தேவதாசி
மகத்தான சிங்களவர் என்னலாகும்
சிலையான கோத்திரங்கள் பதினாலாகும்
சிற்பரனே கண்டநூல் அறிந்த மாட்டே”[35]

இவர் சிங்கள நாட்டைச் சேர்ந்தவர். ஆவணி மாதம் மிருகசீரிடம் நட்சத்திரம் மூன்றாம் நாளில் பிறந்தவர் என்று போக முனிவர், தமது சத்த காண்டத்தில் போகர் 7000 என்ற நூலில் கூறுகிறார்.

### 1.14.5 அகத்தியர்

அகத்தியர், மித்திரா – வருணர்களின் வீரியத்தில் தோன்றி ஒரு குடத்திலிருந்து பிறந்ததாகப் புராணம் கூறுகின்றது. அகத்தியர் வட நட்டிலிருந்து வந்தவர் என்றும், விந்திய மலையை கடந்து வந்தவர் என்றும் கூறப்படுகிறது. ஆரியப் படைகளால் அம்மலையை கடந்து வர முடியாத ஒரு கால கட்டத்தில் அகத்தியர் தெற்கே வந்தார். வாதாபி வில்வலன் சகோதரர்கள் விந்திய

மலைக்குத் தெற்கே அரசாண்ட மன்னர்களாக இருக்க வேண்டும், அகத்தியர் தன் மனைவி லோபா முத்திரைக்காக வில்வலனிடம் பொருள் பெற்றதாகக் கூறப்படுகிறது.

தாரகன் முதலிய அரக்கர்கள் உலகை வருத்த வந்தனர், அவர்களை அழிக்க இந்திரன், வாயு, அக்கினி ஆகியோர் பூமிக்கு வந்தனர். இவர்களைக் கண்ட அசுரர்கள் கடலுக்குள் ஒளிந்தார்கள். இந்திரனின் யோசனைப்படி அக்னி வாயுவுடன் கூடி பூமியில் விழுந்து அகத்தியராய் அவதரித்தார். குடத்திலிருந்து தோன்றியமையால் இவர் குடமுனி, கும்பயோகி என்னும் பெயர்களைப் பெற்றார்.

தேவர்களை வருத்திய அசுரர்கள் மீண்டும் வருத்த ஆரம்பித்தனர். இந்திரன் அவர்களை அழிக்க வரும் போது அசுரர்கள் கடலுக்குள் ஒளிந்துக் கொண்டனர். தேவேந்திரன் வேண்டுக்கோளுக்கிணங்க அகத்தியர் சமுத்திர நீர் முழுவதையும் குடித்து விட, இந்திரன் அசுரர்களை அழித்தார்.

அகத்தியர் நீரின் மேல் படுத்த படியே பனிரெண்டாண்டுகள் கடுந்தவமியற்றி அரிய சக்திகளைப் பெற்றார்.

### 1.14.5.1 அகத்தியம்

பன்னிருபடலப் பாயிரமாகக் கூறப்படும் செய்யுளொன்றில் அகத்தியமென்பது குறிக்கப்படுகின்றது.

ஆனாப் பெருமை அகத்தியன் என்றும்
அருந்தவ முனிவன் ஆக்கிய முதல்
பொருந்திக் கற்றுப் புரைய உணர்ந்தோன்
நல்லிசை நிறுத்த தொல்காப்பியனும்[36]

என்கிறார். அகத்தியம் முத்தமிழிலக்கணமும் அடங்கியதெனத் தெரிகின்றது.

### 1.14.5.2 அகத்தியர் நிகழ்த்திய அற்புதங்கள்

கயிலையில் நடந்த சிவபெருமானின் திருமணத்தின் போது வட திசை தாழ்ந்து தென்திசை உயர்ந்தது. அதனால் அகத்தியரை தென்திசைச் செல்லுமாறு

சிவபெருமான் கட்டளையிட்டார். இறைவனின் விருப்பம் போலவே அகத்தியரும் செய்து முடித்தார். மேருமலைக்கு செல்ல வழிவிடாமல் நின்ற விந்திய மலை அகத்தியரை கண்டதும் பணிந்து தாழ்ந்து நின்றது. தான் தென்திசையில் சென்று வரும் வரை பணிந்து இருப்பாயாக என்று கூறிச் சென்ற அகத்தியர் மீண்டும் வடதிசை செல்லாததால் விந்திய மலையும் உயரவில்லை என்ற கருத்து நிலவுகிறது.

சுவேதேன் என்பவன் பிணந்தின்னுமாறு பெற்றிருந்த சாபத்தை போக்கினார் என்பர். தமக்கு வழிபாடு செய்யாது யோகத்தில் அமர்ந்திருந்த இந்திரதுய்மன் என்பவனை யானையாகுமாறு சபித்தார். இவர் விதர்ப்ப நாட்டை அடைந்து அவ்வரசன் மகள் உலோபமுத்திரையை மணந்து தென்புலத்தார் கடனைத் தீர்த்தார். தென்திசைக்கு வந்த அகத்தியர் பொதிகைமலையில் தங்கி முருகக்கடவுளின் ஆணைப்படி ‘‘அகத்தியம்’’ என்ற நூலை இயற்றினார். தூங்கெயிலெறிந்த தொடித்தொட் செம்பியன் காலத்தில் காவிரிப் பூம்பட்டினத்தில் இந்திர விழாவை எடுத்தார். புதுச்சேரிக்கு அருகில் உள்ள ‘‘உழவர் கரையில் ஆசிரமம் அமைத்து வேதபுரி பல்கலைக்கழகத்தில் தமிழைப் போதித்தார். அவர் தங்கியிருந்த பகுதி ‘‘அகத்தீஸ்வரம்’’ என்று அழைக்கப்படுகிறது.’’[37] கும்பகோணத்தில் உள்ள கும்பேசுவரர் கோவிலில் இவர் சமாதி அடைந்ததாக கூறுவர்.

### 1.14.6 பாம்பாட்டி சித்தர்

படையையும் நடுங்கச் செய்யும் பாம்பினை ஆட்டி வைப்பவர் என்பதால், இவர் பாம்பாட்டி சித்தர் எனப்பட்டார். கர்மப்படி ஜோசியராய்ப் பிறந்து பாம்பு பிடித்து அதை ஆட்டி வைப்பது, அதோடு விளையாடுவது இவற்றில் எல்லாம் அதிசிறந்தவராகத் திகழ்ந்தார். பாம்புகளைப் பிடிப்பதும் அவற்றைப் படமெடுத்து ஆடச் செய்து வேடிக்கை காட்டுவதே இவர் தொழில் எனலாம். எவ்வளவு பெரிய பாம்பானாலும், எத்தனைக் கொடிய நாகமானாலும் சரி பிடித்து விடுவார்.

அவற்றின் விஷத்தைக் கக்க வைத்துச் சாதரணமான தண்ணிர்ப் பாம்புபோல் அவற்றை ஆக்கிவிடுவார். விஷத்தை முறிக்கும் மூலிகைகளை எல்லாம் நன்கு தெரிந்து வைத்திருந்த விஷ வைத்திய ஆராய்ச்சியாளர் என்றே இவரைக் கூறலாம்.

### 1.14.6.1 குண்டலினி சக்தியை இயக்குதல்

ஒரு நாள் மலைமேல் இருந்த பெரிய நவரத்தினப் பாம்பைப் பிடிக்க முயன்று புற்றுக்குள் கையை விட்டார். உள்ளே ஒரு முனிவர் தவம் இயற்றிக் கொண்டிருந்ததைக் கண்டு அதிர்ச்சி அடைந்த்தார். நிஷ்டையில் இருந்து வெளிவந்த சட்டை முனி, பாம்பாட்டிச்சித்தருக்கு உபதேசம் செய்தார். மூலாதாரத்தில் இருக்கும் குண்டலினியை உறங்கிக் கிடக்கும் பாம்பு என்று சித்தர்கள் சொல்வர். இந்தக் குண்டலினி சக்தியானது சுழிமுனை நோக்கி ஏறுவதே பாம்பு புற்றில் இருந்து ஏறுவது போல எனக் குறியீடாகச் சொல்லுவார். இதையே கருத்தாகக் கொண்டு பல பாடல்கள் பாடியுள்ளார். பாம்பாட்டி சித்தர் பாடல், ‘சித்தர்ஆருடம்’, ‘பாம்பாட்டி சித்தர் வைத்தியம்’ போன்ற நுல்களை எழுதியுள்ளார்.

“இருவர்மண் சேர்த்திட ஒருவர் பண்ண
ஈரைந்து மாதமாய் வைத்த சூளை
அருமையாய் இருப்பினும் அந்த சூளை
அரைக் காசுக்கு ஆகாதென்று ஆடுபாம்பே”[38]

என மனித உடலில் நிலையற்ற தன்மையை அனைவரும் வியப்புறும் படி பாடியவர் தான் பாம்பாட்டி சித்தர். நவக்கிரகங்களில் ராகு பகவானைப் பிரதிபலிப்பவர். இவரை முறைப்படி வழிப்பட்டால் நாகதோஷம் அகலும். சாதகத்தில் ராகு பகவானால் ஏற்படக் கூடிய களத்திர தோஷம் நீங்கும் என்பர்.

### 1.14.7 இடைக்காட்டுச் சித்தர்

தொண்டை மண்டலத்தில் இராமநாதபுரம் செல்லும் வழியில் உள்ள, இடையன்மேடு என்ற கிராமத்தில் ஆடுகளை மேய்த்துக் கொண்டே காலம் கழித்தவர். ஆடுகளை மேய விட்டுவிட்டு, சிந்தித்தபடி காலம் தள்ளுவார்.

#### 1.14.7.1 போகரின் உபதேசம்

ஒரு நாள் ஆடு ஒன்று பள்ளத்தில் விழுந்து காயம் பட்டு இரத்தம் பெருகுவதைக் கண்டு கடும் வருத்தத்தில் ஆழ்ந்தார். அப்போது வான் வழியே சென்று கொண்டிருந்த போகர் இதனை கண்டு மகிழ்ந்தார். உடனே மனம் மகிழ்ந்த சித்தர், இடைக்காடருக்கு வைத்தியம், சோதிடம், ஞானம், யோகம் முதலியவற்றை உபதேசித்துச் சென்றார். அன்று முதல் இவர் இடைக்காட்டுச் சித்தர் ஆனார்.

#### 1.14.7.2 நவக்கிரகங்களை வியக்க வைத்த சித்தர்

தனது சோதிடத் திறமையால் இன்னும் சிறிது காலத்தில் பனிரெண்டு வருடங்களில் பெரும் பஞ்சம் வரப் போவதை அறிந்தார். உடனே முன்னெச்சரிக்கையாகப் பஞ்சத்திலும் கிடைக்கக்கூடிய எருக்கிலை போன்றவற்றை தன் ஆடுகளுக்குப் பழக்கினார். கெடாமல் இருக்கக்கூடிய குறுகுவரகு தானியத்தைச் சேற்றோடு கலந்து குடிசைக்குச் சுவர் எழுப்பினார். இடைக்காடர் எதிபார்த்தப்படியே பஞ்சம் வந்தது. உயிரினங்களும் புல், பூண்டுகளும் அழிந்தன. எருக்கிலை போன்ற அழியாத தாவரங்களை இடைக்காடரின் ஆடுகள் தின்று உயிர் வாழ்ந்தன. அதனைத் தின்றதால் ஏற்பட்ட தினவைப் போக்க ஆடுகள் சுவரில் முதுகைத் தேய்க்கும். அப்பொழுது உதிரும் குறுவரகை ஆட்டுப் பாலில் காய்ச்சி உண்டு உயிர் வாழ்ந்தார். அதைக் கண்டு வியந்த நவக்கிரகங்கள் இடைக்காடரைக் காண வந்தனர்.

### 1.14.7.3 இடைக்காட்டு சித்தரின் அறிவுத்திறன்

அவர் மிகவும் மகிழ்ந்து ஆட்டுப் பாலையும் வரகு சாதத்தையும் அவர்களுக்கு வழங்கினார். அவர்களிடம், உலக மக்கள் நன்மைக்காக மழை பொழிய வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். அதன் படியே வானம் இருண்டு மழை பொழிந்தது. ஆறுகளும் ஏரிகளும் நிரம்பின. நாட்டின் பஞ்சத்தை நீக்கிய சித்தரின் அறிவுத்திறனைக் கண்டு வியந்து மக்கள் அனைவரும் பாராட்டினார்கள். இவர் நெடுங்காலம் வாழ்ந்து வருடாதி நூல்கள், மருத்துவ நூல்கள், பல தத்துவப் பாடல்களை எழுதினார்.

இவர் பாடல்களில் கோனே, கோனாரே, தாண்டவக் கோனே என்னும் சொற்கள் அதிகளவில் பயன்படுத்தப் பட்டிருக்கும்.

> “மனமென்னும் மாடு அடங்கினால் தாண்டவக்கோனே-
> முக்தி வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக்கோனே
> சினமென்னும் பாம்பு இறந்தால் தாண்டவக்கோனே
> சித்தியென்றெ நினையேடா தாண்டவக்கோனே”[39]

என்று பல பாடல்கள் பாடியுள்ளார். மனம்தான் எல்லாத் துன்பங்களுக்கும் இன்பங்களுக்கும் காரணம் ஆசை, பொறாமை, சினம் முதலான குற்றங்கள் அடங்கப் பெற்றால் ஆன்மா முக்தி பெறும் என்று தாண்டவகோன் என்பவனைப் பார்த்து பாடியிருக்கின்றார். இறைவன் தன் நினைப்பு வல்லமையால் உலகைப் படைக்கின்றான். ஆகையால் உறுதியான உள்ளம் பெற்றோர் எதையும் சாதிக்க முடியும் அறிவால் அஞ்ஞானத்தை ஒழிக்க முடியும். அருள் நெறியில் நிற்பதே சிறந்த அறிவு. அதுவே ஞான விளக்கு என்கிறார். இத்தகு உண்மைகளையே இடைக்காட்டுச் சித்தர் தமது பாடல்களின் மூலம் விளக்கியுள்ளார். இடைக்காடர் மக்களின் அறிவைத் தட்டி எழுப்புகின்றார். இவர் திருவண்ணாமலையில் சமாதி அடைந்துள்ளார்.

### 1.14.8 மச்சமுனி சித்தர்

மச்சமுனி, மச்சேந்திரர் என்று பல பெயர்களால் அழைக்கப்படுபவர். தலையில் சடைமுடியுடன் உடம்பெல்லாம் விபூதி பூசிக் கொண்டு கையில் ஒரு பிரம்புத்தடியுடன் இருந்ததால் சடைசாமி, விபூதி சாமி, பிரம்பு சாமி என்றும் அழைப்பார்கள்.

#### 1.14.8.1 சித்தரின் அவதார வரலாறு

ஒரு சமயம், கடற்கரையோரத்தில், சிவபெருமான் உமையம்மைக்குத் தாரக மந்திரத்தை உபதேசித்துக் கொண்டிருந்தார். உபதேசத்தைக் கேட்டுக் கொண்டு இருக்கையிலேயே அம்மைக்கு உறக்கம் வந்து விட்டது. ஆனால் அக்கடலில் வசித்த மீன் ஒன்றின் வயிற்றில் இருந்த்த கருவானது, இம்மந்த்திரத்தை முழுமையாக உள்வாங்கிக் கொண்டது. பிறகு வெளியே வந்த அந்த மீன் வயிற்றுப் பிள்ளைக்கு சிவபெருமான், மச்சர் என்று பெயர் கொடுத்தார்.இதுதான் மச்சமுனி சித்தரின் அவதார வரலாறு ஆகும்.

#### 1.14.8.2 தவ வலிமை

பிறக்கும் போதே சிவபெருமானின் உபதேசத்தோடு பிறந்தவர் என்பதால், மச்சமுனிக்கு தவயோகம் தானாகவே நேர்ந்தது என்பர். இவர் நீண்ட நெடுங்காலம் தவம் மேற்கொண்டு, அட்டமா சித்துகள் அனைத்தும் கைவரப் பெற்றார்.

#### 1.14.8.3 சித்தரின் நூல்கள்

இவர் இரசவாத வித்தை வைத்தியம், வாத நிகண்டுகள் உள்ளிட்ட பல நூல்களை இயற்றியுள்ளார். மச்சமுனியைக் குருவாகக் கொண்ட கோரக்கரும் சித்திகள் பல அடைந்து சிறப்பு பெற்றனர். இவர் மச்சமுனி சூத்திரம், மச்சமுனி பெருநூல் காவியம், மச்சமுனி வைத்தியம்

மச்சமுனி கடைக்காண்டம் போன்ற நூல்களை இயற்றியுள்ளார். இவர் திருப்பரங்குன்றத்தில் சமாதி அடைந்ததாகக் கூறுவர். இவரை வணங்கினால்

குழந்தைப் பேறு கிடைக்கும். கல்வி ஞானமும், கேள்வி ஞானமும் பெருகும் எனப்படுகிறது.

### 1.14.9 சுந்தரானந்த சித்தர்

இவர் மிகவும் அழகான தோற்றத்தை உடையவர் என்பதால் சுந்தரானந்தர் என்று அழைக்கப்பட்டார். இவருக்கு வல்லப சித்தர் என்ற பெயரும் உண்டு. இவர் தனது இளமைக் காலத்தில் பெற்றோர் விருப்பப்படி இல்லற வாழ்வை மேற்கொண்டார் என்றும், சட்டைமுனி சித்தரால் ஆட்கொள்ளப்பட்டார் என்றும் கூறப்படுகிறது. இவர் அகத்தியர் பூசித்த லிங்கத்தை வாங்கி அதைச் சதுரகிரியில் ப்ரதிஷ்டை செய்து வழிப்பட்டுள்ளார் எனப்படுகிறது.

#### 1.14.9.1 சித்த சாகசங்கள்

இவர் சித்து விளையாட்டில் ஈடு இணையற்றவராக திகழ்ந்தவர். இவரது புகழ் பெருமளவுக்குப் பரவி இருந்தது. இவர் சித்து விளையாட்டை காண விரும்பிய பாண்டிய மன்னனிடம் அதிகாரச் செருக்கு இருந்தது. அதனால் சுந்தரானந்தரை அழைத்து வரும்படி மன்னன் சேவகர்களிடம் கட்டளை இட்டார்., சேவகர்கள் அவரை அழைத்து செல்ல வந்த போது, அவர்களிடம் மறுப்பு சொல்லி விட்டார். அதனைக் கேட்ட மன்னன் முதலில் ஆத்திரமடைந்தான்., பின்பு சுந்தரானந்தார் வார்த்தைகளையே அசை போட்டுக் கொண்டிருந்தான். ஒரு நாள் ஆலவாய் அழகன் திருக்கோயிலுக்குள் மன்னன் சென்ற சமயம், சுந்தரானந்தரும் ஆலயத்துக்குள் வந்தார். மன்னனும் சித்தரும் நேருக்கு நேராக சந்தித்துக் கொண்டனர். தாங்கள், தான் மாயங்கள் நிகழ்த்தும் அந்த மாயாவியோ, என்று அபிஷேக பாண்டியனே கேள்வியைக் கேட்டான் .மாயங்கள் அற்பமானவை. சித்த சாகசங்கள் ஐம்புலனைச் சுருக்கி உள்ளொளியைப் பெருக்கிப் பஞ்சபூதங்களை உணர்ந்து பிரபஞ்ச நியதி அறிந்து அதற்கேற்ப செயல்படுத்தப்படுபவை. முயன்றால் நீயும் இதைச் சாதிக்கலாம் என்றார், அதைக் கேட்ட மன்னன் ஒரு கணம் யோசித்தான்.

### 1.14.9.2 கல் யானயை உயிர்ப்பித்தல்

தவசீலரே, நீங்கள் சொல்வது உண்மையென்றால், இந்த கல் யானயை உயிர் யானையாக்குங்கள் பார்ப்போம் என்றார். சுந்தரானந்தர் முகத்தில் புன்னகையுடன் யானையை ஒரு பார்வை பார்த்த போது, யானைக்கு உயிர் வந்தது. பாண்டியன் பரிவாரத்திலிருந்த ஒருவன் கையில் வைத்திருந்த கரும்பைப் பற்றி, அந்த யானை உண்ணவும் தொடங்கியது. அபிஷேக பாண்டியன் தன் கண்களையே நம்பாமல் கசக்கி விட்டுக் கொள்ள, முழுக்கரும்பையும் சாறொழுகத் தின்ற அந்த யானை தும்பிக்கையை அசைத்து அரசனின் கழுத்து முத்து மாலையையும் எட்டிப் பறித்தது. பாண்டியன் ஆடிப் போனான். அப்படியே சுந்தரனந்தர் பாதத்தில் விழுந்து கண்ணீர் விட்டான். பரவசத்தில் சிலிர்த்தான். தனக்கு வம்சம் விளங்கப் பிள்ளைப்பேறு வேண்டினான் பாண்டியன். அவ்வாறே அருளினார் இறைமுனி, யானையும் பறித்த முத்து மாலையைத் திரும்பக் கழுத்தில் சூட்டி மீண்டும் கல்லாகி நின்றது. தவசக்தி எத்தகையது என்று நிரூபித்துவிட்ட பூரிப்புடன் மறைந்தார் சுந்தரனாரந்தர்.

அன்று நேரில் வந்த அந்த சிவம், இன்றும் மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத்தில் சுந்தரேஸ்வரர் சன்னதி கல் யானைக்கு அருகிலேயே கோவில் கொண்டு அமர்ந்துள்ளது. இவர் மதுரை ஸ்ரீ மீனாட்சி அம்மன் கோவிலில் சித்தராகச் சமாதியில் இருக்கிறார். இவர் சுந்தரானந்தர் காவியம், சுந்தரானந்தர் விஷ நிவாரணி, சுந்தரானந்தர் கேசரி போன்ற பல நூல்களை எழுதி உள்ளார். மேலும் பயிர் தொழில் சம்பந்தப்பட்ட சில நுணுக்கமான விஷயங்களையும் ஆருடங்களையும் கூறியுள்ளார். சுந்தரானந்த சித்தரை வழிபட்டால், வேலை இல்லாதவர்களுக்கு வேலை கிடைக்கும். கொடுக்கல்,வாங்கல் பிரச்சினை ஏற்படாது .வயிறு, குடல் சம்பந்தப்பட்ட நோய்கள் நீங்கும். புத்திர பாக்கியம் உண்டாகும். வறுமை அகன்று வளமான வாழ்வு அமையும் எனப்படுகிறது.

### 1.14.10 தன்வந்திரி சித்தர்

தேவர்களும் அசுரர்களும் அமுதத்திற்காகத் திருப்பாற் கடலைக் கடைந்த போது அமுத கலசத்துடன் தோன்றியவர் தன்வந்திரி சித்தர் ஆவார். இவர் விஷ்ணுவின் அம்சம் என்பர்.

"சட்டமுடன் தன்வந்திரி ஜாதிபேதம்
தகைமையுள்ள மஹாவிஷ்ணு என்னலாகும்
வட்டமுள்ள தலைமுறைகள் முப்பத்திரண்டு
வளமுடன் கண்டறிந்த நூலிதாமே"[40]

என்று போக முனிவர் சத்த காண்டத்தில் கூறுகிறார். வேறொரு வரலாற்றில் இவர் அனு என்ற அரசனின் மகனாகப் பிறந்து பரத்வாசரிடம் ஆயுள் வேதங் கற்று அதை எட்டு வகையாகப் பிரித்துத் தமது மாணவர்களுக்கு உபதேசித்தார் எனப்படுகிறது. மேலும் இவர் விஷ்ணு பகவானே என்றும் அவர் உலக நன்மைக்காக மானிடராகப் பிறந்தார் என்று அகஸ்தியர் பனிரெண்டாயிரத்தில் கூறப்படுகிறது.

#### 1.14.10.1 ஆயுர் வேதத்தின் தந்தை

சித்தர்கள் பதினெட்டுப் பேருமே இவருக்கு மூன்று லட்சம் கிரந்தங்களையும் உபதேசித்தார்கள். கல்வியால் பெற்ற ஞானத்தால் தன்வந்திரி சூரியன் போல் பிரகாசித்தார் என்று அகத்தியர் கூறுகிறார். ஆயுர் வேதத்தின் தந்தை என்று கருதப்படும் தன்வந்திரி வடமொழியில் பல நூல்களைச் செய்துள்ளார்.

தமிழில் இவர் இயற்றிய நூல்கள்

வைத்திய சிந்தாமணி 1200
வைத்திய காவியம் 1000
நாலுகாண்ட 800
நிகண்டு 300
வைத்தியம் 208

தண்டகம் 140

கலை ஞானம் 500

தைலம் 500

சிமிட்டுரத்தினச்சுருக்கம் 360

கருக்கிடை 300

என்பன போன்ற நூல்கள் எழுதியுள்ளார். இவர் வைத்தீசுவரன் கோவிலில் சமாதி அடைந்ததாகக் கூறுவர்.

### 1.14.11 வால்மீக சித்தர்

“தேற்றமுடன் வால்மீகர் என்ற சித்து
தெளிவாக மார்க்கமது சொல்வேன் பாரீர்
மாற்றமயம் நீக்கியல்லோ வையகத்தில்
வளமையுடன் வெகு காலம் இருந்த சித்து
ஆற்றலுடன் வால்மீகி ராமாயணத்தை
அவனிதனில் மாந்தருக்குச் செய்திட்டாரே”[41]

வேடர்குலத்தைச் சேர்ந்த இவர் புரட்டாசித் திங்கள் அனு நட்சத்திரத்தின் நான்காம் பாதத்தில் விருச்சிக ராசியில் பிறந்தவர். இவர் தூய தமிழ்ப் பண்டிதராய் விளங்கியவர், இராமயணத்தை தமிழில் பாடியவர் என்ற உண்மைகள் போகர் பாடல்களில் காணப்படுகின்றது.

#### 1.14.11.1 தமிழின் முதல் இராமாயணம்

வால்மீகர் பல சிவத்தலங்களுக்குச் சென்று சித்தர் நெறியைப் பரப்பியதுடன் சிவவழிபாடு செய்து கொண்டு பாமர மக்களின் மனநோய்களையும் உடற்பிணிகளையும் போக்கி வந்தார். இந்தத் திருத்தல யாத்திரையில் ஒரு சிற்றூருக்குச் சென்று அங்கு கோவில் கொண்டுள்ள மருந்தீஸ்வரரை வழிபட்டார். அப்போது சிவப்பரம்பொருள் அவர்முன் தோன்றி வால்மீகரே, நீவிர் வடமொழியில் உள்ள வால்மீகி இராமாயணத்தைத் தமிழில் பாடும் என்று ஆணையிட சித்தர்

இராமாயணத்தை அழகு தமிழில் பாடினார். இதுவே தமிழில் பாடப்பட்ட முதல் இராமயணமாகும்.

இவர் ஆதிகால சித்தர்களுக்கே வழிகாட்டியாய் இருந்திருக்கிறார் என்பதை இவரது சூத்திர ஞனப்பாடல்கள் மூலம் அறியலாம். 16 பாடல்களைக் கொண்ட அந்த சூத்திரப் பாமாலை ‘வால்மீக சூத்திரம் பதினாறு’ என்ற பெயரில் விளங்கி வருகிறது. இப்பாடல்கள் பதினெண் சித்தர்கள் பாடல்களுக்கெல்லாம் திறவுகோலாய் உள்ளது. இந்நூல் உண்மையான ஞான மார்க்கம் எது என்பதை எல்லோரும் எளிதில் புரிந்துகொள்ளும் வண்ணம் மிக எளிமையாக விளக்கிக் கூறியுள்ளது எனலாம்.

### 1.14.12 பதஞ்சலி முனிவர்

“உண்மையென்ற குண்டலினியே பிராண வாய்வு
ஓங்கார பிண்டத்தி லுதித்த வான்மா
மென்மையென்ற வாகாசத் திருந்த வாறும்
மேலழுத்துங் கீழ்எழுத்துமானவாறும்
தன்மையென்ற விந்துவிலே நின்ற வாறும்
சாஸ்திர விதஞ் சாகரத்திற் சார்ந்தவாறும்
கன்மையென்ற சிங்கு வங்கில் நிறைந்த வாறும்
கண்மூக்கு மத்திலே கண்டு பாரே”[42]

ஞான சூத்திரம் 20ல் பத்தொன்பதாவது பாடலில் பதஞ்சலியார் இவ்வாறு பாடுகிறார்.

வடமொழியில் மஹா பாஷ்யம் இயற்றிய பதஞ்சலி வேறு. யோக சூத்திரம் எழுதிய பதஞ்சலி வேறு என்று அங்கேயே கூறுபோடுகிறவர்கள் தமிழ் பாடிய பதஞ்சலியும் அவரே தான் என்று ஒப்புக் கொள்ளார். சித்தர்களின் இயல்பும் அவர்கள் காலம் கடந்து பல நூற்றாண்டுகள் வாழும் ஆற்றல் பெற்றிருந்தார்கள் என்பதும் அறியாதவர்களாதலால் சித்தர்கள் வாழ்ந்த காலம், அவர்களுடைய

ஆயுட்காலம் போன்றவை பற்றி எந்த முடிவுக்கும் வரமுடியாது. இன்றைய சூழ்நிலையில் எதையும் தக்க சான்றுடன் மெய்ப்பித்துக் காட்டுவதென்பதும் இயலாத காரியம். பதஞ்சலியும், வியாக்ர பாதரும் நீண்ட காலம் தமிழ்நாட்டில் வாழ்ந்தவர்கள். அவர்கள் திருமூலருடன் ஒன்றாகத் தில்லையில் நடனம் கண்டார்கள் என்பதைத் திருமூலரே கூறுகிறார். அவர்கள் முக்தியடைந்ததும் இராமேசுரத்தில், எனவே அவர்கள் தமிழில் பாடியிருக்க முடியாது என்று கூறுவது அறிவீனம் என்றே கருதப்படுகிறது.

இவர் ஆதிசேடனின் அம்சம் அல்லது அவதாரம் தன்மேல் பள்ளி கொண்டிருந்த விஷ்ணு சிவதாண்டவம் கண்டதை நினைந்துப் புளகிதமடைந்து புரள அந்தபாரம் தாங்க முடியாமல் காரணம் கேட்டு அறிந்து, தானும் சிவ தாண்டவம் காண்பதற்காகக் கயிலையில் தவம் செய்ய இறைவன் தோன்றித் தில்லையில் அவருக்கும் வியாக்ரமருக்கும் காணும் பேற்றினை அளிப்பதாகக் கூறினார். இவர் தில்லை வனத்திலேயே நெடுநாள் தங்கிருந்தார். ராஜசபை என்னும் ஆயிரங்கால் மண்டபத்தில் அமர்ந்து தாம் இயற்றிய வியாகரண சூத்திரம் என்ற நூலைச் சீடர்களுக்கு நேரிலேயே உபதேசிக்க வேணடும் என்ற எண்ணம் உண்டாயிற்று. ஆனால் ஆதிசேடனாகிய தம் மூச்சுக் காற்று பட்டாலே சீடர்கள் எரிந்து சாம்பலாகப் போய் விடுவார்களே என்று அஞ்சினார்கள் .அதனால் நடுவில் ஒருகனமான திரையைப் போட்டுக் கொண்டு திரைக்குப் பின்னாலிருந்து உபதேசம் செய்யும் வழக்கத்தை ஏற்படுத்தினார். அறுபது சீடர்கள் அவரிடம் பயின்றனர். ஒருநாள் ஒரு சீடன் திடீரென்று திரையைப் பிடித்து இழுத்து விட்டான். அக்கணமே அத்தனை பேரும் சாம்பலாயினர். கௌடபாதர் என்ற ஒரு சீடர் மட்டும் உயிர் தப்பினார். இவர் இயற்றிய இரண்டு நூல்கள் தாமரை வெளியீடான யோக ஞான சாஸ்திரத் திரட்டு நான்காம் பாகத்தில் இடம் பெற்றுள்ளன.

### 1.14.13 நந்தீஸ்வரர்

தஞ்சை மாநகரை அடுத்துள்ள திருவையாறு என்ற திருத்தலத்தில் மகாதவ யோகியாகிய சிலாத முனிவரும் அவர் மனைவி சாருட்சனை என்ற சித்திரவதியும்

நல்லறமாம் இல்லறம் நடத்தி வந்ததனர். நீண்ட காலமாக அவர்களுக்கு மகப்பேறு இல்லாமல் தவித்தனர். ஒரு நாள் சப்தரிஷிகளும் அவருடைய ஆஸ்ரமத்திற்கு வந்தனர். முனிவர் அவர்களைத் தம் வீட்டில் உணவருந்திச் செல்லும்படி வேண்டினார். அந்த ரிஷிகள் எழுவரும் 'பிள்ளையில்லாத வீட்டில் உணவருந்தமாட்டோம்' என்று கூறிச் சென்றுவிட்டனர். அதனால் சிலாதர் திருவையாறு திருத்தலத்தில் உள்ள சூரிய புஷ்கரணியில் நீராடி பஞ்சாட்சர தவம் செய்து வந்தார். அவரது தவத்திற்கிரங்கிய சிவபெருமான் அவர்முன் தோன்றி, சிலாதரே விரைவில் உமக்கு கருவில் இருந்து பிறவாத திருமகன் ஒருவன் கிடைப்பான் மரணமில்லாத அத்திருமகன் எனக்குச் சமமானவன். என்னை தரிசிப்பவர்கள் யாவரும் அவனையும் வழிபடுவார்கள் என்று கூறி மறைந்தார். அக்கால முறைப்படி சிலாதர் யாகம் செய்ய பூமியைத் தோண்டியபோது பூமிக்கு அடியில் இருந்த நவரத்னம் பதித்த தங்கபெட்டி ஒன்று கிடைத்தது. பெட்டியைத் திறந்து பார்த்த போது அதில் பேரொளிமயமாக மான் மழுவேந்தி மதி சூடி முக்கண்ணன் திருவுருவைக் கண்டார். அப்போது அசரீரி ஒன்று 'பெட்டியை மூடித்திற' என்று கூற அவரும் அவ்வாறே செய்தார். அதனுள் அருள் ஒளி நிறைந்த ஆண் குழந்தை ஒன்று இருக்கக் கண்டார். நந்தி என்று பெயர் சூட்டி அக்குழந்தையை வளர்த்தார்.

குழந்தைக்கு வயது ஏழான போது சிலாதர் ஆஸ்ரமத்திற்கு வருகைதந்த மித்ரர், வருணர் ஆகிய இரு தேவர்களும் சிலாத முனிவரிடம் "முனிவரே உங்கள் மகனுக்கு ஆயுட்காலம் எட்டு ஆண்டுகள்தான்" என்று கூறி மறைந்தனர். இதைக் கேட்ட நந்தி சிலாதரைப் பார்த்து தந்தையே நீங்கள் கவலைப்படாதீர்கள். காலனான சர்வேஸ்வரன் திருவருளால் நான் நீண்டகாலம் வாழ்ந்திருப்பேன் எனக்கு தவம்புரிய அனுமதி கொடுங்கள் என்று கேட்டு தந்தையின் வாழ்த்தைப்பெற்று மரணமிலாப் பெருவாழ்வு வாழ கடுந்தவம் இயற்றத் தொடங்கினான்.

நந்திதேவர் சூரிய புஷ்கரணியில் கழுத்தளவு ஆழத்தில் நின்று கொண்டு கைகள் இரண்டையும் தலைக்கு மேல் தூக்கிக கும்பிட்ட வண்ணம் ஒரு முறைக்கு ஒரு கோடி ஜபம் வீதம் எட்டுகோடி ஜபம் செய்துமுடித்து அழிவில்லாத வாழ்நாளைப் பெற்றதுடன், கயிலையிலேயே சிவத்தொண்டு செய்யும் காவலனாக எந்நாளும் இருக்கும் வாய்ப்பை பெற்றார்.

சிவசிந்தனையிலேயே இருக்கும் நந்தி தேவருக்கு சிவனாரே பூமிக்கு வந்து பெண் பார்த்து திருமணம் முடித்து வைத்தார். திருச்சிக்கு அருகில் உள்ள திருமழபாடியில் தவ வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கும் வசிஷ்டரின் பேத்தியாகிய சுயசையை மணமகளாகத் தேர்ந்தது நந்திக்கும் சுயசைக்கும் திருமழபாடி வைத்தியநாத சுவாமி திருக்கோவிலில் தேவர்களும் முனிவர்களும் வாழ்த்துரை வழங்கத் திருமணம் இனிதே நடைபெற்றது. சிவபக்தர்கள் யாவரும் தன்னை வழிபட்டுத் தன் அனுமதி பெற்றே சிவதரிசனம் செய்யவேண்டும் என்பதை விளக்கும் வண்ணம் எல்லா சிவன் கோவில்களிலும் சிவன் சன்னதிக்குப் புறத்தே இருந்து நந்தீஸ்வரர் அருளாட்சி செய்து வருகிறார்.

சிவபக்தர்கள் சிவபெருமானை வழிபட நந்திதேவர் துதிசெய்யும் முறை
வந்திறை அடியில் தாழும் வானவர் மகுடகோடி
பந்தியின் மணிகள் சித்த வேத்திரப்படையால்தாக்கி
அந்தியும் பகலும் தொண்டர் அலகிடும்
குப்பையாக்கும் நந்தியெம்பெருமான் பாதநகைமலர் முடிமேல் வைப்பாம்”[43]

### 1.14.14 குதம்பைச் சித்தர்

குதம்பை என்றால் காதில் அணியும் ஒரு வகை அணிகலன். இவர் அந்த அணிகலனை அணியும் பெண்களைக் குதம்பாய் என்று அழைக்கிறார். இதனால் இவரை குதம்பைச் சித்தர் என்று அழைக்கிறார்கள். யாதவ குலத்தில் கோபாலர் தம்பதிகளுக்குப் பிறந்தார். ஆண் குழந்தையாக இருந்தாலும் பெண் குழந்தையைப் போலவே இவருடைய காதில் குதம்பை என்னும் நகையை அணிவித்து அழகு பார்த்தார்கள் இவரது பெற்றோர். குதம்பையின் தினசரி நிகழ்ச்சி காலையும்

மாலையும் கோவிலுக்குச் சென்று இறைவனை வணங்குவதுதான். குதம்பைச் சித்தருக்குப் பதினாறு வயதாகும்போது அவருக்கு ஞான உபதேசம் செய்வதற்காக மாதவர் ஒருவர் வந்தார். வந்தவரை வணங்கி நின்றார் குதம்பை. மாதவர் குதம்பைக்கு அருளுபதேசம் செய்தார். மாதவ குருவே உபதேசம் செய்த உங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்! என்றார் குதம்பை. மாதவரோ குதம்பையை மெல்லத் தடவிக்கொடுத்து, குதம்பை நீ போன பிறவியில் உய்வடையும் பொருட்டுக் கடுந்தவம் செய்தாய். ஆனால் தவம் முழுமை அடையும் முன்பே உன் காலம் முடிந்து நீ இறந்துப் போனாய். அந்தத் தவத்தின் பயனால் தான் நீ என்னிடம் உபதேசம் பெற்றாய். நான் இப்போது உனக்கு உபதேசித்ததை அனுபவத்தில் கொண்டு வெற்றி பெறுவாய் என்றார்.

ஒரு நாள் இரவு குதம்பை சித்தர் யாருக்கும் தெரியாமல் எழுந்து ஒரு காட்டிற்குள் புகுந்தார், அங்கிருந்த மரப்பொந்தில் நுழைந்து தவ நிலையில் ஆழ்ந்தார். பரந்தாமனின் பாதம் சேர வேண்டும் என்று அவர் விரும்பினார். அப்போது பரந்தாமன் உருவமற்ற நிலையில் அசரீரியாக, குதம்பை! நீ இப்போது வைகுண்டம் வர வேண்டாம், உன்னால் இந்த உலகத்துக்கு இன்னும் நன்மைகள் நடக்க வேண்டி இருக்கிறது. நீ இப்போது இருப்பது விந்திய மலைப் பகுதியில். இங்கு பல யானைகள் இருக்கின்றன. இந்த யானைகளுக்கு மந்திரங்களை ஈர்க்கும் சக்தி உண்டு. உனக்கு மழை பெய்வதற்குரிய வருண மந்திரங்களை உபதேசிக்கிறேன். இந்த மந்திரத்தை இங்குள்ள யானைகளின் காதில் விழும்படியாக நீ உச்சாடனம் செய். அவை பிளிறும் போது அந்த ஒசை மந்திரமாக வெளிப்படும். அப்போது பூமியில் அமுத மழை கொட்டும். அந்த மழையால் உலகம் செழிப்படையும் என்றார்.

வாசியோகம் என்ற கலையைப் பயின்று இறைவனை வணங்குகிறவரெல்லாம், குதம்பைச்சித்தரை மானசீகக் குருவாக ஏற்று, மழை வேண்டி வணங்கினால், இன்றும் மழை பெய்யும் என்ற நம்பிக்கை உள்ளது. இவர் மயிலாடுதுறையில் சித்தியடைந்தார்.

இவர் தம் அனுபவங்களைப் பாடல்களாக எழுதினார். அந்தப் பாடல்கள் தான் குதம்பை சித்தர் பாடல்களாக உள்ளன. நவக்கிரங்களில் கேது பகவானை பிரதிபலிப்பவர்.இவரை வழிப்பட்டால் சித்த பிரம்மை, மன வியாதி போன்ற கோளாறு நீங்கும். ஆன்மீகப் பாதையில் உள்ள முன்னேற்றத் தடை அகலும்.

**1.14.15 இராமதேவர்**

அகத்தியர் தமக்கு ஒரு நல்ல சீடன் வேண்டும் என்ற எதிர்பார்ப்புடன் காத்துக் கிடந்தார். அந்த சமயம் ஔவையார் ஓர் ஊமைப் பையனை அழைத்து வந்து, சீடராக்கிக் கொள்ள வேண்டினார். அவர்தாம் இராமதேவர் ஆவார்.

ஒரு சமயம் சிறந்த சிவ பக்தனான பாண்டிய மன்னன், தனது கூன் முதுகை கேலி செய்ததால் மிகுந்த வருத்தம் அடைந்தான். அதனை நிமிர்த்த அகத்தியரிடம் ஆலோசனை கேட்டான். அவரும் மூலிகை வைத்தியத்தால் கூனை சரி செய்து விடலாம் என்று கூறினார். சீடனை அழைத்து அபூர்வமான மூலிகைகளைக் கொண்டு வருமாறு கட்டளையிட்டார். சீடன் மூலிகைகளைக் கொதிக்க வைத்த சமயம், அரண்மனையில் இருந்து அழைப்பு வந்ததால் அகத்தியர் வெளியே சென்றார்.

கொதிக்கும் மூலிகைச் சாற்றின் ஆவி பட்டு, ஆசிரமத்தின் மேல் கட்டப்பட்டிருந்த ஓர் வளைந்த மூங்கில் நிமிர்ந்தது. அது கண்ட சீடன் மூலிகைச் சாறு பதமாகிவிட்டது என்று யூகித்து சாற்றை இறக்கி வைத்தார். இராமதேவரின் செயலைக் கேட்ட அகத்தியர் அவரை மனமாரப் பாராட்டினார். அந்த மூலிகைத் தைலத்தால் மன்னனின் கூன் முதுகு சரியானது.

காசிவர்மன் என்ற மன்னனுக்கு தலைவலி வந்தது., வேதனை தாங்க முடியாமல் அகத்தியரின் கால்களில் விழுந்து கதறினான். மன்னனின் உடலைப் பரிசோதித்த அகத்தியருக்கு அவனது தலைவலிக்கான காரணம் புரிந்தது., சிறிய தேரைக்குஞ்சு உன் மூளையில் தங்கி விட்டது, அதை நானே எடுக்கிறேன் என்று அகத்தியர் மன்னனிடம் கூறினார். பிறகு மன்னனை மயக்க நிலையில் ஆழ்த்தி

அவனது கபாலத்தைத் திறந்தார். மூளையின் மேற்பகுதியில் தேரை உட்கார்ந்து இருந்தது. இதை எப்படி அகற்றுவது என்று அகத்தியர் யோசிக்க, உடனே இராமதேவன் வாய் அகன்ற ஓர் பாத்திரத்தில் தன்ணீரைக் கொண்டு வந்து தேரையின் கண்ணில் படுமாறு வைத்தார். உடனே தேரை பாத்திரத்தினுள் குதித்தது. உடனே அகத்தியர் சந்தானகரணி என்ற மூலிகையினால் மன்னனின் கபாலத்தை மூடினார். மன்னனின் நோய் குணமானது. இந்நிகழ்விலிருந்து இராமதேவர் தேரையர் என அழைக்கப்பட்டார்.

அவரின் திறமையை வெளிப்படுத்த நினைத்த அகத்தியர், உன்னால் முடிந்த அளவுக்கு நல்லவர்களுக்கு உதவி செய் என்று அகத்தியர் கூறினார்.. அதன்படி யோகியர் மற்றும் மக்களின் பிணியைப்,போக்கினார். இவர் எழுதிய நூல்கள்

பதார்த்த குண சிந்தாமணி

நீர்க்குறி நூல்

நோய்க்குறி நூல்

தைல வர்க்க சுருக்கம்

வைத்திய மகா வெண்பா

இவர் பொதிகை சார்ந்த தோரண மலையில் தவம் செய்து அங்கேயே சமாதி அடைந்தார் எனப்படுகிறது. இவரை வணங்கினால் ஜாதகத்தில் சூரிய கிரகத்தால் ஏற்படும் தோ'ம் விலகும்,, குடும்ப ஒற்றுமை ஓங்கும் என்பர்.

''ஆறுதிங்கட் கொருதடவை வமன மருந்தயில்வோம்
அடர் நான்கு மதிக்கொரு காற் பேதியுறை நுகர்வோம்
தேருமதி யொன்றைக் கொர்தரம் நசியம் பெறுவோம்
"திங்களரைக் கிரண்டு தரஞ் சவரம் விரும்பிடுவோம்
வீதுசதுர் நாட்கொருகால் நெய்முழுக்கைத் தவிரோம்

விழிகளுக்கு அஞ்சனம் மூன்று  நாட்கொரு காலிடுவோம்

நாருகந்தம் புஂபமிவை நள்ளிரவில் முகரோம்

நமனார்க்கிங் கேது சுவை நாமிருக்குமிடத்தே"[44]

மனிதர்கள் நலமுடன் வாழ இவர் வழங்கியுள்ள மருத்துவ குறிப்புகள்

- பசிக்கும் போது மட்டுமே உண்வை உட்கொள்ள வேண்டும்
- ஒரு நாளைக்கு இரண்டு முறை மட்டுமே உணவை உட்கொள்ள வேண்டும்
- எண்ணெய் தேய்த்துக் குளிக்கும்போது வெந்நீரில்தான் குளிக்க வேண்டும்
- இரவில் போதுமான தூக்கம் அவசியம்
- உணவுக்குப் பிஞ்சுக் காய்களை மட்டுமே பயன்படுத்த வேண்டும். முற்றிய காய்களை உண்ணக் கூடாது.
- ஆறு மாதத்திற்கு ஒரு முறை வாந்தி மருந்த்தும் நான்கு மாதங்களுக்கு ஒரு முறை பேதி மருந்தும் சாப்பிட வேண்டும்.
- உலகமே பரிசாக கிடைத்தாலும், பசிக்காத போது உணவு உட்கொள்ளாதீர்கள்
- உணவு உட்கொள்ளும்போது தாகம் அதிகமாக எடுத்தாலும் இடையிடையே தண்ணீர் குடிக்க கூடாது.

### 1.14.16 ஸ்ரீ கொங்கணர்

போகரின் சீடராக அறியப்படும் கொங்கணவர், இரும்புக்கலம் செய்யும் ஆசாரிமார்களின் குடிவழியைச் சேர்ந்தவர். சுக்தி வழிபாட்டைப் பிரதானமாகக் கொண்டவர். இவரின் மனைவி பேராசைமிக்க பெண்மணி. துன் கணவன் கோடிகோடியாகச் சம்பாதிக்க வேண்டும், பொன்னும் மணியும் தன் வீட்டில் கொழிக்க வேண்டும் என்று அவள் விரும்பினாள். ஆவ்வாறு வருமானம் ஈட்டாதவர்கள் ஆண்களே அல்ல, பேடிகளே என்று அவள் நினைத்தாள். அது

கொங்கணவரை மிகவும் பாதித்தது. ஆப்போது சித்தர் ஒருவர், தங்கக் காசுகளை மாயத்தால் வரவழைத்தது கண்டு இவர் மயங்கினார். சித்தர்கள் நினைத்தால் இரும்பைத் தங்கம் ஆக்குவார்கள். இவர்கள் நீரில் நடப்பர், நெருப்பை விழுங்குவர் என்று கேள்விப்பட்டு உடனே அவர் சித்தராக மாற நினைத்தார். இவர் சரசுவதி துதி, சுப்ரமணிய துதி,சிவபெருமான் துதி, விஷ்ணு துதி, நந்தீசர் துதி என்று பல்வேறு துதிகளைப் பாடியுள்ளார். இவர் பாடிய துதிகளில் சரசுவதி துதி,

> ‘‘சித்தர்கள் போற்றிய வாலைப்பெண் ணாமந்த
> சக்தியின் மேற்கும்மிப் பாட்டுரைக்கத்
> தத்தமித் தோமென ஆடும் சரஸ்வதி
> பத்தினி போற்பதங் காப்பாமே’’[45]

இவர் பெயரில் வழங்கப்படும் பாடல்களில் ‘‘வாலைக் கும்மி’’ என்பது ஒன்று. வாலை என்பது சக்தியின் பெயர் கன்னி என்றும் பொருள். கன்னிப் பெண்ணை முன்நிறுத்தி கும்மி பாடியுள்ளதால் வாலைக் கும்மி என வழங்கப்படுகிறது.

இவர் போகரைச் சந்தித்து, தான் ஒரு தேர்ந்த சித்தனாகிடத் தனக்கு மந்திர உபதேசம் செய்ய வேண்டுமென அவரிடம் வேண்டினார். அதற்கு அவர், உபதேசம் செய்வது பெரிய விஷயமல்ல, அதைப் பின்பற்றி தவம் செய்வதில் தான் எல்லாம் இருக்கிறது என்று வழிகாட்டினார். கொங்கணர் தவத்தில் ஆழ்ந்திருந்த நேரத்தில், மரக்கிளையில் இருந்த கொக்கு ஒன்று அவர் மேனியில் எச்சமிட்டது. உடனே தவம் கலைந்து கோபமுடன் அதனை உற்று நோக்க, கொக்கு எரிந்து சாம்பலானது. தவத்தில் உயர்ந்த நிலைக்குத் தான் வந்து விட்டதாக நினைத்துத் தன்னைத் தானே இவர் பாராட்டிக் கொண்டார்.

இவர், ஒரு வீட்டிற்குச் சென்று பிச்சை கேட்டார். அங்கு உணவு வழங்கத் தாமதமானதும், அந்தப் பெண்ணைச் சினந்து நோக்கினார். உடனே அந்தப் பெண், கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவர் என்று கேட்க அதிர்ச்சி அடைந்தார். என் கணவருக்கான பணிவிடையில் இருந்த போது உமது குரல் கேட்டது. எனது

கடமையை முடிக்காமல் நான் எப்படி உமக்கு அன்னம் அளிக்க வர முடியும், என்று அந்தப் பெண் கேள்வி எழுப்பவே, அவரது ஞான திருஷ்டியை, கற்பின் திறமையை உணர்ந்து வியந்தார். தன்னுடைய சினத்தை எண்ணி வெட்கப்பட்டார்.

ஹோமம் வளர்ப்பது, யாகம் புரிவது, தவம் செய்வது என்ற அனைத்தையும்விட மேலான ஒரு செயல், தான் என்ற அகந்தை துளியும் இன்றிப் பணிவிடை புரிவது தனக்கென வாழாமல் இருப்பது என்பதைப் புரிந்து கொண்டார். அந்த நொடி கொங்கணவருக்குத் தன் தவச் செயலால் உருவான கர்வம் தூள்தூளாகிப் போனது.

கொங்கணவர், திருவேங்கட மலை சென்று தவம் செய்தார். அப்போது வலவேந்திரன் என்னும் சிற்றரசன் கொங்கணரைச் சந்தித்து அவருக்குச் சீடராக மாறினான். அம்மன்னனின் வேண்டுக்கோளுக்கிணங்க சித்தர் பாடல்களை எளிமையான முறையில் இயற்றினார். இவர் மருத்துவ நூல்களும், ரசவாத நூல்களும், யோக நூல்களும், கொங்கணர் கடை காண்டம், திரி காண்டம், ஞானம் நூறு, குவிகை, கொங்கணவ தேவர் கலை, கொங்கணவ கலைக்காண்டம், நடுகாண்டம், முப்பூதிட்சை, கொங்கணர் வாக்கியம், கொங்கணர் தியானம் போன்ற நூல்கள் இயற்றியுள்ளார். இவர் திருவேங்கடத்தில் சித்தியடைந்தார். இவரை வழிபட்டால் மனவளர்ச்சியில் அபிவிருத்தி ஏற்படும்.

### 1.14.17 கோரக்க சித்தர்

விபூதி என்பதைச் சாம்பல் என்றும் ஞானம் என்றும் சொல்வார்கள். அப்படிப்பட்ட விபூதியில் இருந்து பிறந்தவர் கோரக்க சித்தர் ஆவார்.

ஒரு பெண்மனி பிள்ளைப்பேறு இல்லாமல் இருந்தாள், அப்போது மச்சமுனி சித்தர் பிச்சை கேட்டு வந்தார். சதா சர்வ காலமும் கவலையில் இருந்த அந்த பெண் அலட்சியமாகவே பிச்சை போட்டாள். அதன் காரணத்தை அவர் உணர்ந்து கொண்டார். உடனே புன்னகையுடன் சிவநாமத்தை ஜெபித்து, ஒரு சிட்டிகை விபூதியை அவளுக்குத் தந்தார். இதை சிவநாமம் கூறி உண்பாயானால்

உனக்குப் பிள்ளைப் பேறு உண்டாகும் என்றார். அந்த பெண் அஞ்ஞானத்துடன், இது, சாம்பல் தானே, எப்படி பிள்ளைப் பேறு தரும் என்றாள். சாம்பலாக இருந்தாலும் பிள்ளைப் பேறு நிச்சயம் கிடைக்கும் என்றார். ஒரு நாள் அந்த பாலகனை காண நிச்சயம் வருவேன் என்றார். அப்போது அருகில் இருந்த பெண், இவர் ஒரு மாயாவி போல் தெரிகிறது, இந்த சாம்பலை உண்டால் மயங்கக் கூடும் உன்னை அவன் அபகரிக்க கூடும் என்றாள். அதற்குப் பயந்த அவள் அந்த விபூதியை மாட்டுத் தொழுவத்தில் கொட்டிவிட்டாள்.

சில ஆண்டுகள் கழித்து மச்சமுனி, திரும்பி வந்து, எங்கே பாலகன், என்று கேட்கத் தடுமாறி அந்த பெண் உண்மையைச் சொன்னாள். அதனை கேட்ட அவர் மாட்டுத் தொழுவத்தில் இருந்த அடுப்பின் முன் நின்று வருந்தினார். சித்தன் வாக்கு பொய்க்க கூடாது., எந்த விபூதியால் பிள்ளை பிறக்கும் என்றேனோ அந்த விபூதியால் பிள்ளை பிறக்கும். உன் கருப்பைக்குள் வளர நீ இடம் தரவில்லை. ஆனால் இந்தத் தொழுவம் இடமளித்து விட்டது. அதனால் பிறக்கப் போகும் பிள்ளை கோவகன் மட்டுமல்ல, கோரகனும் ஆவான். என்றவர், கோரகனே…. வா…. என்று அழைத்திட, சாம்பலுக்குள் இருந்து கோரக்கர் பாலகனாய் வெளிப்பட்டார்.

அதன் பின் கோரக்கர், மச்சமுனியின் திருச்சீடராக அவர் செல்லும் இடமெல்லாம் சென்றார். குரு சேவையை தன் வாழ்வின் கடமையாக மேற்கொண்டார். தனது குருவின் மூலம், சிவஞானபோதம் அறிந்தார். காயகற்ப முறைகளைக் கற்றார். பின்னாளில் பிரம்மமுனியின் நட்பு இவருக்குக் கிட்டியது. இருவரும் ஒன்றாகவே எல்லா இடங்களுக்கும் சென்றனர். ஒட்டியே இருக்கும் இரட்டைச் சித்தர்கள் என்கிற பெயர் இவர்களுக்கு ஏற்பட்டது. இவர் இயற்றிய நூல்கள்,

கோரக்கர் சந்திர ரேகை

கோரக்கர் நமநாசத் திறவுக்கோல்

கோரக்கர் முத்தாரம்

கோரக்கர்மலைவாக்கம்

இவர் கோயம்புத்தூர் அருகில் உள்ள பேரூரில் சித்தியடைந்தார். இவரை வணங்கினால் ஜாதகத்தில் உள்ள சனி தோஷங்கள் விலகி நன்மை உண்டாகும். மக்கட் பேறு கிடைக்கும். வீண் பயம் அகன்று தைரியம் உண்டாகும்.

### 1.14.18 ஸ்ரீ கமலமுனி

''ஆதியாம் கமலமுனி என்ற சித்து
அன்பான குறவரிட ஜாதியாகும்
நீதியாம் தலைமுறைகள் ஆறெட்டாகும்
நிஷ்களங்க மாகவல்லோ சாத்திரத்தில்
பாதிமதி சடையணிந்த தம்பிரானும்
பாடிவைத்த நூல் தனிலே காணலாமே''[46]

கமலமுனி சித்தர் குறவர் சாதி என்பது போகர் ஏழாயிரத்தில் உள்ள மேற்கண்ட பாடல் மூலம் அறியப்படுகிறது. வைகாசி மாதம் பூச நட்சத்திரத்தில் பிறந்தவர். சீனாவில் நெடுங்காலம் வாழ்ந்தவர் என குறிப்புகள் மூலம் அறியப்படுகிறது. இவர் மதுரையம்பதியில் சமாதி அடைந்ததாக போகர் ஜனன சாகரத்தில் கூறப்படுகிறது.

## 1.15 தொகுப்புரை

சித்தர்கள் என்றால் சித்துகள் செய்பவர்கள். சித்து என்பது எல்லாவற்றையும் உணர்ந்து கொள்ளளும் தன்மை எனப் பொருள். தமிழில் சித்தர் என்னும் சொல் ஏறத்தாழ 15 நூற்றாண்டுகளாக வழக்கில் இருந்து வந்துள்ளது. அத்தகு சித்தர் என்ற சொல் இடம் பெற்ற விதம், சித்தர் சொல்லின் பொருள், சித்தர்களின் தன்மைகள், அவர்களின் புறத்தோற்றம், சித்தர்களின் தொகை வரையறை போன்றவை இடம் பெற்றுள்ளன. சித்தர்கள் சமயக் கோட்பாடுகளைப் புறந்தள்ளிவிட்டு, தங்களுக்கென்றொரு கொள்கையை வகுத்துக் கொண்டு அதன்

வழி ஒழுகினர். மத மாச்சரியங்கள், சாதி பேதங்கள், உயர்வு தாழ்வு இவை அனைத்தையும் கடந்து நின்றார்கள். சித்தர்களைப் பற்றிய பல்வேறு கதைகளும் கருத்துகளும் நாட்டில் நிலவி வருகின்றன. சித்தர்கள், இந்த உலகத்திலுள்ள பொருளியல்சார் வாழ்க்கை நெறிகளை ஏற்றுக் கொள்ளாதவர்கள். தாங்கள் எண்ணிய ஒரு இலக்கை நோக்கிச் சென்று அதன் பயனை அறிந்து ஆனந்தம் கொள்பவர்கள். இலக்கிய, இலக்கணங்களில் சித்தர் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. சித்தர்களை ஒன்பதின்மர், பதினெண்மர் என அபிதான சிந்தாமணி சுட்டுகின்றது. சித்தர்கள் பதினெண்மரும் தமிழ் நாட்டிலே வாழ்ந்த சித்தர்கள் என்று கூறுகின்றனர். இவர்களில் வான்மீகி, பதஞ்சலி, தன்வந்திரி போன்றவர்கள் வடமொழியில் வல்லுநர்களாக திகழ்ந்தவர்கள்.

சித்தர்களில், பதினெட்டு சித்தர்கள் என்று குறிப்பிடுவதில் பல்வேறுப்பட்ட பதினெண் சித்தர் வரிசை காணப்படுகின்றது. திருமூலர், இராமதேவர், கும்பமுனி, இடைக்காடர், தன்வந்திரி வான்மீகர், கமலமுனி, போகர், மச்சமுனி, கொங்கணர், பதஞ்சலி, நந்திதேவர், சட்டைமுனி, சுந்தரானந்தர், குதம்பைச்சித்தர், கரூவூரார், கோரக்கர், பாம்பாட்டிச் சித்தர் ஆகிய பதினெண் சித்தர்களே சித்தர் மரபில் வழக்கமாகக் குறிப்பிடப்படுவது நோக்கத்தக்கது. பதினெட்டு சித்தர்களும் அட்டமா சித்திகள் கைவரப் பெற்றவர்கள். இவர்களது பாடல்கள், மக்களுக்கு நற்சிந்தனைகளைப் போதிக்கின்ற வகையில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

சித்தர்களின் வகைகள் மற்றும் அவர்களின் பெயர் விளக்கங்கள், சித்தர்களின் நெறிகள், ஆற்றல்கள் மற்றும் தஞ்சை சரசுவதி மகால் நூலகப்படத்தில் குறிப்பிடும் பதினெண் சித்தர்கள், பதினெண் சித்தர்களின் அட்டவணை, குறிப்புகள், வரலாறு மற்றும் அவர்களைப் பற்றிய முக்கிய நிகழ்வுகளும் இவ்வியலில் இடம் பெற்றுள்ளன.

# இயல் 1

## அடிக்குறிப்புகள்

1. ரி'பானந்தர், சித்தர்கள் கண்ட மானுட ரகசியம், அழகு பதிப்பகம், சென்னை, 2011, ப.5
2. சி.எஸ்.முருகேசன், பதினெண் சித்தர்கள் வரலாறு, எம்.கே.கிராபிக்ஸ், சென்னை, 2013, ப.12
3. மேலது ப.12
4. ரி'பானந்தர், சித்தர்கள் கண்ட மானுட ரகசியம், ப.23
5. எஸ்.ராஜகுமாரன், இந்திய சித்தர்கள், ப..13
6. பெரிய ஞானக்கோவை, சட்டைமுனி நாயனார் முன் ஞானம்-,,100 பா.91
7. அறிவொளி (உ.ஆ)., சித்தர் பாடல்கள், தொகுதி-2, பா.5
8. தொல்காப்பியம், புறத்திணையியல், நூற்.1021
9. மேலது, நூற். 1434
10. மணிமேகலை, அ.ள் .47-46
11. மேலது., அடி.166
12. குறுந்தொகை, பா.130
13. புறநானூறு பா.43
14. சிறப்புப்பெயர் அகராதி, சு.அ.இராமசாமிப்புலவர், ப.224
15. சம்பந்தர் தேவாரம், பா.1248
16. சுந்தரர் தேவாரம், பா.1253
17. திருவாசகம், பா.1254
18. பெரியபுராணம், திருநாவுக்கரசு நாயனார் புராணம், பா.1641
19. நுஉெலஉடழியநனயை ழக யுஅநசஉையயெ ஏழட. .1ி.673
20. தமிழ்ச் சித்தர் பாடல்களும், விவிலியமும். மோசசு மைகேல் பாரடே, ப.25
21. மேலது ப.12
22. பதிப்பாசிரியர்கள்,சித்தர் நெறிகள், தொகுதி-2, ப.960
23. மேலது,, ப.960
24. பதிப்பாசியர்கள்......, சித்தர் இலக்கியங்களின் வாழ்வியல், ஆய்வுக்கோவை-2, ப.107

25. பதிப்பாசிரியர்கள், சித்தர் நெறிகள், தொகுதி-2, ப.808-807
26. மேலது,, ப.152
27. சித்தர் வரலாறு.,ப.13
28. திருமந்திரம் பா.142
29. திருமந்திரம் பா.68
30. எஸ்.பி.இராமச்சந்திரன், சித்தர்கள் வரலாறு, தாமரை நூலகம், சென்னை, 2002 ப.53
31. மேலது,, ப.99
32. மேலது,, ப.117
33. மேலது,, ப.118
34. மேலது,, ப.119
35. பதிப்பாசியர்கள்......, சித்தர் இலக்கியங்களின் வாழ்வியல், (ஆய்வுக்கோவை1) ப.1
36. சக்தி.பா.சரவணகுமாரபிள்ளை, சித்தர்கள் வரலாறு, ப.76
37. பதிப்பாசியர்கள்., சித்தர் இலக்கியங்களின் வாழ்வியல், (ஆய்வுக்கோவை2)ப.16
38. கவிஞர் பத்மதேவன், பதினெண் சித்தர் பாடல்கள், ப.229
39. எஸ்.பி.இராமச்சந்திரன், சித்தர்கள் வரலாறு, சென்னை,ப.183
40. போகர் ஏழாயிரம்.7000/5701
41. போகர் ஏழாயிரம்.7000/5834
42. பதஞ்சலி.ஞான சூத்திரம் 20/19
43. டாக்டர் நஜன், சித்தர்கள் கட்டிய யோகநெறி, பிரதிபா பிரசுரம், சென்னை, ப.59
44. கவிஞர் பத்மதேவன், பதினெண் சித்தர் பாடல்கள், கற்பக புத்தகலாயம், சென்னை, ப275
45. ஸ்.பி.இராமச்சந்திரன், சித்தர்கள் வரலாறு, தாமரை நூலகம், சென்னை, 2002, ப.115
46. போகர் ஏழாயிரம்.5725.

# இயல் 2

# சித்தர்கள் காட்டும் யோக நெறி

சித்தர்கள், உடலும் மனமும் கட்டுக்குள் விளங்க வைக்கும் வழிவகைகளை உணர்ந்தவர்கள். அழியா உடலையும், சாகா நிலையையும் அடைந்தவர்கள். அத்தகைய நிலையை அடைவதற்கு சித்தர்கள் யோகத்தைக் கையாண்டனர். தாம் வாழ்ந்தால் மட்டும் போதாதென்று தாம் கண்டறிந்த யோகநெறிகளை மற்றவர்களும் பின்பற்றி வாழ்தல் வேண்டும் என்று சித்தர்கள் விரும்பினர். அதனால் தம்முடைய யோகநெறிகளை பாடல்கள் வழி எடுத்தியம்பினர். அவர்கள் எடுத்துரைத்த யோகநெறிகள் மனித வாழ்க்கையை மேம்படுத்துவனவாக அமைந்துள்ளன. சித்தர்கள் காட்டும் யோகநெறிகள் குறித்து விளக்குவதாக இவ்வியல் அமைந்துள்ளது.

### 2.1 யோகம் என்பதன் பொருள்

சித்தர்கள் முக்காலமும் உணரும் ஞானம் பெற்றவர்கள். பல்வேறு அற்புதங்களை நிகழ்த்தும் பேராற்றல் உடையவர்கள். இவர்கள் யோகத்தின் வழியாக இறைவனை உணர்ந்து வாழ்பவர்கள். யோகம் என்ற சொல்லுக்கு ‘உபாயம்’ என்றும் ‘கூடல்’[1] என்றும் தமிழ் அகராதி பொருள் தருகிறது. சித்தர்களின் இலக்கணத்தைப் பற்றி பல இடங்களில் கூறும் திருமூலர் தமது திருமந்திரத்தில்,

> யோகச் சமாதி யுகந்தவர் சித்தரே[2]

என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும்,

> ‘‘நெறிவழி யேசென்று நேர்மையுள் ஒன்றித்
> தறியிருந் தாற்போல் தம்மை யிருத்திச்

சொறியினுந் தாக்கினுந் துண்ணென் றுணராக்
குறியறி வாளர்க்குக் கூடலு மாமே''[3]

''ஊழிதோ றூழிஉ ணர்ந்தவர்க் கல்லால்
ஊழிதோ றூழி உ ணரவுந் தானொட்டான்
ஆழி அமரும் அரியயன் என்றுளார்
ஊழி முயன்றும் ஒருச்சியு ளானே''[4]

ஊழிதோறும் ஊழி பலவரினும் என்றும் ஒரு படித்தாய் நின்று நிலவும் முழுமுதற் சிவனை அவன் அருட்கண்ணால் உ ணர்ந்தவர்க்கல்லாமல் பல ஊழிகண்டாலும் தம் அறிவால் அச்சிவனைக் காண முடியாது. சக்கரப் படையைத் தாங்கும் அரியும் அயனும் பல ஊழி முயன்றும் காண முடியாது நீங்கி மறைந்து நிற்கின்றான்.

''பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல உ ணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே''[5]

''உ ய்ந்தனம் என்பீர் உறுபொருள் காண்கிலீர்
கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்
சிந்தை யுறவே தெளிந்திருள் நீங்கினால்
முந்தைப் பிறவிக்கு மூலவித் தாமே''[6]

உ யிர்க்கு உ யிராய் உ ள்நின்று உ ணர்த்திவரும் முதன்மை வாய்ந்த சிவபெருமானைக் கண்டவரே முக்தி அடைய முடியும். மணங்கமழும் நல்லார்தம் நெஞ்சத் தாமரையில் கலக்கின்ற நந்தியை, உ ங்கள் உ ள்ளம் பொருந்த நினைத்தால் நலமாயிருக்கும். அவ்வாறு தெளிந்தால் இருள் நீங்கும். இருள் நீங்கினால் நுண்ணுடலாகிய கருவுறாது தோன்றும் முதற் பிறவியை ஒழிப்பதற்கு அத்தெளிவு அழியாக் காரணமாகும்.

''எழுத்தோடு பாடலும் எண்ணெண் கலையும்
பழித்தலைப் பாசப் பிறவியும் நீங்கா
வழித்தலைச் சோமனோ டங்கி யருக்கன்
வழித்தலைச் செய்யும் வகையுணர்ந் தேனே''[7]

''விரும்பிநின் றேசெயில் மேய்த்தவ ராகும்
விரும்பிநின் றேசெயின் மெய்யுரை யாகும்
விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ மாகும்
விரும்பிநின் றேசெயில் விண்ணவ னாகுமே''[8]

சிவத்தை விரும்பி செய்யும் செயல் ஒருவரை உண்மைத் தவத்தவராய் ஒழுகி நிற்கச் செய்யும்.அவ்வாறே ஒழுகின் இறையின் அருள் கைகூடும். அதுபோல் செய்யின் அ∴து இறப்பில் தவமாகிய உண்மைத் தவமாக இருக்கும்..

''பேணிற் பிறவா உலகருள் செய்திடுங்
காணில் தனது கலவியு ளேநிற்கும்
நாணில் நகர நெறிக்கே வழிசெயும்
ஊனிற் சுடுமங்கி யுத்தமன் றானே''[9]

''ஒத்தசெங் கோலார் உலப்பிலி மாதவர்
எத்தனை யாயிரம் வீழ்ந்தனர் எண்ணிலி
சித்தர்கள் தேவர்கள் மூவர் பெருமையாய்
அத்த னிவனென்றே அன்புறு வார்களே''[10]

அகத்தவமாகிய யோகநெறியினைப் பேணி ஒழுகுபவர்கள் மீண்டும் பிறப்பதற்கு வாயிலில்லாத தூய சிவவ உலகை எய்துவர். இறை நிலையில் கலந்து காணப்படுவர். இத்தவ ஒழுக்கிற் செல்ல நாணமுறுவார் இருள் உலகு எய்தி துன்பமுறுவர். அத்தகைய சிவபெருமானே சேர்ந்தவரைக் காக்கும் தலைவனாவன்.

''யோகிக்கு யோகாதி மூன்றுள கொண்டுற்றோர்
ஆகத் தருகிரி யாதி சரியையாந்
தாகத்தை விட்ட சரியையொன் றாம்ஒன்றுள்
ஆதித்தன் பத்தியுள் அன்புவைத் தேனே''[11]

யோகிக்குச் செறிவு, நோன்பு, சீலம் என்னும் மூன்றும் உள்ளன. அவர்கள் அம் மூன்றினையும் கொண்டு செலுத்துவோர் ஆவர். நோன்புநிலையாகிய கிரியையாளர் ஒழுக்கம் என்று சொல்லப்படும் சரியைக்கும் உரியவராவர். ஆசையை வெறுத்தவராகிய சீலத்தர் சரியை ஒன்றிற்கு உரியவர் ஆவர். இயற்கைப் பேரொளியாய் விளங்கும் சிவா சூரியன் பால் அன்பக் கொண்டு விளங்குவர்.

''யோகச் சமயமே யோகம் பலவுன்னல்
யோக விசேடமே அட்டாங்க யோகமாம்
யோகநிர் வாணமே யுற்ற பரோதயம்
யோக அபிடேகமே ஒண்சித்தி யுற்றலே''[12]

யோகத்தில் சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகம் என நான்கு நிலைகள் உள்ளன. அவை முறையே சிவ நுழைவு சிவநோன்மை சிவநுண்மை சிவ நுகர்மை என அழைக்கப் பெறும். யோகத்தில் சமயம் பலவகையான யோக முறைகளை நினைத்தல் யோகத்தில் விசேடம் எட்டுறுப்புடன் கூடிய யோகம் மற்றும் யோகத்தில் முழுமுதற் சிவம் தோன்ரம் நிலையை குறித்தல் ஆகும் என்று பதினாறு பாடல்களில் திருமூலர் தெளிவுற விளக்குகின்றார். இவை யோகம் பற்றிய விளக்கத்தைக் கூறுவதுடன் யோகியின் செயல்களையும் விளக்கிக் கூறுவதாக அமைந்துள்ளது நோக்கத்தக்கது.

"யோகம்" என்பது இயற்கையினுடைய கட்டளைக்கு இணங்கி கண்டபடி அலைந்து திரியும் புலன்களை வெளியே செல்ல விடாமல் தடுத்து, தன் ஆத்மனின் எல்லைப் பரப்பிலே ஒடுங்கிக் கிடத்தல்[13] என்பதாகும்.

## 2.2 யோகம் பற்றிய விளக்கங்கள்

யோகம் என்பது,இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்று எண்விதப்படும் என அபிதான சிந்தாமணி வரையறுக்கிறது.[14]

யோகம் என்றால் 'இணைத்தல்' என்றும் 'கூட்டுதல்' என்றும் பொருள்படுகிறது. எப்போதும் விருத்திகள் எனப்படும் எண்ணங்களாகச் சிதறிக் கொண்டிருக்கும் சித்தத்தை ஒன்று கூட்டி இயல்பான நிலைக்கு இட்டுச் செல்வதற்கே யோகம் என்று பெயர். அதாவது சித்தத்தின் விருத்திகளை ஒடுக்குவதே யோகம். அதுவே 'யோக சித்த விருத்தி நிரோத'[15] என்று பதஞ்சலி யோக சூத்திரத்தின் இரண்டாவது சூத்திரத்தில் வெளிப்படுகிறது.

யோகம் என்ற சொல்லுக்கு நேரடி பொருள் என்னவெனில் "ஒன்றிணைதல்" என்பதாகும். மனிதன் இறைவனை உணர்ந்து, இறைவனுடன் ஒன்றிணைதல் என்று கொள்ளலாம். தர்மத்தை கடைப்பிடித்து, பற்றின்றி தனக்குரிய கடமைகளை சரிவர செய்து வந்து, செயல்களின் பலனை ஈசுவரனுக்கு அர்ப்பணித்து விடுதலே கர்ம யோகம் ஆகும்.

ஆன்மீகத்தில் யோகம் என்ற சொல்லை, மனிதன் தன் முயற்சிகளின் உச்சமாக அடையும் இன்ப துன்பங்கள் அற்ற விடுதலையே யோகம் என்றும், இன்னொரு விதத்தில் அந்த விடுதலை அடைவதற்கு உரிய வழியே யோகம் என்றும் இருவிதமான பொருளிலும் பயன்படுத்துவர். ஞானியர் வகுத்த பல்வேறு ஆன்மீக மார்க்கங்களில் யோகம் என்பது உடலை வருத்தி செய்யக்கூடிய பயிற்சி முறையாகவும், மனதை அடக்கி செய்யக் கூடிய பயிற்சி முறையாகவும் முக்கியமாக இரு பகுதிகளை கொண்டு விளங்குகிறது. தற்காலத்தில் பரவலாக யோகா என்பது உடல் வளக் கலையாகவும், மனவளக் கலையாகவும் பயன்படுத்தப்படுகிறது. ஆனால் இவை யோகத்தினால் அடையும் முதல் படி மட்டுமே-யோகம் இதைவிட பெரியதொரு நன்மைக்காக ஏற்பட்டதாகும்.

சிலருக்கு இந்த வாழ்க்கை மிகவும் பிடித்திருக்கும்-நல்ல மனைவி, மக்கள், நிறைய சொத்து, சாதனைகள் என்று இந்த வாழ்க்கை இன்பமாகத்தான் இருக்கிறது - இதில் மரணமில்லாமல் நானும் எனது சொத்து சொந்தபந்தங்களும் இருக்க வேண்டும-அப்படியே மரணமடைந்தாலும் இதைப்போல இன்னும் நான்கைந்து பிறவிகள் இருந்தால் நன்றாகத்தான் இருக்கும் என்று தோன்றும். ஆனால் மனித வாழ்க்கை, இன்பங்களுக்கு சரி விகிதமாக துன்பத்தையும் தருவதாக இருக்கிறது. மூப்பு, பிணி, சாவு ஆகியவை ஒவ்வொருவரையும் தொடர்ந்து கொண்டே இருக்கின்றது. இன்ப துன்பங்கள் நிலையில்லை நிலையான பேரின்பம் என்று ஒன்று இருக்குமானால் அது இந்த இன்ப துன்பங்களில் இருந்து விடுபடுவது தான். உலக இன்ப நுகர்ச்சியால் மயங்கி மாறாத இன்ப துன்ப சுழற்சியில் சிக்கும் மனிதன், தன் நுகர்ச்சிக்கு காரணமான உடலின் கண், காது முதலான அங்கங்களையும், புலன்களையும் அடக்கி, மனதையும் அடக்கி இறைவனைக் காண்பதே, இறைவனுடன் இணைவதே யோகத்தின் நோக்கம். அதே சமயத்தில் யோகத்தினால் மனித உடலின், மனதின் செயல் வன்மையை சாத்தியங்களை பல மடங்கு அதிகப்படுத்தி அதை இந்த உலக இன்பத்தை பன்மடங்கு அதிகமாக அனுபவிப்பதற்கும் உபயோகிக்க முடியும் ஆனால் அது ஒரு பக்க விளைவு தானே தவிர அதுவே இறுதி நோக்கம் அல்ல.

சனாதன தருமம் என்னும் இந்து மதத்தினுள் இந்த உலகில் இன்பமாக வாழ்ந்து அனுபவிப்பதற்கும் வழிகள் உண்டு. இந்த இன்ப-துன்பங்கள் நிறைந்த வாழ்வை கடந்து இன்ப துன்பங்கள் அண்டாத பேரானந்த நிலைக்கு செல்வதற்கும் வழிகள் உண்டு. வாழ்வின் இறுதி தத்துவமாக இந்து மதத்தின் சைவம், சாக்தம், வைணவம், கௌமாரம் போன்ற பல்வேறு விதமான மார்க்கங்களில் வேதத்தின் வழியாக சொல்லப்படும் பொதுவான கருத்து, மனிதன் என்பவன் வெறும் உடல் மட்டுமல்ல உடல் இயங்கக் காரணமாக உள்ளே ஆன்மா என்ற ஒன்று இருக்கிறது. அது உடலை விட்டு நீங்கினால் உடல் இயக்கமின்றி பிணமாகி விடுகிறது. ஆன்மாவே ஒவ்வொரு உடலினுள்ளும் புகுந்து அந்தந்த உயிரினமாக

வாழ்ந்து இன்ப துன்பங்களை அனுபவிக்கிறது. உடல் கொண்டு வாழும் ஒவ்வொரு வாழ்க்கையிலும் ஆன்மா, தன் செயல்கள் மூலம் கர்ம வினையை சேகரித்துக் கொள்கிறது. அந்த கர்ம வினை, நல்லதாக இருந்தாலும், தீயதாக இருந்தாலும் அதற்குரிய பலனை அந்த பிறவியிலேயோ அல்லது அடுத்தடுத்த பிறவிகளிலோ அனுபவிக்கிறது என்பதாகும்.

உண்மையில் ஒவ்வொரு ஆன்மாவும் இறைத்தன்மையின் வெளிப்பாடு தான். ஆன்மா இறைவனைச் சார்ந்தே, இறைவனுடன் இணைந்தே இருக்கிறது (விசிஷ்டாத்வைதம், துவைதம்) அல்லது அது இறைவடிவமாகவே இருக்கிறது (அத்வைதம்) என்று வேதாந்த தத்துவங்கள் கூறுகின்றன. எப்படி குளத்தில் நீந்தும் மீன், தான் இருக்கும் நீருக்கு வெளியே ஒரு உலகம் இருப்பதை உணராமல், தன் உலகமே நீரால் ஆனது என்று நினைத்துக் கொள்ளுமோ அப்படித்தான் ஆன்மாவும் அறியாமையால் தன்னை இறைவனிடமிருந்து வேறு பட்டதாக எண்ணி மாயையில் சிக்கி வெவ்வேறு உயிரினங்களில் ஒன்றாக பிறவி எடுக்கிறது. இவ்வாறு ஆன்மா தன்னை உணராமல் இருப்பதே அறியாமை என்றும், தன்னை உணர்தலே ஞானம் என்றும் இந்து மத தத்துவங்கள் கூறுகின்றன. .

ஆன்மா இந்த அறியாமையை விட்டு தன் பிறவிகளுக்கு வெளியே இறைவனின் இருப்பை எப்போது கண்டுகொள்ளுகிறதோ அப்போதே பிறவிகளிலிருந்து விடுபட்டு விடுகிறது. தன்னை உணர்ந்த நிலையையே, அத்வைதம், யோகம், சமாதி, துரீயம், மரணமற்ற தன்மை, பரமபதம், மோக்ஷம், முக்தி என்று பல்வேறு பதங்களால் குறிக்கிறார்கள். இவை எல்லாமே மனமும் உடலும் செயலற்றுப் போய் அதன் பின் ஏற்பட்ட ஞானத்தினால் கிடைக்கும், இன்ப துன்பங்கள் அற்ற நிலையையே குறிக்கிறது. அந்த நிலையை அடைய சனாதன தருமம் பல்வேறு விதமான ஆன்மீக மார்க்கங்களையும், அந்த மார்க்கங்களில் செல்லக் கூடிய வாகனமாக பல்வேறு யோக முறைகளையும் பரிந்துரைக்கிறது. இவ்வாறு யோகம் என்பது இந்து மதத்தின் பல்வேறு

ஆன்மசாதனை மார்க்கங்களில் முக்கியமான ஒன்றாக இருக்கிறது. இவ்யோகம் குறித்து பல்வேறு அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களை எடுத்துரைத்துள்ளனர்.

**2.2.1 பகவான்ஸ்ரீ கிருஷ்ணர்**

'துக்கஸம்யோக வியோகமே' யோகம் என்றும், பஞ்சேந்திரியங்களை அடக்கி துக்கம் நம்மிடம் சேராது இருப்பது யோகம் என்கிறார்.[16]

**2.2.2 சி.ஜி.யுங்**

யோகம் என்பது விஞ்ஞான முறையிலான செயல்முறையாகும், இது மனக்கட்டுப்பாட்டையும், உண்மையை உணரும் அனுபவத்தையும் அளிக்கின்றது.[17]

**2.2.3 இளமதி ஜானகிராமன்**

மனிதனை அகப்புறக் கருவி காரணங்களினின்றும் வேறாக்கி இம்மை மறுமையினின்றும் விடுவித்து இறையுடன் ஒன்றுவிப்பது யோகமாகும்.[18]

**2.2.4 க.நாராயணன்**

ஆன்மா அனைத்திலிருந்தும் விடுபட்டு இறைமையுடன் ஒன்றும் செயல் யோகம் என்று குறிப்பிடுகிறார்.[19]

**2.2.5 தெ.பொ.மீனாட்சிசுந்தரனார்**

யோகம் என்பது முதலில் மனிதனின் உடலையும் உள்ளத்தையும் இறுதியில், இயற்கை முழுவதையும் தன்வயப்படுத்துவதற்கான நெறிகளைப் புகட்டும் விஞ்ஞானம், ஆன்மா விடுதலை பெறும் வழியாகும்.[20]

**2.2.6 ந.இராமலிங்கம்**

பிரபஞ்சத்தின் பேரான்மாவுடன், மானிட உடலின் ஆன்மா ஒன்றுதல் எனும் ஆன்மீக வழியே யோகம்[21] என்று குறிப்பிடுகின்றார்.

## 2.3 நால் வகை யோகம்

பகவத் கீதையில் யோகம் நான்கு நிலைகளைக் கொண்டிருப்பதாக உள்ளது. அவை

- பக்தி யோகம்
- கர்ம யோகம்
- ராஜ யோகம்
- ஞான யோகம்

இதில் ஞான யோகம் என்பது சித்தர்கள் முறையாகக் கையாளக் கூடியதாக உள்ளது. இறைவனே ஞானத்தின் சொரூபம் என்றும் விவேகத்தின் கடல் என்றும் அறியப்படுகிறது. ஞானயோக மார்க்கம் என்பது பிரம்ம சொரூபம். இதனை இறைவனையன்றி வேறு ஒருவராலும் கூற இயலாது.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நிலைகளில் சரியை பக்தியையும், கிரியை தொண்டினையும், யோகம் வாசியையும் வசப்படுத்தி வயமாக்குதலையும், ஞானம் தியானத்தையும் குறிக்கும். நோய் வருவதற்கு வாத, பித்த, சிலேத்துமங்களே காரணமாய் இருப்பதை அறிந்து அவைகளைச் சமநிலையில் வைக்க வாசியோகம் என்னும் யோகக் கலையை வாங்கி அதன் மூலம் நோயற்ற வாழ்வு வாழவும் வருமுன் காக்கவும், வந்த நோயைப் போக்கவும் கற்றுத் தந்தவர்கள் சித்தர்கள் ஆவார்கள்.

யோகம் என்பது இந்திய ஆன்மீகத்தின் முகட்டுக்கல் என்பதாகும். யோகம் ஒரு ஏணி. இது தத்துவக் கோட்பாடு பிராந்திய மரபு மொழி நில வரையறைகள் என்ற இவற்றையெல்லாம் கடந்ததாக இருக்கிறது. யோகம் என்பது உயிரோட்டமுள்ள ஒரு கருத்துப் படிவமாகும். மிகத் தொன்மையான காலந்தொட்டே வரும் மெய்யுணர்வின் வடிவமாகும்.[22]

யோக தத்துவ உபநிடதம் என்னும் நூல் யோகத்திற்குப் பல வடிவங்கள் உள்ளதாகக் கூறுகிறது. அவற்றில் முக்கியமானவை நான்கு யோகங்கள்.

- மந்திர யோகம்

- ஹட யோகம்
- லய யோகம்
- ராஜ யோகம்

யோக நெறிகளில் மந்திர யோகம் என்பது மிகவும் எளிமையானது எனலாம். இதில் ஒருவர் தனக்குரிய கடவுள்களை அவற்றிற்குப் பொருந்தும் வடிவங்களில், அடையாளங்கள், படம் மற்றும் குறியீடுகளில் யந்திர முத்திரைகளில் வைத்து தியானம் செய்வதே ஆகும்.

சூட்சும சரீரத்தைக் கட்டுபடுத்துவதற்காகப் பரு உடலைக் கட்டுப்படுத்தும் சாதனையைப் பற்றியதே ஹட யோகமாகும்.[23]

ஹடயோகத்தின் மிக உயர்ந்த வடிவமே லயயோகமாக இருக்கிறது. இதில் குண்டலினி எவ்வாறு செயல்படுகிறது என்பது அறியப்படுகிறது. முனிவர்களும், சித்தர்களும் இத்தகு யோக வடிவத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கின்றனர்.

குண்டலினியை எழுப்பி அதனைப் பராபரத்துடன் இணைக்கும் முறைதான் லயயோகம். பிராண வாயுவை அடக்கி மனத்தை ஒரு முகப்படுத்துவதுதான் ராஜயோகம். குண்டலினி யோகத்திற்கு விட்சக்கர யோகம் என்று பெயர் உண்டு.[24]

**2.4 சக்கரங்கள்**

சூட்சும சக்தியின் செயல்பாடுகள் சக்கர அமைப்பாக உள்ளன. சக்கரங்கள் உள்ளார்ந்த சக்தியின் உருவங்களாகவும் ஆன்ம சக்தியின் மையங்களாகவும் விளங்குகின்றன, சக்கர அமைப்பில் இயங்குகின்ற சக்திதான் குண்டலினி., மனித உடம்பில் ஏழு சக்கரங்கள் இயங்குகின்றன. ஒரு சிறப்பான சக்தியும் இயங்குகிறது. இத்தகு சக்கரங்களை வடிவமைப்புக்காகத் தாமரைகள் என்கின்றனர். மனித உடலில் ஏழு சக்கரங்கள் அமைந்துள்ளதாகக் கருதப்படுகிறது. தாமரை மலர்களாக உருவகிக்கப்பட்ட இந்தச் சக்கரங்கள் வழியாகத்தான் யோக சக்தியாகிய குண்டலினி பாய்ந்து, வாழ்விலும், தேகத்திலும், உணர்விலும் ஆத்மானுபவத்தை உண்டாக்குகிறது.

ஏழு சக்கரங்கள்

| | | | |
|---|---|---|---|
| .1 | மூலாதாரம் | - | அடிதளமையம் |
| .2 | சுவாசிஷ்டானம் | - | உயிர் மூச்சு மையம் |
| .3 | மணிபூரகம் | - | இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற மையம் |
| .4 | அனாகதம் | - | ஒலி எழுப்பாத ஒலி மையம் |
| .5 | விசுத்தம் | - | சிறந்த தூய்மையான மையம் |
| .6 | ஆக்ஞா | - | ஆணையிடும் மையம் |
| .7 | சகஸ்ரராம் | - | ஆயிரம் இதழ் தாமரைமையம்25 |

ஏழாவது மையமானது எல்லாம் கடந்த நிலையைக் குறிப்பதாக உள்ளது. அதனைத் தவிர்த்த மற்ற அணுவும், அணு ஆதாரங்கள் என்றழைக்கப்படுகின்றன.

எல்லாவற்றையும் கடந்து நிற்பவனே கடவுள், அக்கடவுளைத் தங்கள் கண்களால் கண்டு சிறு ஒளியான தங்கள் ஆன்மாவை மேம்படுத்தி பேரொளியான சிவத்துடன் இரண்டறக் கலந்து நிற்பவர்களே சித்தர்கள் ஆவர். இவர்களின் ரசவாத வித்தையும், மருத்துவமாகவும் மாறி உள்ளது. இவர்களின் யோகஞான சாதனங்கள்தான் இன்று யோகக்கலை, வாழும் கலை, சாகாக்கலை என்றும் அழைக்கப்படுகின்றது என காகபுசுண்டர் உரைக்கின்றார்.

தத்துவங்கள் தொண்ணூற் றாறுங் கோச
    தாரணையுள் தானன அவத்தை கம்பம்
வெத்தி தரும் புருவ மய்யம் உதிப்பே உந்தி
    விளங்கி வரும் ஈரானும் இருக்கும் இல்லம்
வித்திருந்த இடஞ் சக்கரஞ் சுழுத்தி
    இரு கோணம் மூவரிடை சயணம் பேடே
ஒத்திருந் தாடு மைவர் சிறந்த கொம்பு
    ஓராம லாதி வட்டம் பரமுமாமே[26]

தொண்ணூற்றாறு தத்துவங்கள் கொண்ட உடம்பில் அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்னும் பஞ்சகோசங்களையும் அனைவரும் அறிந்து கொள்ள வேண்டும். இதில்

நான் எனும் ஆன்மா தானாகி நிற்பதை உணர்ந்து அந்த ஒன்றிலேயே ஒன்றி வாசியால் கம்பத்தில் ஏற்றி மனதை தாரணை செய்தல் நலமாகும். புருவ மத்தி என்பது சூரிய மண்டலத்தில் உதித்து உந்தி எனும் தீயாக விளங்கி பனிரெண்டு அங்குல கலையான உயிர், காற்று இருக்கும் வீடு அதில் வித்தாக விளங்கும் ஈசன் இருக்கும் இடமே என்பதை உணர்ந்து தியானம் செய்தால் நினைத்த காரியத்தில் வெற்றி பெறலாம் எனப்படுகிறது. யோகம் என்பது இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதி என்பதாகும். இதனை பதஞ்சலி யோக சாஸ்திரம் என்னும் பெயரிலும் அழைக்கின்றனர். மனிதன், நல்ல ஆரோக்கியத்துடன் கூடிய கட்டுறுதியான உடல் அமைப்பை பெறுவதற்கு, இத்தகு யோகங்கள் தேவைப்படுகின்றது என்று அட்டாங்க யோகம் பற்றி பதஞ்சலி முனிவர் குறிப்பிடுகிறார்.

அட்டாங்க யோகத்தின் உச்சகட்ட சிகரமான ‘சிவ-சக்தி சம்யோகம்’ என்னும் நிலையைச் சாதகன் எய்தி, உயிர் நாடியை, ஸ்தூல உடலின் தொடர்பை தேகத்திலிருந்து முழுமையாகத் துண்டித்து, சர்வ சுதந்திர சாஸ்வத நிலையை அடைவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளது.[27]

அட்டாங்க யோகத்தை கைக்கொள்ளும் மனிதன் பெறும் பயன்கள் என்பது,

- அலைபாயும் மனம் தடுத்து நிறுத்தப்படுதல்
- மனோசாந்தி என்கிற நிலை ஏற்படுதல்
- மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞா என்ற அனைத்தும் தூண்டப் பெற்று “விட் சக்கர சித்தியின் மூலம் குண்டலினி மகா சக்தி” என்கின்ற நிலையை அடைகிறான்.

### 2.5 யோகத்தின் வகைகள்

யோகத்தின் வகைகள் என்பது பல வகையாக இருந்தாலும் அவற்றை உடலை அடிப்படையாகக் கொண்டவை, மனத்தை அடிப்படையாக கொண்டவை,

உடல், மனம் இரண்டையும் அடிப்படையாக கொண்டவை என்ற மூன்று வகையாகப் பகுக்கலாம். இவை மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாகும்.

### 2.5.1 உடலை அடிப்படையாகக் கொண்டவை

#### 2.5.1.1 ஜப யோகம்

வட மொழியில் 'ஜப' என்பதற்கு கடவுளின் பெயரைத் திருப்பிச் சொல்லுதல் என்பது பொருள். மனிதர்கள் முக்தியை அடைவதற்கு 'ஜபம்' அதிகப் பலம் வாய்ந்த சாதனம் என ஜபயோகத்தை விளக்குவர்.[28]

#### 2.5.1.2 இலயயோகம்

இலம்பிகா யோகப்பயிற்சியில் நாக்கை மடித்து உள்நோக்குப் பிரதேசத்திலுள்ள துவாரத்தை அடைத்துப் பிராணசெயம் பெற்று சமாதிநிலை பெறுதல் இலயயோகமுறை ஆகும்.[29]

#### 2.5.1.3 கேசரி யோகம்

கேசரி என்பது ஆகாயம் என்றும் சிங்கம் என்றும் பொருள்படும். கேசரி யோகம் என்பது சிங்கத்தைப் போன்று மேல் நோக்கி பார்வையைச் செலுத்தி இருப்பதாகும்.[30]

#### 2.5.1.4 குண்டலினி யோகம்

மூலாதாரத்தில் குண்டலினி சக்தி ஒரு சுருட்டிய பாம்பு போன்று முக்கோண வடிவில் உறங்குகிறது. இச்சக்தியைத் தியானத்தின் மூலம் தட்டி எழுப்ப முடியும். இச்சக்தி தண்டுவடம் வழியாக மேலே எழும்பி மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆதாரங்கள் வழியாக மூளையின் அடியிலுள்ள ஒரு பகுதியில் சேர்ந்து விடுகிறது. குண்டலினியை எழுப்பும் கலையே குண்டலினி யோகம் எனப்படும்.

### 2.5.1.5 பௌத்த யோகம்

பௌத்தர்கள் கடைப்பிடிக்கும் யோகநெறி பௌத்த யோகமாகும். யோகத்தில் கடைப்பிடிக்க வேண்டிய இயம நியமங்களை பௌத்த நூல்கள் விளக்குகின்றது.

புத்தர் கயை என்னுமிடத்தில் ஓர் அரச மரத்தடியில் அமைதியாகப் பத்மாசன நிலையில் அமர்ந்து தியானம் செய்து மெய்யறிவைப் பெற்றார். அவர் பெற்ற மெய்யறிவுக்கு யோகமே அடிப்படை.[31]

## 2.5.2 மனத்தை அடிப்படையாகக் கொண்டவை

### 2.5.2.1 பக்தி யோகம்

இறைவனிடம் முழுமையாகத் தன்னையே அர்ப்பணித்து பக்தியில் ஈடுப்படுத்துகின்ற தன்மையை வளர்ப்பது பக்தியோகமாகும். ‘‘இறைவன் திருவடிகளைப் பற்றி அவன்மீது அன்பும், சிந்தித்துத் தெளிதலும், நிட்டை கூடுதலும் உடையவர்களை முனிவர்கள் எதிர் வந்து அழைக்கச் சிவபதம் சேர்தல் ஏற்படும்’’.[32]

### 2.5.2.2 நாதயோகம்

ஆன்மப் பயிற்சியில் அடையக்கூடிய நாதப் பயிற்சி ஒலியோகமாகும். ஞானக் கண்பார்வைப் பயிற்சி ஒளியோகமாகும்.[33]

### 2.5.2.3 தியான யோகம்

மனத்தை ஒருமுகப்படுத்தி ஒரே பொருளில் சிந்தனையை செலுத்துவது தியானமாகும். மனதை நிலைப்படுத்துவதோடு மட்டுமல்லாது உடலை ஆரோக்கியமாக வைக்கவும் உறுதுணையாக இருப்பது தியானமாகும்.

தியானயோகம் சீவன் வாழ வேண்டிய அறவாழ்வை கூறியும் சிவனது இயல்பை எடுத்து இயம்பியும் அச்சிவனை அடைவதற்குரிய நெறிகளை

விளக்குவதும் ஆகும். தியான யோகத்தில் கேசரி யோகம், பரியங்கயோகம், சந்திரயோகம் ஆகியவை அடங்கும்.[34]

### 2.5.2.4 சந்திர யோகம்

சந்திரனை உடம்பில் விளங்கச் செய்யும் யோகத்திற்குச் சந்திர யோகம் என்று பெயர். அண்டவெளியில் சந்திரன், சூரியன், அக்கினி ஆகியவை இருப்பதைப்போன்று நமது உடலின் அகத்திலும் இவ்வாற்றல்கள் அமைந்துள்ளன.புறத்தில் உள்ள சந்திரன், சூரியன், அக்கினி (நெருப்பு) ஆகியவை வளர்பிறையில் வளரந்தும், தேய்பிறையில் தேய்வுற்றும் வரும். அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் என்று அறிஞர் கூறுவர். சந்திரன் உள்ளிட்ட அண்டவெளிப் பொருள்களுக்குக் கலை முதலியவற்றைக் கூறுவதுபோன்று அகத்தில் உள்ள சந்திரன் முதலிய பொருள்களுக்குக் கலை முதலியவற்றையும் திருமூலர் தெளிவுற எடுத்துரைக்கிறார்.

அண்டவெளியில் உள்ள பொருள்கள் குறித்து உணர்ந்தால்தான் அதனால் அடையும் பயனை நன்கு உணர இயலும். ஆதலால் திருமூலர் அவ்வொளிப் பொருள்களின் இயல்புகளை முதலில் தமது திருமந்திரத்தில் எடுத்துரைக்கிறார். உடலில் மூலாதாரத்திலிருந்து துவாதசாந்தம் வரை செல்லும் கலைகள் சந்திரனுக்குப் பதினாறு என்றும், சூரியனுக்குப் பன்னிரண்டு என்றும் அக்கினிக்குப் பத்து என்றும் அகவுணர்வில் அறிந்த யோகியர்கள் கூறுகின்றனர். இம்மூன்றும் சேந்ந்து ஒன்றாவதில்தான் சந்திரயோகம் அமையும் என்பதனை,

"ஆகின்ற சந்திரன் சூரியன் அங்கியுள்
ஆகின்ற ஈரெட்டொ டாறிரண் டீரைந்துள்
ஏகின்ற அக்கலை யெல்லா மிடைவழி
ஆகின்ற யோகி அறிந்த அறிவே"[35]

எனத் திருமூலர் தெளிவுறுத்துகின்றார்.

பன்னிரண்டு கலைகளை உடைய சூரியனைச் சந்திரன் வழியாகச் செலுத்தப் பயின்றவர் பெரும் பேற்றினை அடைவர். அப்போது சந்திரக்கலை பதினாறில் சூரியனது கலைகளும், அக்கினியினது கலைகளும் அடங்கிவிடும். இம்மூன்றும் பொருந்தும்போது அறுபத்து நான்கு கலைகளை உடைய பிரணவம் உதிக்கும். சிரசிற்கு மேல் எல்லாக் கலைகளும் கருவாக உள்ளன. இக்கலைகள் எல்லாம் இடை, பிங்கலை சுழுமுனை வழியே தொடர்புடையன. இவைகளின் கீழ் நோக்கும் தன்மையைக் கெடுத்து மேலெழச் செய்து பிரமரந்திரப் புழையின் மேல் விளங்கும் சகஸ்ரதளத்தில் கொண்டு சேர்க்க நல்ல சிவ யோகியர் சித்தியானத்தில் பொருந்தியிருப்பர். இதனை,

“எல்லாக் கலையும் இடைபிங் கலைநடுச்
சொல்லா நடுநாடி யூடே தொடர்மூலஞ்
செல்லா எழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்
நல்லோர் திருவடி நண்ணிநிற் போரே”[36]

என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

இடைகலை, பிங்கலை ஆகிய இரு கலைகளும் ஒளி வடிவில் பின்னி அமைந்து மூலாதாரம் ஸ்வாதிஸ்டானம் ஆகிய அக்கினி கண்டம், மணிபூரகம், அநாகதம் ஆகிய சூரிய கண்டம், விசுக்தி ஆஞ்ஞையாகிய சந்திரகண்டம் என்று மூன்று கண்டங்களாக உடம்பைப் பிடித்து நிற்கின்றன. மூலாதாரத்திலுள்ள புருடனோடு ஒளிவடிவில் பொருந்திய சூரிய சந்திர ஒளிகள் சுழுமுனை வழியாகப் பின்னி மேலே சென்று நட்சத்திரங்கள் போல் விளங்கிச் சந்திரமண்டலம் அமைகின்றது. இதனால் பூமியிலிருந்து நவ(ஒன்பது) மண்டலங்களும் இங்கு பொருந்தி நிற்கும். பஞ்சபூதங்கள், சூரியன், சந்திரன், அக்கினி, நட்சத்திரம் ஆகியவை நவமண்டலங்கள் ஆகும். இந்நெறியில் சென்றவர்க்குப் பஞ்சபூத உலகமும், சோமசூரியாக்கினியால் உணர்த்தப்பட்ட சுட்டறிவும் இல்லை.

சந்திரன் தேய்பிறையை அனுசரித்துக் கீழ் முகமானபோது மூலாதார சக்தி அதிகரித்துச் சந்திரன் மனத்தை இருளில் செலுத்துவான். சந்திரன் வளர்பிறையை

அனுசரித்து மேல்முகமானபோது மூலாதார சக்தி பிரகாசமின்றி மனம் மேல்நிலைக்குச் செல்லும். மூலாதார சக்தியின் ஆற்றலே எல்லா உற்பத்திக்கும் காரணமாகும். இம் மூலாதாரத்திலிருந்து மேலெழும் சோடச கலைகளின் (பதினாறுகலைகளின்) தன்மையை அறிந்தவர்களே வளர்பிறைபோல் ஒளிபெற்றுச் சிவத்தின் திருவடியை அடைவர். மூலாதாரத்திலுள்ள அக்கினி சூரியனைக் கடந்து சந்திரனை அடைந்தபோது பிரணவம் விளங்கும். இவ்வாறு சநதிரனின் பதினாறு கலைகளும் புறம் போகாது அகத்தே நிற்கின்ற தன்மை கண்டும் தாழ்வானவர்கள் உண்மையை நினைக்கவில்லை. அதனால் அவர்கள் வாழ்நாளை வீழ்நாளாக்கிக் காலனின் கருத்துப்படிச் சென்று பிறப்பில் பட்டுழல்கின்றார்கள் என்பதனை,

“ஒன்றிய ஈரெண் கலையும் உடலுற
நின்றது கண்டும் நினைக்கிலர் நீதர்கள்
கன்றிய காலன் கருத்துழடி வைத்தபின்
சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே”[37]

எனத் திருமூலர் நவில்கின்றார்.

சூரியனும் சந்திரனும் உடம்பில் எவ்வாறு விளங்குகின்றன என்பதனையும் திருமூலர் எடுத்துரைப்பது நோக்கத்தக்கது. சுவாதிட்டானத்தில் சந்திரன் ஒற்றைக்கலை பிறையாக உள்ளது. அச்சந்திரகலை மூலாதாரத்தை நோக்கிப் பாய்ந்து பிரம்ம மந்திரம் சென்றால் கதிரொளி கிட்டும். மூலாதாரத்திலுள்ள அக்கினியையும் மணிபூரகத்திலுள்ள சூரியனையும் ஒன்றாகச் சேர்ப்பதில் சந்திரனொளி அமையும். இவ்விரண்டு ஒளிகளும் பிரம மந்திரத்தில் ஒன்றானால் சோமசூரியாக்கினி கூடிய பிரணவம் அமையும். பிரணவமே சிவாலயமாம். இதனை,

“அங்கி மதிகூட வாகும் கதிரொளி
அங்கி கதிர்கூட வாகு மதியொளி
அங்கி சசிகதிர் கூடவத் தாரகை
தங்கி யதுவே சகலமு மாமே”[38]

எனக் கூறுகின்றார்.

பன்னிரண்டு கலைகளையுடைய சூரியன் பெண்ணாகும் பதினாறு கலைகளையுடைய சந்திரன் ஆணாகும். இவை இரண்டையும் உடம்பைவிட்டு அகலாமல் ஞான சாதனையால் முகத்துக்கு முன்னே தோன்றும் ஒளியில் கலப்பித்தால் தெவிட்டாத திருவடி இன்பம் உண்டாகும்.

சூரியன் என்பது வலக்கண். சந்திரன் என்பது இடக்கண். இடக்கண் பார்வையை வலக்கண் பார்வையோடு பொருத்திக் கண்டால் வலக்கண்ணுக்கு மேலே ஒரு சிறு ஒளி தோன்றும். இதுவே சிரசில் அக்கினி மூலையாகும். இதை அறிந்த பிறகே பிரணவத்தின் விளக்கம் புலனாகும்.

சந்திரனும் சூரியனும் சேர்ந்த போது உதித்தது பிரணவ சோதி என்ற அக்கினிக் கலை. இது முதல் நிலை. இந்நிலைக்குப் பிறகு வலக்கண் பார்வையை இடக்கண் பார்வையோடு பொருத்த வேண்டும். அவ்வாறு பொருந்தினால் சிரசில் அக்கினி மூலையிலிருந்து மறையாக ஈசானதிக்குச் சூரியகலை பாய்ந்து வட்டம் பூர்த்தியாகும். ‘‘மாணுமதியதன் காலை வலத்திட்டு பரிதியின் காலை இடத்திட்டுக் காணம்’’ என்பது திருமூலர் கருத்தாகும்.

அக்கினி மூலையிலிருந்து முறையாக ஈசான திக்கை நோக்கிக் கலைகள் பாய்ந்து சந்திரவீதி அமையும். இங்ஙனம் தெற்கிலிருந்து சீவகலை வடக்கு நோக்கிப் பாய்வதே உண்மையான கைலாச யாத்திரையாகும். இதை, அட்டதளகமல முக்குண அவத்தை’’ என்ற தலைப்பில் திருமூலர் எடுத்துரைத்துள்ளார். சிரசின் மேல் வடக்கு முதலான ஏழு திக்குகளும் சகள நிலை ஈசான திக்கில்தான் நிட்களம் உள்ளது. ‘‘ஏழுஞ் சகளம் இயம்புங் கடந்தெட்டில் வாழும் பரம்’’ என்பதாகும். இதனை உடலில் கண்டோர் ஒளி நெறி பற்றியவராவர். இம்முறையில் வழுவாது பயிற்சி செய்து வந்தால் ஆயிரம் ஆண்டு இவ்வுடம்பில் வாழலாம். மூச்சுக்கும் இவ்யோகத்துக்கும் தொடர்பு இல்லை என்பதை அறிந்துகொள்ள வேண்டும். இந்நெறி ஒளி பற்றியது, கண்ணாலே காணக்கூடியது என்பதனை,

"காணும் பரிதியின் காலைஇடந்திட்டு
மாணும் மதியதன் காலைவலத்திட்டுப்
பேணியே இவ்வாறு பிழையாமற் செய்வீரேல்
ஆணி கலர்காதவ் வாயிரத் தாண்டே"[39]

என்று திருமூலர் உரைக்கின்றார்.

ஈசான திக்கில் விளங்கிய சீவகலை பிரமரந்திரப் புழைக்குமேல் விளங்கும் சகஸ்ரதளத்தை அடையும்போது சிரசைச் சூழ்ந்துள்ள எட்டுத்திக்குகளையும் கடந்து ஒன்பதாவது திக்கு வரும். அப்போது சிரசில் நாதம் முழங்கும். அந்த நாதத்தில் தேவாதி தேவனான சிவபெருமான் களிப்புடன் பொருந்துவான். இந்த மேல் நிலையில் சூரிய சந்திரர்கள் வலப்புறமும், இடப்புறமும் சிறு தீபஒளி போன்று விளங்குவர். சூரியன் புறப்படுமுன்னர் சங்கின் ஒலி மக்களை விழிப்பிப்பதைப் போன்று ஞான சூரியன் எழுமுன் நாதம் உதித்து முன்னர் விளங்கும் என நமது உடம்பில் சூரியனும் சந்திரனும் விளங்குவதை விளக்குகிறார். இதனை,

"பாலிக்கும் நெஞ்சம் பறைஓசை ஒன்பதில்
ஆலிக்கும் அங்கே அமரர் பராபரன்
மேலைக்கு முன்னே விளக்கொளி யாய்நிற்குங்
காலைக்குச் சங்கு கதிரவன் தானே"[40]

என்று திருமூலர் தெளிவுறுத்துகிறார். இவ்வெல்லையை அடைந்தவர்க்குச் சந்திரன் என்றும் சூரியன் என்றும் தனியாக இல்லை. அவை தனியாக இருக்கும் வரை சாதகர் (பயிற்சி செய்பவர்) கால அளவுக்குக் கட்டுப்பட்டவராவார். சாதனை முற்றி(பயிற்சி முடிந்து) அவை ஒன்றானபோது அவர் கால நியதியைக் கடந்து நிற்பவராவார். சூரியனே நாதமாகவும், சந்திரனே ஒளியாகவும் பிறப்பற்று விளங்கும்.

சாதனையின் பயனாகச் சிரசின்மேலே சந்திரன் விளங்குமளவு உறங்காதிருந்து அச்சந்திரன் கீழே இறங்கிய பின்னரே தூக்கத்திற்குச் செல்லவேண்டும். அவ்வாறு செய்தால் ஒளி உள்ளத்தே நிலைபெற்றுச் சந்திரன்

முழுமையாக இருக்கும். அதாவது சிரசின்மேல் ஒளியைக் கண்டு மனம் பதிந்திருக்கும்போது உறக்கத்திற்குச் செல்லக் கூடாது என்று சந்திரயோகம் பயில்வதற்குரிய இரு இன்றியமையாத குறிப்புகளை திருமூலர் எடுத்துரைக்கிறார். இக்குறிப்புகளை,

"அயின்றது வீழ்வள வுந்துயில் இன்றிப்
பயின்ற சசிவீழ் பொழுதில் துயின்று
நயந்தரு பூரணை உள்ள நடத்தி
வியந்தரு பூரணை மேவுஞ் சசியே"[41]

என்று திருமந்திரத்தில் திருமூலர் குறிப்பிடுகிறார்.

மேலும், சந்திரன் சிரசில் உதிக்குமளவும் காலை எழுந்ததும் தியானம் செய்து சந்திரன் உதித்த பிறகு உணவை உட்கொள்ளவேண்டும். அதாவது காலை எழுந்ததும் தியானம் செய்து ஒளி பெற்ற பின்பே உணவு முதலியவை உட்கொள்ள வேண்டும் என்ற குறிப்பினை,

"சசியுதிக் கும்அள வுந்துயி லின்றிச்
சசியுதித் தானேல் தனதூண் அருந்திச்
சசிசார்க் கின்றள வுந்துயி லாமற்
சசிசார்ப் பின்கட்டன் கண்துயில் கொண்டதே"[42]

எனத் திருமூலர் நவில்கிறார்.

இங்ஙனம் நாள்தோறும் செய்து வரும் யோகியர் எமனது வாழ்நாளையும் அளக்க வல்லவராவர். மேலும் முக்காலத்தையும் அமுத கிரணத்தைப் பருகிச் சாவாமூவாநிலை எய்தியிருப்பர். ஆதலால் இவர்கட்கு ஆற்றலிழப்பு ஏற்படாது. சந்திர கலை முழுமையாக இருக்கும். இக்கலையைப் போற்றியிருந்தால் உடல் அழியாது. இது சந்திர யோகத்தினைச் செய்வதால் கிடைக்கும் பயனாகும். இச்சந்திர யோகத்தை தகுந்த ஆசிரியர் வழியாகவே பயிலுதல் வேண்டும்.

“உடம்பில் மூலாதாரத்திலிருந்து துவாத சாந்தம் வரை செல்லும் கலைகள் சந்திரனுக்குப் பதினாறு என்றும், சூரியனுக்குப் பன்னிரெண்டு என்றும், அக்கினிக்குப் பத்து என்றும் யோகியர் கூறுவர். இம்மூன்றும் சேர்ந்து ஒன்றாகும் பொழுது சந்திர யோகம் அமையும்.”[43] என்பர்.

**2.5.2.5 சித்த யோகம்**

பிரகாசித்துக் கொண்டிருக்கிற ஜீவசக்தி அதன் உற்பத்தி ஸ்தானமாகிய புருவ மையத்தில் சலனமில்லாமல் இருக்கின்ற நிலைக்குக் கொண்டு செல்லும் பயிற்சி சித்த யோகமாகும்.[44]

**2.5.3 உடல், மனம் இரண்டையும் அடிப்படையாகக் கொண்டவை**

**2.5.3.1 இராச யோகம்**

எல்லா யோகங்களிலும் ஆளுமையில் சிறந்து விளங்குவது இராச யோகமாகும். “நரகப் படுகுழியாகி பொசுக்கி வீசி அண்டங்கள் உலாவும் தியான நெருப்பே பாச மனது. மனதாட்சி பேய் பிடித்தவரை ஆட்டி வைப்பது போலும் ஜீவர்களை புயற் சுழலாய்ச் சுற்ற வைக்கும். இதை அழித்து சுகத்தில் நாட்டுவதே ராஜயோகமாகும்.”[45]

**2.5.3.2 நிரந்தர யோகம்**

சமாதி கைகூடாது போன யோகி, பூமியில் பிறந்து பிராரத்துவ வினைகளை அனுபவித்து மீண்டும் பிறவாத மகாயோகத்தை திருவருள் துணை கொண்டு பூர்த்தி செய்தல் நிரந்தரயோகமாகும்.[46]

**2.5.3.3 தோழமை யோகம்**

இறைவனை நண்பனாக கொண்டு வழிபடுவது தோழமை யோகமாகும். இதுவே சகமார்க்கமாகும்.[47]

### 2.5.3.4 கிறித்துவ தியான யோகம்

கிறித்துவ தியான யோகத்தில் ஆறு விதமான தியான முறைகள் உள்ளதாக செயிண்ட் தாமஸ் அவர்கள் விளக்கியுள்ளார்.

- புலன்களால் உலகை மட்டும் தெரிந்து கொள்வது.
- உணரும் உலகைவிட்டு ஒருபடி உயர்ந்து அறிவுலகத்தில் தியானம்.
- அறிவுலக காட்சி உதவியுடன் ஒருவித முன்னேற்றம்.
- அறிவுலகப் பொருள்கள் மீது தியானம்.
- புத்தியால் மட்டும் காணப்படக்கூடிய ஆன்மீக விசயத்தில் மனம் படிதல்
- ஆன்மீக தெய்வத்தின் மீது தியானத்தில் ஆழ்வது
- மனிதன் உயர்ந்த பக்குவ நிலையை அடைவதற்கு இவைகள் உதவும். கிறித்துவர்கள் வஜ்ராசன நிலையில் பிரார்த்தனை செய்வர்.

### 2.5.3.5 முகமதிய தியான யோகம்

முகமதிய தியான யோகத்தை இஸ்லாமிய தியானயோகம் என்றும் கூறுவர். இதில் 'நமாஸ்' என்ற இறை வணக்கம் தொழுகையாக ஐந்து வேளைகள் நிகழ்த்தப்பெறும். நாக்கை மேலண்ணத்தில் ஒட்டி மூச்சை இழுத்து அடக்கி அடிவயிற்றிலிருந்து மந்திரம் ஓத வேண்டும். கிறித்துவர்களைப் போன்றே இவர்களும் வஜ்ராசன நிலையில் பிரார்த்தனை செய்வர். முகமதியர்கள் 'சாலமாம் யோகம்' என்ற ஒன்றையும் கூறுகின்றனர். இது மூலக்குழியில் நின்ற முனைச்சுழியை அறிவதற்குக் கைகொடுக்கும்.

## 2.6 அட்டாங்க யோகம்

"இயம நியம மாதனம் பிராணா
யாமம் பிரத்தியா காரந் தாரணை
தியானம் சமாதியென் றட்டாங்க யோகம்"[48]

என்று பிங்கல நிகண்டும் அட்டாங்க யோகத்தை பற்றிக் குறிப்பிடுகிறது.

அட்டாங்க யோகம் என்பது யோகத்தின் எட்டு உறுப்புகளை உள்ளடக்கியதாகும். அவை இயமம (தவிர்க்கப்பட வேண்டியவை), நியமம் (கடைப் பிடிக்க வேண்டியவை), ஆசனம் (உடம்பை இறுத்திக் கொள்ளும் முறைகள்), பிராணாயாமம் (மூச்சுக்கட்டுப்பாடு), பிரத்தியாகாரம், புலன் அடக்கம், தியானம், ஆழ்ந்த ஒருமை உணர்வு, தாரணை, மனம் ஒரு நிலைப்படுத்தல், சமாதி, முற்றடங்கல் இவற்றில் கடைசி மூன்றும் தியானம் பற்றியவை ஆகும். இது சம்யம யோகம் எனப்படும். முன்னதாகக் குறிப்பிடப்பட்ட ஐந்தும் உடல் தொடர்பானவை, எனவே இது கிரியா யோகம் எனப்படும்.

இந்த எட்டு வழிமுறைகளையும் மேற்கொள்பவர்களுக்கு ஞானவாசல் திறக்கும் என்பது சித்தர்வாக்கு. அவன் பிறப்பு இறப்பு என்னும் சுழலில் இருந்து விடுபட்டு மரணம் இலாப்பெருவாழ்வை எய்துகிறான் என்று ஞானிகள் கூறுகிறார்கள் என்று சித்தர் இலக்கியம் நுல் குறிப்பிடுகின்றது.

### 2.6.1 திருமூலர் கூறும் அட்டாங்கம்

திருமந்திரம் யோக நூலாகவும், அனுபவ நூலாகவும் அமைந்து, மனிதன் நிலைபேறுடைய வாழ்க்கையை வாழ்வதற்குரிய நெறிகளை எடுத்துரைக்கிறது. திருமூலர் பல்வேறு வகையான யோக நெறிகளை மொழிந்திருந்தாலும் அவற்றுள் அட்டாங்கயோகம் சிறப்புடையதாக விளங்குகிறது. உள்ளத்தினைக் குவித்து, ஒருமுகப்படுத்துதற்குரிய யோக நெறியாக அட்டாங்கயோகம் அமைந்துள்ளது. அட்டாங்கயோகம் விளக்கம்: அட்டாங்கம் என்பதற்கு எட்டு உறுப்புகள் என்று பொருள். (அட்டம் - எட்டு: அஷ்டம் என்பது அட்டம் எனத் தமிழில் வழங்கப்படுகிறது. அங்கம்-உறுப்பு) அட்டாங்கம் இவைஇவை என்பதனை,

> ‘‘இயமம் நியமமே எண்ணிலா ஆதனம்
> நயமுறு பிராணாயாமம் பிரத்தியாகாரம்
> சயமிகு தாரணை தியானம் சமாதி
> அயமுறும் அட்டாங்கம் ஆவதும் ஆமே’’[49]

என்று திருமூலர் தெளிவுறுத்துகிறார். அட்டாங்கயோகத்தின் எட்டு உறுப்புகளாக,

.1 இயமம்

.2 நியமம்

.3 ஆதனம்

.4 பிராணாயாமம்

.5 பிரத்தியாகாரம்

.6 தாரணை

.7 தியானம்

.8 சமாதி

ஆகியவை அமைந்துள்ளதனை மேற்கண்ட பாடல் வரிகள் எடுத்தியம்புகின்றது. இவை யோக உறுப்புகளாகும். இவ்வுறுப்புகளையே திருமூலர் அடைமொழி சேர்த்து மொழிகின்றார்.

**இயமம்:** இயமம் என்பது அனைவரும் கைக்கொள்ள வேண்டிய வாழ்வியற் பண்புகளாகும். யோகியாக விரும்பும் ஒருவன், கொல்லாமை, பொய்கூறாமை, விருப்பு, வெறுப்பு இன்மை, அதிகம் உண்ணாமை, பொறையுடைமை, அடக்கமுடைமை, நடுவுநிலைமை உடைமை எதனையும் மறக்காத ஈகை, மாசில்லாமை, காமம் இன்மை என்பவனாகிய பத்துப் பண்புகளும் முற்ற உடையவனாக இருத்தல் வேண்டும். இப்பத்து இயல்புகளை முழுவதும் பெற்றால் தான் இயமம் இயலும்.

இப்பண்புகள் யாவும் நீதி நூல்கள் பலவற்றிலும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். திருமூலர் இப்பண்புகளைப் பத்து என்று எண் குறிப்பிடாது,

‘‘கொல்லான் பொய்கூறான் களவிலான் எள்குணன்
நல்லான் அடக்கமுடையான் நடுச்செய்ய
வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கள்காமம்

இல்லான் நயமத் திடையில் நின்றானே''[50]

என்று குறிப்பிடுகின்றார். ஏனெனில் இவற்றுடன் பொருத்தமுடன் அமைகின்ற பிற பண்புகளையும் யோகி ஒருவன் கைக்கொண்டு ஒழுகுதல் வேண்டும் என்பதனாலேயே திருமூலர் எண்ணிக்கை கூறவில்லை. நச்சினார்க்கினியர் இயமத்தின் பண்புகளை,

''பொய்க்கொலை களவே காமம் பொருள்நசை
இவ்வகை ஐந்தும் அடக்கியது இயமம்''[51]

என்று ஐந்தனுக்குள் அடக்கிக் கூறுகிறார்.

**நியமம்:** நியமம் என்பது ஒழியாது மேற்கொள்தலாம். சிவபிரானைச் சத்தியோடும் உடனாகி நிற்பவனாக உணர்பவனே நியமத்தில் நிற்கவல்லவன் ஆவான். இதனை,

''தவம் செபம் சந்தோடம் ஆத்திகம் தானம்
சிவன் தன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகம்சிவ பூசைஒண் மதிசொல் ஈரைந்து
நிவம்பல செய்யின் நியமத்த னாமே''[52]

என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

தவம் என்பது நெறிபிறழா ஒழுக்க வாழ்க்கையாகும். செபம் (ஜெபம்) என்பது வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் மந்திரங்களை மிகுதியாக ஓதுதல் ஆகும். சந்தோடம் (சந்தோஷம்-மகிழ்ச்சி) என்பது உள்ளது போதும் என்ற மனநிறைவுடைமையாகும். ஆத்திகம் என்பது நூல்களில் கூறப்பட்டிருக்கும் கடவுள் உண்மை, இருவினை, மறுபிறவி, சொர்க்க நரகக் கோட்பாடுகள் இவற்றை ஏற்றுக் கொள்ளும் பணிவுடைமை ஆகியவற்றைக் குறிக்கும்.

நல்வழியில் உழைத்து ஈட்டிய தனது பொருளை உயர்ந்தவர்களுக்குக் கொடுத்துதவும் கைவண்மையைத் தானம் என்பது குறிக்கும். சிவபிரானுக்கு உரிய சிறப்பு வாய்ந்த நாள்களில் தவச் செயல்களை மிகுதியாகச் செய்வது விரதம்

ஆகும். சிவ ஆகமங்களின் ஞானபாதப் பொருளைக் கேட்பது கேள்வியாகும். மகம் என்பது யாகத்தினைக் குறிக்கும். இயன்றபொழுது நெருப்புக் கடவுள் வழியாக வேள்விகள் செய்தலும், செய்வித்தலும் மகம் எனப்படும். சிவலிங்கத் திருமேனிக்குரிய வழிபாட்டினை மெய்யன்புடன் விடாது மேற்கொள்வது பூசையாகும். ஒண்மதியாவது நற்பண்புகளைப் பெற்று ஒழுகும் அறிடைமையினைக் குறிக்கும்., என்பதனைத் தவிர ஒத்தன பிறவும் நியமமாகக் கொள்ளப்படும். இந்நியமத்தினை நச்சர்,

''பெற்றதற் குவத்தல் பிழம்புநனி வெறுத்தல்
கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை
பூசனைப் பெரும்பயன் ஆசாற்(கு) அளித்தலொ(டு)
நயனுடை மரபின் நியமம் ஐந்தே''[53]

என்று ஐந்துறுப்பாகக் கூறுகிறார்.

**ஆதனம்:** 'ஆதனம்' என்பது 'ஆசனம்' என்று வழங்கப்பெறுகிறது. அதாவது, இருக்கும் முறை. யோகம் புரிவதற்குக் கை, கால், உள்ளிட்ட உடல் உறுப்புக்களைத் தக்கவாறு அமைத்துக் கொண்டு அமர்ந்திருக்கும் முறையினை இ∴து குறிக்கும். யோக நிலையில் பல ஆசன நிலைகள் உள்ளன என்பதனை,

''பங்கயம் ஆதி பரந்தபல் ஆதனம்
அங்குள ஆம்இரு நாலும்''[54]

எனத் திருமூலர் கூறுகிறார்.

ஆசனங்கள் பங்கயம் (பதுமம்-தாமரை) ஆகியவற்றின் வடிவத்தால் அந்தந்தப் பெயரைப் பெற்றுப் பரந்து விரிந்துள்ளன என்று திருமூலர் உரைக்கின்றார். மேலும், பதுமாசனம்(தாமரை), பத்திராசனம்(பத்திரம்-வாள்), குக்குட ஆசனம் (குக்குடம்-கோழி), சிங்காசனம் எனும் நால்வகை ஆசனங்கள் தமக்குள் சிற்சில வேறுபாடுகளை உடையவை என்கிறார். மேற்கூறிய

ஆசனங்களை மட்டுமின்றி, கோமுகாசனம், வீராசனம், சுகாசனம், சுவத்திகாசனம் என்பனவற்றையும்,

''பத்திரம் கோமுகம் பங்கயம் கேசரி
சொத்திரம் வீரம் சுகாதனம் ஓர்ஏழும்
உத்தமாம் முதுஆசனம் எட்டெட்டுப்
பத்தொடு நூறு பலஆசனமே''[55]

என்ற பாடலில் தெளிவுறுத்துகிறார். பதஞ்சலி சூத்திரம் உள்ளிட்ட வேறுசில நூல்கள் தனுசு, மயூரம், மண்டுகம், சிரசு போன்ற ஆசனங்ளையும் எடுத்துரைக்கின்றன. இவையாவும் மேற்கூறிய எட்டுவகைப் பெரும் பிரிவுகளின் கீழ் சிறிது வேறுபாட்டுடன் விளங்குவனவாகும்.

**பிராணாயாமம்:** மூச்சுப் பயிற்சி பற்றியது பிராணாயாமம். இப்பகுதி திருமந்திரத்தின் தலைமையானதாகத் திகழ்கிறது. இப்பிராணாயாமம் மூன்று பகுதிகளை உடையது அவையாவன பூரகம், கும்பகம், இரேசகம் என்பன. வெளிக்காற்று உடலுள் புகும்படி யோகப்பயிற்சி செய்பவன் (சாதகன்) இழுத்துக் கொள்ளுதலாகும். இதன் உயர்ந்த அளவு பதினாறு மாத்திரை. இதனை இடைநாடியில் இடமூக்கு வழியாகச் செய்தல் வேண்டும்.

கும்பகம் என்பது, உட்புகுந்த காற்று அங்கேயே அடங்கி நிற்கும்படி புறத்தில் ஓட ஒட்டாது தடுத்தலாம். இதன் பேரளவு அறுபத்து நான்கு மாத்திரையாகும். இரேசகம் என்பது உள்புகுந்து நின்ற காற்றை வெளியேறும்படி யோகப்பயிற்சி செய்பவன் (சாதகன்) உந்துதலாம். இதன் உயர்ந்த அளவு முப்பத்திரண்டு மாத்திரைப் பொழுதாகும். இம் மூன்றும் ஒரு முறை இவ்வளவில் அமைவது ஒரு முழுநிலைப் பிராணாயாமம் ஆகும். தகுந்த ஆசிரியர் மூலம், நேரடியாகப் பயிற்சி பெற்று, பிராணாயாமம் செய்துவரின் அளப்பரிய பயன்களைப் பெறலாம்.

**பிரத்தியாகாரம்:** பிரத்தியாகாரம் என்பது, புலன்களால் பெறப்படும் புலனுகர்வு அனுபவங்களை ஞானேந்திரியங்கள் மனத்திற்குள் செல்ல விடாமல் தடுத்து நிறுத்தி, மனதைக் கட்டுப்படுத்தும் பயிற்சியாகும். மனதைக் கட்டுப்படுத்துவது அவ்வளவு எளிதல்ல. மனம், தான் சார்ந்த பொருளுடன் சேர்ந்து, அந்தப் பொருளேயாகிவிடும். உலகத்துடன் சேரும்பொழுது உலகமாகி விடுகிறது. மனதை பொறி வழியிலிருந்து பிரித்து, அகமுகமாகச் செலுத்த வேண்டுமென்றால், அகத்தே மனத்தைக் காட்டும் அளவுக்கு ஒரு பொருளை வைக்க வேண்டும்.

திருமூலர் இப்பிரத்தியாகாரம் எனும் பகுதியில் பத்து மந்திரங்களில் மனதை, சூட்சும உடலின் கூறுகளாகிய ஆதாரங்களில் நிறுத்த வேண்டும் எனக் கூறுகிறார். மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை எனும் ஆறாதாரங்களில் மனதை நிலை நிறுத்தவேண்டும். அங்ஙனம் நிறுத்தினால் இறைவனை உடம்பினுள்ளே காணலாம். இக்கருத்தினைத் திருமூலர்,

‘‘கண்டுகண் டுள்ளே கருத்துற வசாங்கிடிற்
கொண்டுகொண் டுள்ளே குணம்பல காணலாம்
பண்டுகந் தெங்கும் பழமறை தேடியை
இன்றுகண் டிங்கே இருக்கலு மாமே’’[56]

என உரைக்கிறார்.

**தாரணை:** தாரணையாவது தரிக்கச் செய்தல். புறத்தே புலன்களின் வாயிலாக ஓடிய மனத்தை உள்ளுக்கிழுத்தபின் ஒரு குறியில் நிலைபெறச் செய்தல். மனதை ஆதாரங்களில் தொடர்ந்து ஊன்றி நிற்கச் செய்வது தாரணையாகும்.

தாரணையின் சிறப்பினை பத்து மந்திரங்களில் திருமூலர் தெளிவுறுத்துகிறார். மனதைக் கோணாதபடி புலன்களிடமிருந்து விடுத்து, ஒரு வழியில் செல்வதால், மீண்டும் புறத்தே செல்லாதவாறு தடுத்து நிறுத்தி, பிராணனை சுழுமுனை நாடி வழியாகச் செலுத்தி, ஐம்பொறிகள் செயலற்று இருக்கும் நிலைக்கு வரவேண்டும். இதனைத் திருமூலர் காணக்கண், கேளாச்செவி

என்று குறிப்பிடுகிறார். அவ்வகையில் புருவ மையத்தில் மனதை வைத்து இருப்பவர்களுக்குப் பிறவி வரும் வழியை அடைக்கலாம். இதனை,

''கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்கட்டி
வீணா தண்டூடே வெளியுறத்தான் நோக்கிக்
காணாக்கண் கேளாச்செவி யென்றிருப்பார்க்கு
வாணாள் அடைக்கும் வழியது வாமே''[57]

என்று குறிப்பிடுகின்றார். தாரணைப் பயிற்சிக்கு பிராணாயாமம் இன்றியமையாதது. மனத்தை ஆதாரங்களில் நிறுத்த வேண்டும் எறுவாயை இறுக்கி வைத்துக் கொள்ள வேண்டும். இதுவே மூலபந்தம் என்பது பிராணன் மேல் எழும்ப வேண்டும். இடை, பிங்கலை என்னும் இரண்டு நாடிகள் வழியாகப் பிராணனைச் செலுத்தாது, சுழு முனை நாடி வழியே செலுத்த வேண்டும். அதன்மீது மனதைச் செலுத்தி, வேறு எங்கும் போகாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். ஒவ்வொரு ஆதாரத்திலும் மனதை ஊன்றி அங்குள்ள தெய்வத்தை வழிபட்டு, மடையில் நிற்கும் கொக்குபோல் காத்திருப்பவர்களுக்கு ஆதார யோகம் கைகூடும். இக்கருத்தினை,

''கடை வாசலைக் கட்டி காலை எழுப்பி
இடை வாசல் நோக்கி இனிதுள் இருத்தி
மடைவாயில் கொக்குபோல் வந்தித்திருப்பார்க்கு
உடையாமல் ஊழிஇருக்கலு மாமே''[58]

என விளக்குகிறார்.

தாரணையை ஆதாரப் பயிற்சி வழியாக அடைவது போலவே தத்துவங்களை ஆராய்ந்து, அவற்றை நீக்கிக் கொள்வதில் கவனம் செலுத்துவதன் மூலமும் மனதைப் புலன்களிலிருந்து விடுவித்துக் கொள்ளலாம் என்பார் திருமூலர். இதற்குத் தூல தேகம், ஐம்பூதங்களால் ஆனது என்றும், அவை சூக்கும நிலையில் தன் மாத்திரைகளாக உள்ளன என்றும், மனம், புத்தி ஆகிய சூக்கும உட்கருவிகள் சித்தத்தை மூலமாகப் பெற்றிருக்கின்றன என்றும் தெரிந்து கொண்டு கீழுள்ள கருவிகளை மேலுள்ள காரண கருவிகளில் ஒடுக்கிக் கொள்வதே

தாரணையாகுமென்றும், இதனை மேற்கொள்வதன் வழியாகத் தத்துவ ஞானம் பெற்று, இறைவனோடு ஒன்றியிருத்தலே தாரணையின் சிறப்பான இயல்பு என்பதனை,

‘‘அரித்த உடலை ஐம்பூதத்தில் வைத்துப்
பொருத்த ஐம்பூதஞ் சத்தாதியில் போந்து
தெரிந்த மானாதி சத்தாதியிற் செல்லத்
தரித்தது தாரணை தற்பரத் தோடே’’[59]

என மொழிகிறார்.

**தியானம்:** தியானமாவது ஒன்றையே நினைத்திருத்தல். ஐம்புலன்களையும், புத்தியையும் நீங்கி நிற்கும் நிலையே தியானம் என்பதாம். திருமூலர் தியானத்தை ஒரு ஒழுக்கமாக வைத்து, சிவப்பரம்பொருளை இடைவிடாது சிந்தித்து நிற்பதேயாகும் என்று கூறுகிறார். இதனை பத்தொன்பது மந்திரங்களில் திருமூலர் குறிப்பிடுகிறார். குறிப்பாக மனதை உடலோடும், உலகத்துடனும் கலக்கின்ற ஆதாரங்களை விட்டு, புருவ மையத்திற்கு வந்து அகமுகமாக அங்கே காணப்படும் வெளியில் நிற்பது இந்த தியானத்தின் இயல்பாகும். அந்த வெளியில் தோன்றும் மின்னல் போன்ற ஒளியினை தரிசித்து, அதில் மனதை நிலைபெறச் செய்ய வேண்டும். இதனை,

‘‘ஒண்ணா நயனத்தில் உற்ற ஒளிதன்னைக்
கண்ணாரப் பார்த்து கலந்தங் கிருந்திடில்
விண்ணாறு பாயவெளி கண்டிட வோடிப்
பண்ணாமல் நின்றது பார்க்கலு மாமே’’[60]

என்று திருமூலர் தெளிவுறுத்துகிறார்.

இரண்டு கண்களையும் மூக்குத் துவாரங்கள் இருக்கும் பகுதியில் வைத்துக் கீழ்நோக்கிப் பார்த்திருக்க வேண்டும் அவ்வாறிருப்பின் மன ஓட்டம் நின்று உடம்புக்கு அழிவில்லை என்பதனை,

''நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்குமட் அழிவில்லை
ஒட்டமும் இல்லை உணர்வில்லைத் தானில்லை
தேட்டமும் இல்லைச் சிவனவனாமே''[61]

என்கிறார். யோக நெறியில் தியானம் முக்கியமானது. இ∴து யோகத்தின் யோகம் என விளங்குகிறது.

**சமாதி:** சமாதியாவது உயிரும் இறைவனும் இரண்டற ஒன்றி நிற்றலாம். இயமம் முதலாகவுள்ள படிகளின் முறையே பயின்று வந்தால் சமாதி கைகூடும். அப்போது தலையில் மேல் சகஸ்ரதளத்தில் விந்து(ஒளி) நாதம்(ஒலி) விளங்கிச் சமாதி நிலைபெறும். அந்தமில்லாத சிவபரஞ்சோதி வெளிப்பட்டுத் தோன்றும்.

மனமானது சிவசோதியில் இலயித்திருக்கும்போது பிராணன் இயக்கம் இராது. மனத்திலே ஒரு மகிழ்ச்சியும் ஒருமைப்பாட்டுணர்வும் உண்டாகி உயிர் செயலின்றியிருக்கும். இக்கருத்தினை,

''மன்மனம் எங்குண்டு வாயுவும் அங்குண்டு
மன்மனம் எங்கில்லை வாயுவும் அங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலய மாமே''[62]

என்று திருமூலர் தெளிவுறுத்துகிறார்.

சமாதிநிலை கைகூடியவர் பிராணனையும் மனத்தையும் சிவமாகிய அறிவில் பொருத்தியிருத்தலால் ஐம்புலன்களும் ஒன்றிஒடுங்கி இருப்பர். அவர்களுக்கு மரணம் என்பது இல்லை.

''மேலை வாசல் வெளியுறக் கண்டபின்
காலன் வார்த்தை கனாவிலும் இல்லையே''[63]

என்பது திருமூலரின் வாக்காகும்.

சமாதியில் உள்ளோர் உலக நாட்டத்தை விட்டு அகநாட்டத்தில் பொருந்தியிருப்பார். நாத விந்துமயமான சோதிப்பொருளைச் சகஸ்ரதளத்திலே இவர்கள் பொருந்தியிருப்பாராதலின் உலகக் கவர்ச்சி என்பது இவர்களிடத்தில் இருக்காது. ஆகவே வீணானவற்றைவிட்டு மூலக்கனலோடு மேற்சென்று, சிற்பத்திறம் மிகுந்த இப்புவனங்களையெல்லாம் படைத்துக் கொடுத்த பேரொளியை நாடி மதி மண்டலத்தில் பொருந்தித் தான் என்றும் சிவம் என்றும் பேதமாகாது சாந்த நிலையில் இருப்பதே சமாதியாகும் என்பதனை,

‘‘கற்பனை யற்றுக் கனல்வழி யேசென்று
சிற்பனை எல்லாஞ் சிருட்டித்த பேரொளிப்
பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்றுத்
தற்பர மாகத் தகுந்தண் சமாதியே’’[64]

என்று உரைக்கின்றார் திருமூலர். அட்டாங்க யோத்தில் யோகத்திற்குரிய எட்டு உறுப்புக்களைக் கூறி அதன் வழி யோக நெறிகளை எங்ஙனம் இயற்றல் வேண்டும் என்பதனையும் திருமூலர் தெளிவுற எடுத்தியம்புகிறார்.

பதஞ்சலி யோக சூத்திரத்தில் அட்டாங்கம்

“யம: நியம, ஆஸன, பிராணாயாம
பிரத்யாஹார தாரண தியான ஸமாதய
அட்டாவங்கானி’’[65]

என்று அட்டாங்க யோகம் குறித்து பதஞ்சலி முனிவர் எடுத்தியம்பியுள்ளார்.

### 2.6.2 குதம்பைச் சித்தர் கூறும் அட்டாங்கம்

குதம்பைச் சித்தர் அட்டாங்க யோகத்தைச் சிறந்தது என்றும், இந்த யோகத்தை பெறுவதன் மூலம் மெய்ஞ்ஞானம் அடையலாம் என்கிறார். ஆதனை,

“அட்டாங்க யோகம் அறிந்த மெஞ்ஞானிக்கு
முட்டாங்கம் ஏதுக்கடி – குதம்பாய்
முட்டாங்கம் ஏதுக்கடி’’[66]

என அழகாகக் குறிப்பிடுகிறார்.

### 2.7 புலனடக்கம்

"புலன்களை போகநீங்கீ புத்தியை ஒடுங்கவைத்து இலக்கைப்

போகநின்று இரண்டையும் நீங்கி ஒன்றாய் மலங்களை மாற்ற

வல்லவர் மனத்தினுட் போகமாகி சின்னங்களைக் களைவர் போலும்"[67]

உடலும் உள்ளமும் அறிவும் யோக நெறியில் ஒன்றோடு ஒன்று ஒன்றின் முரண்பட்டாலும் யோகநிலை சிதைந்துவிடும் என்று திருநாவுக்கரசர் குறிப்பிடுகிறார்.

"மனமென்னும் மாடு அடங்கில் தாண்டவக் கோனே –முத்தி

வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக் கோனே"[68]

என்று புலனடக்கம் என்பது மனிதனை எந்த அளவிற்கு வளப்படுத்தும் என்பதை இடைக்காட்டுச் சித்தர் இப்பாடலில் விளக்கியுள்ளார்.

கண்ணாடியில் பிம்பம் தெளிவாக இருக்க வேண்டுமென்றால் அதன் மீது படிந்துள்ள தூசு அகற்றப்படல் வேண்டும். அது போல யோக சாதகத்தில் புலன்களின் காரியங்கள் என்னும் தூசியினை முழுவதுமாக நீக்குதல் வேண்டும் என்கிறார் திருமூலர்.

### 2.8 குண்டலினி

குண்டலினி என்பதன் உட்பொருள் குண்டம்,ஒளி ஸ்ரீ குண்டஒளி அல்லது குண்டு ஒளி, ஸ்ரீ குண்டலினி. இதில் தான் ஒளி மண்டலம் உள்ளது. இந்த குண்டலினி சக்திக்குள்ளே மனம் இலயமாகி கரைந்து விட்டால் மனம் செயல்படாது. மலத்துவாரத்திற்கு கீழே இரண்டு விரற்கிடையே மேலேயும் நீர்த்துறைக்குக் கீழேயும் குண்டலினி, பாம்பு போல சுருண்டு கிடக்கிறது. அவனே இறைவன் என்று அடையாளம் காட்டுகிறார் திருமூலர்.

குண்டலினி சக்தியின் இருப்பிடத்தைக் குறிக்கும் போது, சிவவாக்கியர்

"கருக்கொளாத குழியிலாத காலிலாத கண்ணிலே

நெருப்பறை திறந்தபின்பு நீயுநானு மீசனே”[69]

என்று பாடியுள்ளார். பாம்பாட்டிச் சித்தர் குண்டலினியைப் பற்றிக் குறிப்பிடும் போது,

“ஊசித்துளைக் குடத்தினிற் பாம்பை யடைப்போம்”

என்று பாடியுள்ளார். சுழுமுனை நாடியின் வாய் மிகச் சிறியது. அதனால் தான் அதனை ஊசித்துளைக் குடம் என்று குறிப்பிட்டுள்ளார்.

“ஆற்றுமென்ற குண்டலினிக்குள் நடனங் கண்டால்

ஆதித்தன் கோடியைப் போல் காந்தி காணும்”[70]

என்று “கோடி சூரியனைப் போன்ற பிரகாசத்தை, குண்டலினி நெருப்பு தரும்” என்று சட்டைமுனி நாயனார் பாடியுள்ளார்.

### 2.9 நாடி யோகம்

சித்தர்கள் உடலில் உள்ள நாடிகளைக் கண்டு, அதனை வாசி யோகம் மூலமாக இயக்கி யோகத்தில் வெற்றி அடைந்துள்ளனர். நாடிகளின் இயக்கத்தினைப் பற்றிக் கூறும் போது,

“மெய்யெல்லாம் ஆகி நரம்போடு எலும்பிசைந்து

பொய்யில்லை நாடிப் புணர்வு”[71]

என்று அவ்வையார் தமது ஞானக் குறளில் பாடியுள்ளார். நாடிகள் எழுபத்திரண்டாயிரம் என்றாலும் அதில் மிக முக்கியமானவை பத்து.

இடைகலை - இடைமூச்சு

பிங்கலை - வலதுமூச்சு

சுழுமுனை - நடுமூச்சு

சிகுவை - உள்நாக்கு

புருடன் - வலக்கண்

காந்தாரி - இடக்கண்

அத்தி - வலச்செவி

அலம்புடை - இடச்செவி

சங்கினி - கருவாய்

குகு - மலவாய்

திருமூலர், இந்நாடிகளைப் பற்றி, தம் திருமந்திரத்தில் கூறும் போது,

"ஏலங்கொண்டு ஆங்கே இடையொடு பிங்கலை

கோலங்கொண்டு ஆங்கே குணத்துடன் புக்கு"[72]

என்று நாடிகளைப் பற்றி பாடியுள்ளார்.

யோக நிலையில் இறைவனை அடைய வழிகளாக தொண்டு, வழிபாடு, இணைப்புறவு, பேரறிவு எனவும், சரியை, கிரியை,யோகம், ஞானம் எனவும் சாத்திரங்கள் குறிப்பிடுகின்றன. இதனைத் திருமூலர்

சரியை - தச மார்க்கம்
கிரியை - சற்புத்திர மார்க்கம்
யோகம் - சக மார்க்கம்
ஞானம் - சன் மார்க்கம்

என விளக்குகிறார்.

## 2.10 இராஜ யோகம்

யோகங்களில் தலையாயது இராஜயோகமாகும். இது எட்டு படிகளாக வகுக்கப்படுகின்றது. அவை

- கொல்லாமை
- பொய் சொல்லாமை
- களவு செய்யாமை
- மனத்தைப் புலன்வழிச் செல்லாது தடுத்தல்
- பிறர் தரும் கொடையினை ஏற்றுக் கொள்ளாமை

என்ற இவ்வைந்தும் அடங்கிய இயமமே இராஜயோகத்தின் முதற்படியாகும்.

இரண்டாம்படி - நியமம்

மூன்றாம்படி - ஆசனம்

நான்காம்படி - பிராணாயாமம்

ஐந்தாம்படி - பிரத்தியாகாரம்

ஆறாம்படி - தாரணை

ஏழாம்படி - தியானம்

எட்டாம்படி - சமாதி

இதயத்தில் இறைவனைப் பூசிக்க வேண்டும், அவாறு சாதகர்கள் இறைவனை ஞானத்தில் சிந்திக்க வேண்டுமென்று திருமூலர் கூறுவார்.

## 2.11 இயமம்

இயமம் என்றால் தீயனவற்றைச் செய்யாமல் நன்முறையில் மட்டும் வாழ்வை நடத்துதல் என்பதாகும்.

இயமம் - இவ்வுலகைச் சார்ந்த நல் ஒழுக்கங்களையும்

நியமம் - ஒழுக்கத்தின் முலம் ஆத்ம சுகத்தையும'

ஆசனம் - பயிற்சி நிலைகளையும்

பிராணாயாமம் - மூச்சுப் பயிற்சி முறைகளையும்

பிரத்தியாகரா - மனம் புலன் கவர்ச்சியிலிருந்து திசை திரும்பி, சுகத்தை நோக்கும் பயிற்சியையும் அதாவது புலனடக்கத்தையும் மேற்கொள்ளுதல்

தாரணை - மன ஒருமைப்பாட்டையும், தியானம் தியானத்தையும்

சமாதி - ஆதிக்குச் சமமான சாத்வீக பேரின்ப நிலையை அடைவதையும் குறிக்கும்

### 2.11.1 தொல்காப்பியத்தில் இயமம்

இயமம் என்பது பொதுவாகத் தீயனவற்றில் மனம் போகாமல் கட்டுபடுத்துதல் என்பதாகும். இதனைத் தொல்காப்பியர், பொய் கொலை களவே காமம் பொருணசை இவ்வகை ஐந்தும் அடக்கியதே இயமம் எனப்படுகின்றது.

கொல்லாமை, பொய்யாமை, களவாடாமை, எண்குணம், நல்லதன்மை, அடக்கமுடைமை, நடுவுநிலைமை, பகுத்துண்ணல், மாசிலாமை, கள் குடியாமை, காமமின்மை என்ற இச்செயல்கள் இயமம் எனப்படும். இவற்றில் ஒழுகி வாழ்வோன் இயம வழியில் நின்றோனாகின்றான். அவனை இயமத்தன் எனத் திருமூலர் குறிப்பிட்டுள்ளார்

### 2.11.2 திருக்குறளில் நியமம், இயமம்

சித்தர்களுள் ஒருவரான திருவள்ளுவர் அட்டாங்க யோகநெறிகளுள் குறிப்பிடத்தக்கதாக விளங்கும் நியமம், இயமம் பற்றி தெளிவுற எடுத்துரைக்கின்றார். நியமம் என்பதனை யாமா(லயஅய) என்றும் குறிப்பர். இதற்குக் கட்டுப்பாடு என்று பொருள் கொள்ளலாம். யோக நெறியில் ஈடுபடுபவன் சுய கட்டுப்பாட்டாளானாகச் சில விதிகளை கடைபிடித்தல் வேண்டும். தன்னைக் கட்டுப்படுத்தி ஆளும் ஆற்றளுடையவனால்தான் மற்றவற்றையும் கட்டுப்படுத்த முடியும். இது தன்னாளுமைப் (Personality) பண்புகளில் ஒன்றாகும். உளத்திற்குத் தீயன செய்கின்ற செயல்களை விலக்குகின்ற போது அகத்தூய்மையைப் பெற முடிகின்றது. அகத்தூய்மை பெற்றவர்களால் தான் புறத்தூய்மையை எளிதில் பெற இயலும்.

திருக்குறளில், இயம யோக நெறி அடக்கம் உடைமை அதிகாரத்தில் இடம்பெற்றுள்ளது. அடக்கம் அனைத்து உயர்வுகளையும் நல்கும் தன்மையுடையது. அதனால் அவ்வடக்கத்தைப் பொருளாகக் கருதிக் காத்தல் வேண்டும். உயிருக்கு அடக்கத்தைப் போன்ற செல்வம் வேறுளதுவும் கிடையாது.

ஆமைபோன்று ஐம்பொறிகளையும் அடக்கி வாழ வேண்டும் அது மிகப்பெரிய ஆற்றலாக வெளிப்படும் என்பதனை,

> ‘‘ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
>
> எழுமையும் ஏமாப்பு உடைத்து’’[73]

என வள்ளுவர் எடுத்துரைக்கின்றார்.

அடக்கத்தில் சிறந்தவனின் தோற்றம் மலையைவிட உயர்ந்தது என்பதை,

> ‘‘நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
>
> மலையினும் மாணப் பெரிது’’[74]

என்று மொழிகிறார்.

பதஞ்சலி முனிவர் அகிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், ஆசை இன்மை ஆகிய ஐந்து கட்டுப்பாடுகளை இயம நெறியில் எடுத்து மொழிகின்றார். இதனையே திருவள்ளுவரும் இன்னாசெய்யாமை, வாய்மை, கள்ளாமை, துறவு, அவா அறுத்தல் என்று திருக்குறளில் எடுத்துரைக்கின்றார்.

### 2.11.2.1 இன்னாசெய்யாமை

பிறருக்கு உடலாலோ, உள்ளத்தாலோ எந்தவிதத்திலும் துன்பம் செய்யாமையை அகிம்சை என்று கூறுவர். சொல்லாலும், செயலாலும் நாம் பிறரைத் துன்புறுத்துகின்றபோது மற்றவர் அதனைப் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள். இது இயம நெறியில் முதன்மையான இடத்தைப் பெறுகின்றது. யாருக்கும் எந்தக் காலத்திலும் எந்தத் தீங்கும் செய்தல் கூடாது என்பதை,

> ‘‘எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
>
> மாணாசெய் யாமை தலை’’[75]

என வள்ளுவர் மொழிகின்றார்.

**2.11.2.2 வாய்மை**

வாய்மையே நிலையானது. இதனைச் சத்தியம் என்பார் பதஞ்சலி முனிவர். வாய்மை என்றும் மாறாததும் நிலையானதும் முழுமையானதும் ஆகும். இறைவனை அறிவதற்கு வாய்மைநெறியே அடிப்படை நெறியாகும். வாய்மை உடல், உள்ளம், செயல் ஆகிய அனைத்திலும் தூய்மையாக இருப்பதைக் குறிக்கின்றது. இத்தகைய நெறியை,

''மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம்செய் வாரின் தலை''[76]

என வள்ளுவர் மொழிகின்றார். ஒருவன் தன் மனத்தொடு பொருந்த வாய்மையைச் சொல்வானாயின் அவன் தவமும் தானமும் செய்வாரைவிடச் சிறந்தவன் ஆவான் என்பதே இதன் உட்பொருளாகும்.

**2.11.2.3 கள்ளாமை**

மனிதன் விலக்குவதற்குரிய பண்புகளில் முதன்மையானது பிறர் பொருளைத் திருடாமை ஆகும். இத்திருட்டு தனிமனிதனையும் சமுதாயத்தையும் சீர்குலைக்கும் தன்மை உடையது. நமக்கு எது உரிமையில்லையோ, எது மற்றவர்களின் உடமையோ அதனைத் தமதாக்கிக் கொள்வதே கள்ளாமை என்ற திருட்டாகும்.

வள்ளுவர் பிறரது பொருளை வஞ்சித்து அடைய நினைக்கக் கூடாது. பிறர் பொருளை விரும்பா உள்ளத்துடன் வாழ்தல் வேண்டும் என்கிறார். உள்ளத்தால்கூடப் பிறர் பொருளைக் கவர நினைக்கக் கூடாதென்பதை,

''உள்ளத்தால் உள்ளலும் தீதே பறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்''[77]

என வலியுறுத்துகின்றார் வள்ளுவர். இயம நெறியில் தலையாய நெறியாக இ.்.து தெளிவுறுத்தப்படுவது நோக்கத்தக்கது. திருடுகின்ற எண்ணம் உடையவருக்கு மனம் ஒரு நிலையில் இராது. அங்குமிங்கும் அலைந்து கொண்டே

இருக்கும். ஒழுக்கம் குன்றும். யோகநெறி கைகூடாது. அதனால் திருடும் பண்பை விட்டொழிக்க வேண்டும் என்று யோகநெறியாளர்கள் மொழிகின்றனர்.

**2.11.2.4 துறவு**

இதனைப் பிரம்மச்சரியம் என்று பதஞ்சலி முனிவர் குறிப்பிடுகின்றார். மனிதன் ஐம்புலன்களையும் கட்டுப்படுத்தி வாழும் வாழ்க்கையே பிரம்மச்சரியம் எனப்படும். மனிதனிடம் இயக்கம், வளர்ச்சி ஆற்றல்கள் மட்டும் இருக்கவில்லை. மறு உற்பத்தி ஆற்றலும் இருக்கின்றது.இதனை நெறிப்படுத்தவும், முறைப்படுத்தவும் வேண்டும். அவ்வாறு செய்யாவிடில் அது பெருங்காமமாக (ஆசை) உருவெடுக்கும். இக்காமம் உள்ளம், அறப்பண்பு, அறிவு, உடல் வளர்ச்சி ஆகியவற்றில் பல்வேறுவிதமான எதிர்விளைவுகளை ஏற்படுத்தும்.

துறவு என்பது இல்லற வாழ்க்கையை முற்றிலும் துறத்தல் என்பது அல்ல. தாமரை இலைத் தண்ணீர் போன்று உலக வாழ்வில் இருத்தலையே இ∴து குறிக்கின்றது. யோக நெறியில் ஈடுபடுபவர்கள் முற்றிலும் இல்வாழ்வைப் புறக்கணித்தல் தேவையன்று. இல்வாழ்வில் ஈடுபட்டுக் கொண்டே யோகநெறிகளைச் செய்யலாம். அதற்கு ஐம்புலன்களையும் அடக்கி ஆள வேண்டும். இதனை,

''அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு''[78]

என்று வள்ளுவர் எடுத்தியம்புகின்றார். ஐம்பொறிகட்கும் உரியவாகிய ஐம்புலன்களையும் வெல்லுதல் வேண்டும். விரும்பிய பொருள்களின் மீது கொண்டுள்ள பற்றுதலையும் ஒருங்கே விடுதல் வேண்டும் என்று துறவு என்ற நெறியில் இயமநெறியை வள்ளுவர் தெளிவுறுத்துகின்றார்.

**2.11.2.5 அவா அறுத்தல்**

இதனை பதஞ்சலி முனிவர் அபரீகிரகா என்று மொழிகின்றார். அடுத்தவர்களுடைய பொருட்களைத் தனதாக்கிக் கொள்ளும் ஆசையை விட

வேண்டும். ஒருவனை வஞ்சித்து எதனையும் கவர்தல் கூடாது. ஆசை இல்லாதவர்க்குத் துன்பம் இல்லை. அது இருக்குமானால் எல்லாத்துன்பங்களும் மென்மேலும் வளர்ந்து வரும். அதனால் அவ்வாசையை அறுத்தொழிக்க வேண்டும் என்பதை,

''அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்''[79]

என்று வள்ளுவர் மொழிகின்றார்.

### 2.11.3 பதஞ்சலி யோக சூத்திரத்தில் இயமம்

"அஹிம்ஸா ஸத்யாஸ்தேய ப்ரஹ்மசர்ய பரிக்ரஹா யமா"[80]

அஹிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மசர்யம், அபரிக்ரஹம் என்ற ஐந்து குணங்களையும் இயமமாக பதஞ்சலி முனிவர் குறிப்பிடுகின்றார்.

### 2.11.4 அட்டாங்க யோக சூத்திரத்தில் இயமம்

"சௌசம் பிரம சரியம் மித வூண்
கமை கொல்லாமையே கள்ளாமை யார்ச்வந்
தையேந் தயை நற் சத்திய மென்றே
யியமம் பத்தா வியம்பப் படுமால்"[81]

இயமம் முறையே சௌசம், பிரம்மச்சரியம்,மிதவுணவு, கமை, கல்லாமை, ஆர்ச்சவம், தைரியம், தயை, நல்ல சத்தியம் என்ற பத்து தன்மைகள் உடையதாய் உள்ளது.

யோகம் செய்வதற்குரிய தகுதிகளை மேற்கூறிய கருத்துகள் விளக்குகின்றன. கொலை செய்பவனும், பொய் சொல்பவனும், திருட்டு தொழில் புரிபவனும், பெண்களிடம் தவறாகத் தொழில் செய்பவர்களும் யோகம் செய்யத் தகுதியற்றவர்கள் என்பது சித்தர்கள் பாடல்கள் வழி வெளிப்படுகின்றன. இயமம் என்னும் முதற்படியானது ஆற்றல் விரயத்தைத் தவிர்ப்பதற்கான வழிமுறைகளைக் கூறுகிறது.

இயமம் என்பது தீயனவற்றை செய்யாமல் இருப்பது, அத்தகு தீயனவற்றில் காமம் இல்லாமை பற்றி பதஞ்சலி முனிவரும், பாம்பாட்டிச் சித்தரும் தம் பாடலில் தரும் விளக்கங்கள்

### 2.12 நியமா

நியமம் என்பதற்கு நல்லனவற்றைக் கடைப்பிடித்தல் (observances) என்பது பொருளாகும். நாள்தோறும் மனிதன் கடைபிடிக்கவேண்டிய வாழ்வியல் நெறிமுறைகளை நியமம் என்பது நமக்குத் தெளிவுறுத்துகின்றது. தூய்மை, திருப்தி (உளநிறைவு, மனநிறைவு), பிராயச்சித்தம் (கழுவாய்), தற்சோதனை, இறைவனிடம் சரணடைதல் ஆகிய ஐந்து நியமங்களை யோகா குறிப்பிடுகின்றது.

#### 2.12.1 தூய்மை

உடலைப் புறம் என்றும் உள்ளத்தை அகமென்றும் நமது முன்னோர்கள் குறிப்பிடுவர். ஒரு யோகிக்கு உடலும், உள்ளமும் தூய்மையாக இருத்தல் வேண்டும். தூய்மையான உணவு, நீர் உள்ளிட்டவற்றைப் பயன்படுத்தி நமது உடலைச் சுத்தமாக வைத்திருக்கின்றோம். ஆசனங்கள், பிராணாயாமம் (மூச்சுப்பயிற்சிகள்), கிரியைகள் (நற்செயல்கள்) போன்றவற்றைச் செய்து நமது உள்ளத்தைத் தூய்மையாக வைத்திருக்கலாம். யோகிகள் தூய்மையாக இருப்பதற்கான நெறியை,

> ‘‘புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
> வாய்மையாற் காணப் படும்’’[82]

என்று திருவள்ளுவர் எடுத்துரைக்கின்றார்.

உடம்பு தண்ணீராலும் உள்ளம் உண்மையாலும் தூய்மையாகும் என்பது வள்ளுவரின் தெளிந்த ஞானவிளக்கமாகும்.

மனதுள் எந்தவிதமான தீய எண்ணங்களையும் வரவிடாது ஒருவன் நல்லொழுக்கத்தைக் கடைபிடித்து வாழ வேண்டும். அதுவே உளத்தூய்மைக்கு உகந்த நெறி என்பதை,

‘‘மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்

ஆகுல நீர பிற’’[83]

என்ற குறள்வழி திருவள்ளுவர் மொழிகின்றார்.

**2.12.2 திருப்தி**

இதனை உளநிறைவு அல்லது மனநிறைவு என்பர். ஒவ்வொருவரும் நிறைவான மனநிலையுடன் வாழ்தல் வேண்டும். அவ்வாறு வாழ்வது யோகநெறியில் நம்மை உயர்ந்த நிலைக்கு இட்டுச்செல்லும். நமது முன்னோர்கள், ‘‘போதுமென்ற மனமே பொன்செய்யும் மருந்து’’ என்று கூறியிருப்பதும் நோக்கத்தக்கது. நமது தேவைக்குமேல் எதனையும் வைத்துக் கொள்ளக் கூடாதென்ற தெளிந்த உள்ளத்தில் தோன்றிக் கிடைப்பதே மனநிறைவு ஆகும். மனநிறைவடையாதவர்கள் யோகநெறி நிற்றல் அரிதாகும். இதனை வள்ளுவர்,

‘‘இலமென்று வெ∴குதல் செய்யார் புலம்வென்ற

புன்மையில் காட்சி யவர்’’[84]

என்று எடுத்துரைக்கின்றார்.

ஐம்புலன் ஆசைகளையும் வென்ற யோகியர்கள், பிறர் பொருளைக் கவரமாட்டார். ஏனெனில் அவர்கள் உளநிறைவடைந்தவர்கள் ஆவர். மனநிறைவு பெற்றவர்கள் எதற்கும் ஆசைப்படமாட்டார்கள் என்பது வள்ளுவர் எடுத்துரைக்கும் நியமநெறியாகும்.

**2.12.3 பிராயச்சித்தம்** (Tapas Austerity)

இதனைக் கழுவாய் என்று அகரமுதலி குறிப்பிடுகின்றது. எதனைக் கண்டும் கலங்காது பொறுத்துக் கொண்டு அதிலிருந்து மீள்வதைக் கழுவாய் என்பது தெளிவுறுத்துகின்றது. துன்பம் வந்துவிட்டது. அதனைக் கண்டு கலங்கக் கூடாது. அத்துன்பத்திலிருந்து மீள்கின்ற கழுவாயைத் (வழியை) தேடி அதிலிருந்து நாம் மீண்டு வரவேண்டும். இதனை வள்ளுவர் இடுக்கண் அழியாமை என்று

குறிப்பிடுகின்றார். இதனை தவம் என்றும் குறிப்பிடுவர். தவம் என்பதற்கு மனவலிமை, அல்லது மன உரம்(கழசவவைரனந) என்று பொருள்கொள்ளலாம்.

இப்பிராயச்சித்தம் என்பதற்கு நாம் செய்த தவறுகளுக்காக மனம் வருந்தி அதற்குப் பரிகாரம் (விடிவு) தேடுதல் வேண்டும். அதாவது அதற்குரிய நன்மையினைச் செய்துவிடுதல் வேண்டும். துன்பத்தைக் கண்டு துவளக் கூடாது. வரும் துன்பத்திற்குத் துன்பப்படாத மன ஊக்கம் உள்ளவர் எவரோ அவர்துன்பத்திற்குத் துன்பம் தருவர் என்பதை,

''இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்''[85]

என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

### 2.12.4 தற்சோதனை

தற்சோதனை என்பதற்குத் தன்னையறிதல் என்றுபொருள் கூறுவர். அதாவது தன்னைத்தானே சோதனைகளுக்கு உட்படுத்திக் கொண்டு மனஉரத்தை ஏற்படுத்திக் கொள்ளுதலைக் குறிக்கும். மனிதன் அப்போதுதான் பக்குவப்படுகின்றான். அவனுக்கே யோகநெறி கைவரப்பெறுகின்றது. இதனை தவம் என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார். தவம் என்பது ஒரு தற்சோதனையாகும். இதனை யாராலும் செய்ய முடியாது. யோகநெறி நிற்பவர்களால்தான் செய்ய இயலும் என்பதை,

''தவமும் தவமுடையார்க்கு ஆகும் அதனை
அ∴திலார் மேற்கொள் வது''[86]

என்று வள்ளுவர் தெளிவுறுத்துகின்றார். துன்பத்தைப் பொறுத்துக் கொள்வது ஒரு தற்சோதனையாகும். அது யோகநெறி கைவரப்பெறுவதற்கு உரிய வழியாகும். இதனை,

''சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு''[87]

என்று யோகநெறியில் நிற்பவர்கள் செய்யவேண்டிய தற்சோதனை குறித்துப் பெருநாவலர் எடுத்துரைக்கின்றார். நெருப்பு சுடச்சுடப் பொன்னின் ஒளி பெருகுவது போலத்துன்பம் வருத்த வருத்தத் தவம் செய்பவர்க்கு ஞானம் பெருகும் என்பது இதன் உட்பொருளாகும்.

### 2.12.5 **இறைவனிடம் சரணடைதல்** (Iswara Pranidhana)

இறைவனிடம் சரணடைதல் என்பது இறைவனிடம் தன்னை ஒப்புவித்தல் அல்லது அடைக்கலப்படுத்துதல் ஆகும். இதனைச் சரணாகதித் தத்துவம் என்று குறிப்பிடுவர். தான் எனும் அகம்பாவம் இதனால் அழிந்துவிடுகின்றது. எல்லாம் இறைவனின் செயல் என்பதை உணர்ந்தால் எந்தவிதமான துன்பமும் விலகிவிடும். அனைத்து உயிர்களுக்கும் இறைவனே பற்றுக்கோடாக உள்ளான் என்பதை யோகநெறியில் இருப்பவர்கள் உணர்தல் வேண்டும். இதனை,

> ‘‘யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு
> உயர்ந்த உலகம் புகும்’’[88]
> ‘‘பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
> பற்றுக பற்று விடற்கு’’[89]

என்று வள்ளுவப் பெருந்தகை தெளிவுறுத்துகின்றார்.

உடல் பற்றி நான் என்றும், பொருள் பற்றி எனது என்றும் வரும் செருக்கை மனத்துள் இருந்து அறுத்து விட்டவன், வானவர்க்கும் மேலான வீட்டுலகத்தைஅடைவான். பற்றில்லாதவனாகிய கடவுளுடைய பற்றை மட்டும் பற்றிக் கொள்ள வேண்டும், உள்ள பற்றுக்களை விட்டொழிப்பதற்கே அப்பற்றைப் பற்ற வேண்டும். இது இறைவனைச் சரணடையும் வழியாகும். அவ்வாறு தன்னைச் சரணடைந்த யோகியின் துன்பங்களை இறைவன் சுமைதாங்கியாகச் சுமந்து அவனது துன்பத்தைப் போக்குகின்றான்.

அட்டாங்க யோகத்திற்கு இவ்விரு நெறிகளே மூலாதாரமாகத் திகழ்கின்றன. இதனைக் கடைபிடித்தால் மற்ற அட்டாங்க நெறிகள் கைவரப்பெறலாம். இவை

யோக நெறியில் நிற்பவர்களுக்கு உடல் உரத்தையும், உள உரத்தையும் வழங்கி சிறந்த யோகியாக அவர்களை மாற்றும் என்பது திண்ணம். இங்ஙனம் திருக்குறளானது வாழ்வியல் அற நூலாக மட்டுமல்லாது யோகத்தை எடுத்துரைக்கின்ற யோக நூலாகவும் அமைந்திலங்குகின்றது.

**2.12.6 காமம் இல்லாமை பற்றி பதஞ்சலி முனிவர்**

பதஞ்சலி முனிவர் தம் யோக சூத்திரத்தில், பிரம்மச்சரியத்தில் நிலை பெற்றவனுக்கு நிரந்தர இன்பம் உண்டாகின்றது என்கிறார். அவருடைய சூத்திரம்,

"ப்ரஹ்மசர்ய பிரதிஷ்டயாம் வீர்யலாப"[90]

என்று எடுத்தியம்புகிறது.

**2.12.7 காமம் இல்லாமை பற்றி பாம்பாட்டிச்சித்தர்**

மனதை ஒருமுகப்படுத்தினால் மட்டுமே யோகத்தை வெல்ல முடியும். பெண்ணைப் பற்றிய மனச் சலனத்தை நீக்கும் வலிமை பெற வேண்டும் என்பார் பாம்பட்டிச் சித்தர். இதனைத் தம் பாடலில்,

"நெக்கு, நெக்கு உருகிப் பெண்ணை நெஞ்சில் நினைப்பார்
நிமலனை நினையார் என்று ஆடுபாம்பே"[91]

என்று பாடியிருக்கின்றார்.

நியமம் என்பது தனிப்பட்ட மனிதனுக்கு கூறப்படும் வாழ்வியல் நெறிகளாகும். அதாவது அவன் பின்பற்ற வேண்டிய ஒழுக்க நெறிகளாகும். நியம நெறிகளைத் திருமூலர்

"தூய்மை அருளுண் சுருக்கம் பொறை செவ்வை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமம் களவு கொலையெனக் காண்பவை
நேமீயீரைந்து நியமத்தனாமே"[92]

என்கிறார்.

### 2.12.7 பதஞ்சலி உணர்த்தும் நியமங்கள்

பதஞ்சலி முனிவர் தமது யோக சுத்திரத்தில்,

"சௌச ஸந்தோஷதப ஸ்வாத்யாயேச்வர
ப்ரணிதானானி நியமா"[93]

என்றவாறு வரையறை செய்கிறார். சுத்தம், களி, தவம், மறை ஓதல், இறை வழிபாடு என்று வகைப்படுத்துகிறார்.

### 2.12.8 சட்டைமுனிச் சித்தர் கூறும் நியமம்

சட்டைமுனிச் சித்தர் பத்து நியமங்களைத் தம் பாடல்களில் விவரித்துள்ளார். அவை

1. குருவின் நிழல்போல் சிவபூஜை செய்து சச்சிதானந்தமாதல்
2. குரு கூறிய வழி அறிந்து பூரணமாய் முத்தான பராபரத்தைத் தன்னுடல் போல நினைத்து இன்பத்துடன் வாழ்தல்
3. திட்டமுடன் தவம் செய்து வருதல்
4. மனத்தை ஒருமைப்படுத்திச் சச்சிதானந்தம் தானாகி மகிழ்தல்
5. தானிருத்தல் உண்மையென விளம்புதல்
6. தேவியை நினைத்து அறிதல், கேட்டல் என்பதை அறிதல்
7. தேவியை நினைத்து நினைத்து வேதநிலை விடுத்து, உலக ஆசைகளைத் துறந்து வேதாந்தம் கற்றுச் சீருடன் வாழ்தல்
8. வேதாந்தப் பிரமத்தில் நினைப்புடன் வாழ்தல்
9. நாம் பிரம்மமென்னும் தன்மையை விடுத்துச் சிவபிரமத்தை அறிந்து துயரம் வந்தாலும் கலங்காமல் இருத்தல்
10. நாம் பிரம்மமென்றும் வாய் வேதாந்தம் பேசுவதை நிறுத்தி உள்ளார்ந்த அனுபவத்தில் சிவனை உணர்ந்து விரதம் என்பதை அறிதல்

இத்தகைய நியமங்களைக் கடைப்பிடித்து ஒழுகுவதற்கு உறுதியான மனம் வேண்டும் என்கிறார் சட்டைமுனி சித்தர்.

நியமம், மனிதன் பின்பற்ற வேண்டிய நல்லொழுக்கங்களை வரையறுத்துக் கூறுகிறது. மேலும் ஆற்றலை அதிகமாக உற்பத்தி செய்து சேமிக்கும் முறை பற்றியும் இயம்புகிறது. இயமம், நியமம் என்ற இரண்டுமே மனிதனை அறத்தினால் பூரணத்துவம் பெற்றவனாக ஆக்கும் என்பதாகும்.

**2.13 ஆதனம்**

ஆசனம் என்பதையே ஆதனம் என்று குறிப்பிடுகின்றனர். ஆதனம் என்பது அட்டாங்க யோகத்தின் மூன்றாவது நிலையாக விளங்குவது 'ஆசனா' அல்லது நிலை ஆகும். ஆசனம் செய்வதால் உடலில் சமநிலை, ஆரோக்கியம், இலகுவானத் தன்மை ஆகியவை ஏற்படும்.

உடல் உறுப்புகளை உரிய முறையில் மடக்கி, ஒருநிலையில் கொண்டு வந்து அதன் மூலம் மனத்தைக் கட்டுபடுத்தும் இருப்பு நிலைதான் ஆதனம் எனப்படுகிறது.

**2.13.1 பகவத்கீதை காட்டும் ஆசனம்**

பகவத்கீதையில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர், அசையாது அமர்ந்து யோகம் பயில வேண்டும் என்கிறார். அவர் கூறும் சுலோகத்தில்

"உபவிஸ்யாஸநே"[94]

என்ற சொல் இடம் பெறுகிறது. இச்சொல் 'ஆசனத்தில் அமர்ந்து' என்ற பொருளைத் தருகின்றது.

**2.13.2 திருமூலர் உணர்த்தும் ஆசனங்கள்**

ஆசன வகை நூற்றி இருபத்தாறு என்றும் அவற்றுள் ஏழு ஆசனங்கள் உடலுக்கு மேன்மை தரக் கூடியது என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

"பத்திரம் கோமுகம் பங்கயங் கேசரி
சொத்திகம் வீரஞ் சுகாதனம் ஓரேழும்
உத்தம மாமுது ஆசனம் எட்டெட்டுப்

பத்தொடு நூறு பல ஆசனமே”[95]

பத்திரம், கோமுகம், பங்கயம், கேசரி, சத்தியம், வீரம், சுகாதனம் ஆகிய ஏழினையும் முதன்மையான ஆசனங்களாகக் குறிப்பிட்டுள்ளார்.

ஆசனம் என்பது உடலை நீட்டுதல், வளைத்தல், இறுக்கத்தைத் தளர்த்துதல், ஆழ்ந்த மூச்சு, இரத்த ஓட்டத்தை அதிகப்படுத்துதல், நரம்புகளை ஊக்குவித்தல் என்ற அடிப்படைகளில் அமைந்து இருக்கிறது.

சிவபெருமான் 84 இலட்சம் யோகாசனங்களை உலகத்தின் அனைத்து ஜீவராசிகளின் நிலைகளையும் கொண்டு ஏற்படுத்தியதாகச் சொல்லப்படுகிறது. தற்போது நடைமுறையில் மிகக் குறைந்த அளவே ஆசனங்கள் உள்ளன.

ஆசனங்களில் எளிமையான மற்றும் கடினமான ஆசனங்கள் காணப்பட்டன. அவை

எளிமையான ஆசனங்கள்

அர்த்த ஹலாசனம், பவனமுக்தாசனம், அர்த்த புஜங்காசனம், அர்த்த சலபாசனம், அர்த்த தனுராசனம், மகராசனம், வக்ராசனம், வங்ராசனம், யோகமுத்ரா, சக்ராசனம், சவாசனம்.

கடினமான ஆசனங்கள்

சிரசாசனம், சர்வாங்காசனம், ஹலாசனம், மத்ஸ்யாசனம், பச்சி மோஸ்தாசனம், புஜங்காசனம், சலபாசனம், தனுராசனம், அர்த்த மச்சேந்திராசனம், காகாசனம் அல்லது மயூராசனம், பாத ஹஸ்தாசனம், திரிகோணாசனம்.

மத்ஸ்யாசனம்

நுரையீரல் சம்பந்தமான நோய்கள் நீங்க இந்த ஆசனம் பெரிதும் உபயோகமாகும். இது தைராய்டு, பாரா தைராய்டு சுரப்பிகளை பலப்படுத்தும். கழுத்து, இடுப்புப் பகுதியில் ஏற்படும் வலி, இறுக்கம், விரைப்பு நீங்கும்.[96]

நிகுஞ்ஜாசனம்

இந்த ஆசனம் பெண்களுக்கு குழந்தைப்பேறுக்கு முன்னும் பின்னும் பயன் தர வல்ல அருமையான ஆசனமாகும். பிரசவத்திற்குப் பின்னால் இந்த ஆசனத்தைச் செய்தால் கருப்பை குழந்தைப் பேருக்கு முன்பிருந்த நிலைக்குத் திரும்ப வந்துவிடும்.[97]

உஷ்ர்டாசனம்

ஆஸ்த்துமா நோயாளிகளுக்கு மிக நல்ல ஆசனம் நுரையீரல் சுவாச உறுப்புகள் பலமடைந்து நன்கு விரிந்து செயல்படுவதால் நிறைய காற்று உல் சென்று சுலபமாக வெளிவருவதால் ஆஸ்த்துமா, மூக்கடைப்பு, மூச்சுத் திணறல் நீங்கும். மார்பு விரியும். இந்த அட்ரீனலின் ஹார்மோனைச் சுரக்க உதவுகிறது.[98]

விருச்சிகாசனம்

தேளின் வால் பின்னால் உயர்ந்து வளைந்து இருப்பது போல இந்த ஆசனம் இருப்பதால் இப்பெயர் பெற்றது. அதிகபட்சம் முதுகெலும்பு வளைவதால் உடலின் எல்லாத் தசைகளும் இழுக்கப்படுகிறது. இவ்வாசனம் செய்வதால் மூளை உட்பட உடலின் அனைத்துப் பகுதிக்கும் ரத்த ஓட்டம் அதிகமாகும்.[99]

வீரபத்திராசனம்

வீரபத்திராசனம் அடி வயிற்று உறுப்புகளைத் தூண்டி விடுவதோடு கால் தசைகள் சீராகவும் அழகாகவும் இருக்க உதவுகிறது.

“இக்காலத்தில் மக்கள் பலவித நோய்கள் மற்றும் மனத்தைத் திடமாக வைக்க முடியாமலும் துன்பப்படுகின்றனர். எனவே இத்தகு யோகாசனம் பயில்வதால் நல்ல அழகான, திடமான, இலகுவான உடலமைப்பைப் பெற இயலும். யோகாசனம் சோர்வை அகற்றி, நரம்புகளைத் தன்மையாக்கும். உடலை வலிமையாக்குவதோடு மட்டுமல்லாது மனத்தையும் உறுதிப்படுத்தும் என சித்தர்கள் அக்காலத்திலேயே ஆசனங்களைப் பயின்று உடலையும்,மனத்தையும் கட்டுக்குள் வைத்துள்ளனர்.”[100]

## 2.14. பிராணாயாமம்

பிராணன் என்பது உயிர்க் காற்று. அதனை உள்ளிழுக்கும் கால அளவு, உள்ளே நிறுத்தும் கால அளவு, வெளியே விடும் கால அளவு, ஆகியவற்றை வரையறுப்பதே பிராணாயாமம் ஆகும். 'பிர' என்றால் தளர்மையான, உயர்ந்த என்று பொருள். பிராணாயாமம் என்பது 'பிராணனைக் கட்டுதல்' என்பதாகும்.

மூச்சுப்பயிற்சியை மேற்கொள்ளுதல் கூரிய கத்தியின் மேல் நடப்பதற்கு ஒப்பாகும். ஏனெனில், சிறிது பிழையானாலும் உயிருக்குத் துன்பம் மரணம் நேரிடும் என்பர்.

"புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட உள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமம் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே"[101]

பிராணாயாமம் செய்வதன் மூலம் உடம்பு முதுமை அடையினும் பளிங்கினைப் போல் பிரகாசிக்கும், இளமையோடிருக்கும் என்கிறார். மேலும் இதன் மூலம் எமனையே விரட்டும் ஆற்றலைப் பெறலாம் மேலும் சிவபெருமானின் அருளும் கிட்டும் என்கிறார் திருமூலர்.

### 2.14.1 பிராணாயாமம் பற்றி சிவவாக்கியர்

பிராணாயாமத்தினால் இளமை உண்டாகும் என்பதை
"உருத்தரித்த நடிதன்னி லோடுகின்ற வாயுவைக்
கருத்தினாலி ருத்தியே கபாலமேத்த வல்லரேல்
விருத்தரா ரும்பாலராவர் மேனியும் சிவந்திடும்"[102]

என்று உரைக்கிறார்.

### 2.14.2 பிராணாயாமம் பயிலுவதற்கு ஏற்ற சூழல்

பிராணயாமம் பயிலுவதற்கு உரிய இடச்சூழலைச் சித்தர்கள் முதன்மையாகக் கருதுகின்றனர்.

- இயற்கை அழகுடன் கூடிய தனிமையான இடம்
- தூய காற்றோட்டமுள்ள இடம்
- நெல் உமி முதலியவை, தூசிகள் காற்றில் பரவாத இடம்
- கரி, சாம்பல், அழுக்குகள், மக்கிய குப்பைகள், கெட்ட நாற்றமுள்ள பொருட்கள், காற்று மாசுபட்ட சூழலில்லாத இடம்.
- அமைதியும், மௌனமும் நிலைத்திருக்கும் இடம்
- தீய, கொடிய குணமுள்ளவர்கள் முதலியோர் இல்லாத இடம்
- காடுகள், மலைகள், குகைகள், போன்ற வளங்கள் மிகுந்த இடங்கள்

மேற்குறிப்பிட்ட இடங்கள் பிராணாயாமம் செய்வதற்கு உகந்த இடங்களாகும். கோரைப்பாய், மான்தோல், புலித்தோல் போன்றவற்றின் மீதமர்ந்து பிராணயாமம் செய்துவர வேண்டுமெனச் சித்தர்கள் கருதுகின்றனர்.

“அண்டஞ் சுருங்கில் அதற்கோர் அழிவில்லை
பிண்டஞ் சுருங்கில் பிராணன் நிலைபெறும்
உண்டி சுருங்கில் உபாயம் பலவுள”[103]

என்கிறார் திருமூலர். பிராணாயாமம் செய்வதற்கு உணவை சரியான அளவில் எடுத்துக் கொள்வது நலமாயிருக்கும். மேலும் உடல் சுருக்கமும், அளவான முறையில் பெண்போகமும் பிராணாயாமச் செயல் முறையில் வெற்றி அடைவதற்கு இன்றியமையாதவை என்பதனை உணர முடிகின்றது.

## 2.15 பிரத்தியாகாரம்

அட்டாங்க யோகத்தின் ஐந்தாவது நிலை பிரத்தியாகாரம் ஆகும். மனத்தினைப் பொறிகளின் வழியே புறம் போகவிடாமல் உள்முகமாக நோக்குதல்

பிரத்தியாகாரம் மேலும் ஒருவன் தனது சுவாசத்தை இயக்கத் தெரிந்தால் சுவாச ஓட்டத்தைக் கட்டுப்படுத்த முயுமானால், அவனது புலன்களைப் புற விஷயங்களில் அலைய விடாமல் கட்டுப்படுத்த முடியும்.

நாசிமுனைக்கு பன்னிரெண்டு அங்குலம் அளவில் மனத்தினை நிறுத்தி ஒருமையுற்றுத் தியானம் புரிய இயலும் எனின், ஆற்றல் மிக்க சித்த யோகம் கைகூடும் தேகத்துக்கு என்றும் சிதைவில்லை. இங்ஙனம் தியானம் புரிந்துவரின், கண்டத்தானம் ஆகிய விசுத்தியில் விளக்கொளி தோன்றும். அங்ஙனம் தோன்றும் பொழுது பரானந்தம் எனப்படும் மேலான இன்பம் கிடைக்கும். அவ்வொளியினால் தெய்வக் களிப்புடைய உடல் அமையும்.[104]

### 2.15.1 பிரத்தியாகாரம் பற்றி பதஞ்சலி

பிரத்தியாகாரத்தின் பயனாக பதஞ்சலி முனிவர் பின்வருமாறு கூறியுள்ளார்

தத : பரமா வஸ்யேந்திரியாணாம்[105]

நம் விருப்பம் போல் செல்லும் மனப்போக்கைத் தகர்த்தெறியவே பிரத்யாகாரம் தேவைப்படுகின்றது.

புறப்பொருள்களில் சென்று படியாமல் புலன்களை அவற்றின் மூலமான மனத்தில் கரைத்துவிடுதல் அல்லது இறைச் சிந்தனையை உள்ளத்தில் கொண்டு நிற்றல் என்பதே பிரத்தியாகாரம். இதனை

“கண்டு கண்டுள்ளே கருத்துற வாங்கிடிற்
கொண்டு கொண்டுள்ளே குணம் பல காணலாம்
பண்டு கந்தெங்கும் பழமறை தேயை
இன்று கண்டிங்கே இருக்கலு மாமே”[106]

என்று திருமூலர் வரையறுக்கிறார். பிரத்யாகாரம் என்ற ஐந்தாம் படியைக் கடந்தால்தான், ஆறாம் படியான தாரணைக்குச் செல்லத் தகுதி ஏற்படும். பதினெட்டு மர்மஸ்தானங்களான கால் கட்டை விரல், கணுக்கால், கனுக்காலிற்கு மேல் முழங்காலுக்கு கீழுள்ள பாகம், முழங்கால், மலப்போக்குத் துவாரம்,

ஆண்குறி, தொப்புள், ஹ்ருதயம், கழுத்து, தாடை மூக்கு, கண், புருவ மத்தியம், நெற்றி, உச்சந்தலை, இரண்டு கால்கட்டை விரல்கள், இரண்டு முழங்கால்கள் இவற்றில் மனதை பற்றி நிறுத்துதல் பிரத்யாகாரம் என்பதாகும். கடிவாளம் போடப்படாத குதிரை தறிகெட்டு ஓடுவது போன்று ஓடும் மனத்தை அடக்கி வைக்கும் பயிற்சியே பிரத்தியாகாரம் என்று சித்தர்கள் வகுத்துள்ளனர்.

**2.16. தாரணை**

தாரணை என்பதை தாரணா (Dharana) என்றும் குறிப்பிடுவர். தாரணை என்பது மனதை நிலைப்படுத்துதல், அதாவது மன ஒருமைப்பாடு என்பதாகும். மனதைக் கட்டுப்படுத்தி ஒரே பொருளின் மீது கவனத்தை நிலைப்படுத்துதல் என்பதையே தாரணை என்பது குறிப்பிடுகின்றது. மனிதன் தன்னை வெல்வதற்கு உறுதுணையாக இத்தாரணை என்பது விளங்குகின்றது. இத்தாரணை என்பதற்கு இருக்கச் செய்வது மனதை நிலைபெறச் செய்தல் என்று அறிஞர்கள் பொருள் கூறுகின்றனர்.

அலைபாய்கின்ற மனதை அடக்கி ஒருநிலைப்படுத்தி செயலில் ஈடுபட்டால் வெற்றி என்பது மனிதனுக்குக் கிடைக்கின்றது. மனதை ஒருநிலைப்படுத்துவதற்குரிய வழிவகைகள் திருக்குறளில் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. ஐம்பொறிகளையும் அடக்கினால் மனம் அடங்கும்.

**2.16.1 மனம் என்னும் குரங்கு**

மனம் ஒரு பொருள் நாட்டத்தில் இராது. அலைபாய்ந்து கொண்டே இருக்கும். அதனால் தான் மனதைக் குரங்கிற்கு ஒப்பாகக் கூறுவர். குரங்கு ஓரிடத்தில் நிலையாக இராது. அது போன்றே மனமும் ஒன்றில் நிலையாகத் தங்கி இராது. திருமூலர் இதனை,

"நிரம்பிய ஈரைந்தில் ஐந்தவை போனால்
இரங்கி விழித்திருந்து என் செய்வை பேதாய்
வரம்பினைக் கோலி வழி செய்வார்க்குக்

குரங்கினைக் கொட்டைப் பொதியலும் ஆமே''[107]

என்று குறிப்பிடுகின்றார். புலன்களைத் துய்த்து நிரம்பியுள்ளன ஐந்து ஞான இந்திரியங்களும் ஐந்து கா்ம இந்திரியங்களும். இவற்றில் ஐந்து ஞான இந்திரியங்களும் தம் செயல்களில் இருந்து நீங்கி விட்டால் ஐந்து கா்ம இந்திரியங்களால் என்ன செய்ய இயலும்? ஐம்பொறிகளின் எல்லையைத் தாண்டிவிட்டால் மனம் என்னும் குரங்கை எளிதாக அடக்கிவிட முடியும் என்பது திருமந்திரம் மனதை அடக்கக் கூறும் வழிமுறையாகும்.

வள்ளுவப் பெருந்தகை

''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்

எழுமையும் ஏமாப் புடைத்து''[108]

என்று தெளிவுறுத்துகின்றார். ஐம்புலன்களை அடக்கினால் மனதை அடக்கலாம் என்பது வள்ளுவரின் கூற்றாக அமைந்துள்ளது.

### 2.16.2 தாரணைப் பயிற்சி

மனதை அடக்குவதற்குரிய பயிற்சிகள் என்ன? இதனை தாரணைப் பயிற்சி என்பா். மனதில் பற்று ஆசை உள்ளிட்ட தீய குணங்கள் என்பது அறவே இருத்தல் கூடாது. அவ்வாறு இருப்பின் தீய வழியில் சென்று அழிந்து விடுவா். எவற்றிலிருந்து மனதை நீக்கி ஆசையைத் துறக்கின்றானோ அப்போது அவற்றிலிருந்து வரும் துன்பம் ஒருவனை அணுகுவதில்லை. ஒன்றின் மீது பற்றின்றி இருத்தல் வேண்டும் என்பதை

''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்

அதனின் அதனின் இலன்''[109]

என்று வள்ளுவா் குறிப்பிடுகின்றார்.

ஐம்புலன்களை அதனதன் வழியே விட்டுவிடுதல் கூடாது. அவற்றை அடக்குதல் வேண்டும். ஐம்புலன்களையும் அடக்குபவரே யோகத்தில் இலக்கை அடைய இயலும். ஐம்புலன்களும் அடங்கினாலே மனம் அடங்கும். மனம்

ஒருமைப்பட்டால் அனைத்து ஆற்றல்களும் கைவரப்பெறும் என்ற தாரணைப் பயிற்சியினை

"அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்

வேண்டிய எல்லாம் ஒருங்கு"[110]

என்று வள்ளுவர் எடுத்துரைக்கின்றார்.

ஐம்பொறிகளால் அரிக்கப்பட்ட உடலை ஐம்பூதங்களில் ஒடுக்க வேண்டும். அந்த ஐம்பூதங்களை ஐந்து தன்மாத்திரைகளில் அடக்க வேண்டும். ஐந்து தன்மாத்திரைகளை நான்கு அந்தக் கரணங்களில் ஒடுக்க வேண்டும். நான்கு அந்தக்கரணங்களை மாயையில் அடக்க வேண்டும். மாயையை ஆன்மாவில் அடக்கி விட்டு ஆன்மாவைச் சிவத்தில் ஒடுக்க வேண்டும் என்பதனை,

"அரித்த உடலை ஐம் பூதத்தில் வைத்துப்

பொருத்த ஐம்பூதம் சத்தாதியில் போந்து

தெரித்த மனாதி சத்தாதியிற் செல்ல

தரித்தது தாரணை தற்பரத்தோடே"[111]

என்று திருமூலர் எடுத்துரைக்கின்றார். திருமந்திரத்தினை வழிமொழிவதாக,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்

பற்றுக பற்று விடற்கு"[112]

என்ற திருக்குறள் அமைந்துள்ளது. பற்றற்றவன் யார்? அவனே இறைவன். அவ்விறைவனைப் பற்றினால் அவா நீங்கி மனம் ஒருநிலைப்படும். இறைவனையே நினைத்திருந்தால் மனம் ஒருநிலைப்பட்டுவிடும். தீயனவற்றிலிருந்து மனம் விடுபட்டு சீரான நிலைக்கு வரும்.

### 2.16.3 மெய்யுணர்தல்

மனம் மெய்யுணராது இருப்பதாலேயே ஒருநிலைப்படாமல் அலை பாய்கின்றது. உண்மையல்லாதவற்றை உண்மை என்று எண்ணி அறியாமையால்

மயங்கி மனம் தடுமாறுகின்றது. இவ்வாறு தடுமாறுகின்ற மனதை மெய்யுணர வைத்து ஒருநிலைப்படுத்துதல் வேண்டும் என்பதை

"பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும்

மருளானாம் மாணாப் பிறப்பு"[113]

என்று வள்ளுவர் எடுத்துரைக்கின்றார். நிலையாக விளங்குகின்ற கடவுளின் மீது எண்ணங்களைக் குவித்து மனதை ஒருநிலைப்படுத்துதல் வேண்டும். அவ்வாறு இருப்பவர்களைத் துன்பங்கள் தொடராது. மனம் செம்மைப்படும். இதனை

"சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்

சார்தரா சார்தரு நோய்"[114]

என்று வள்ளுவர் எடுத்துணர்த்துகின்றார்.

### 2.16.4 அவா அறுத்தல்

அவாவே வாழ்வில் துன்பத்தை ஏற்படுத்துகின்றது. ஒருவர் ஆசைகளை முழுவதும் அழித்தால் துன்பமின்றி வாழ்வதற்குரிய நல்ல செயல் அவர் எண்ணியவாறு கிட்டும். அவா மனதை அலைக்கழிக்கும் கருவிகளுள் ஒன்று. அவாவாகிய ஆசை அற்றவர்களுக்குத் துன்பம் ஒருபோதும் வராது. அவாவில் மனம் ஈடுபடும்வரை துன்பங்களும் முடிவின்றி வந்துகொண்டே இருக்கும். அவா அறுத்து மனதை ஒருநிலைப்படுத்தும் நிலைப்பாட்டை,

"அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை

தான்வேண்டும் ஆற்றான் வரும்"[115]

"அவாவில்லார்க் கில்லாகும் துன்பம்அ∴ துண்டேல்

தவாஅது மேன்மேல் வரும;"[116]

என்ற குறட்பாக்கள் தெளிவுறுத்துகின்றன.

உலக இன்ப நுகர்ச்சியால் மயங்கி மாறாத இன்ப துன்ப சுழற்சியில் சிக்கும் மனிதன், தன் நுகர்ச்சிக்கு காரணமான உடலின் கண், காது முதலான

அங்கங்களையும் புலன்களையும் அடக்கி மனதையும் அடக்கி இறைவனைக் காண்பதே இறைவனுடன் இணைவதே யோகத்தின் நோக்கம். அதே சமயத்தில் யோகத்தினால் மனித உடலின் மனதின் செயல் வன்மையை - சாத்தியங்களைப் பல மடங்கு அதிகப்படுத்தி, அதை இந்த உலக இன்பத்தைப் பன்மடங்கு அதிகமாக அனுபவிப்பதற்கும் பயன்படுத்த முடியும் .

மனித வாழ்க்கை இன்பங்களுக்கு சரிவிகிதமாக துன்பத்தையும் தருவதாக இருக்கிறது. மூப்பு, பிணி, சாவு ஆகியவை ஒவ்வொருவரையும் தொடர்ந்து கொண்டே இருக்கின்றது. இன்ப துன்பங்கள் நிலையில்லை - நிலையான பேரின்பம் என்று ஒன்று இருக்குமானால் அது இந்த இன்ப துன்பங்களில் இருந்து விடுபடுவது தான். நிலையான பேரின்பத்தைத் தரும் அட்டாங்கயோகத்தின் ஒரு பகுதியாக விளங்கும் தாரணை வழியினைக் குறள் வழி கற்று வாழ்க்கையினைச் செம்மைப்படுத்திக் கொள்ளுதல் வேண்டும். இது சித்தர்களுள் ஒருவராக விளங்கும் வள்ளுவரின் விரிவான விளக்கமாகும். உடம்பானது, ஆசனங்களின் மூலம் பண்படுத்தப்பட்ட போதும், பிராணாயாமத்தின் மூலம் மனமானது சுத்தம் அடைந்தபோதும், பிரத்தியாகாரத்தின் மூலம் புலன்கள் கட்டுப்பாட்டிற்குள் வந்தவுடன், ஒருவர் அட்டாங்க யோகத்தின் ஆறாவது படியான ‘தாரணா’ நிலையை அடைந்து விடுகிறார். இத்தாரணை என்பதற்கு

“அரித்த உடலை ஐம்பூதத்தில் வைத்துப்
பொருத்தஜம் பூதம்சத் தாதியில் போந்து
தெரித்த மனாதிசத் தாதியில் செல்லத்
தரித்தது தாரணை தற்பரத் தோடே”[117]

என்று திருமூலர் தெளிவுறுத்துகிறார். மனம் உள்ளிட்ட அந்தக் கரணங்களைத் தன் மாத்திரையில் செல்லாமல் இழுத்துப்பிடித்து இறைவனுடன் பொருத்துதல்தான் தாரணை எனத் திருமூலர் விளக்கியுள்ளார்.

தாரணையின் பொருளை உணர அர்ச்சுணன் ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகிறார். மகாபாரத இதிகாசத்தில், ஒரு முறை துரோணர் அரசர்களை

எல்லாம் அழைத்து அவர்களது வில்வித்தையை சோதிப்பதற்கு ஒரு போட்டி நடத்தினார். அவர், ஒருவர் ஒருவராக அழைத்து, இலக்கைப் பற்றி வர்ணிக்கக் கூறினார். மரத்தின் கிளையின் மேல் அமர்ந்திருக்கும் ஒரு பறவையே இலக்காகும்.

அதில் சிலர் மரத்தை வர்ணித்தனர், சிலர் மரத்தின் கிளைகளை வர்ணித்தனர். அர்ச்சுனனின் முறை வந்த போது, அர்ச்சுனன் அந்த பறவையை வர்ணித்தான். அவனுக்கு அந்த பறவையின் ஒளிவிடும் கண்கள் மட்டுமே தெரிந்தது. துரோணர், அந்த கண்ணைத் தான் இலக்காக் தேர்ந்தெடுத்திருந்தார். இவ்வாறு தேர்ந்தெடுக்கின்ற பொருள் மீது மட்டும் மனத்தை செலுத்துவது தாரணையாகும். ஒருவன் மனதை வென்று விட்டால் உலகத்தில் எதையும் சாதிக்கலாம் என்பது சித்தர்களின் எண்ணமாக இருந்ததால் தான், இது போன்ற பயிற்சிகளை முறையாகப் பயின்று இறை நிலையை அடைந்துள்ளனர்.

### 2.17 தியானம்

அட்டாங்க யோகத்தின் ஏழாம் நிலையாக இருப்பது தியானம் ஆகும். தியானம் என்பது ஐம்புலன்களையும் ஒருங்குபடுத்தி இறையின்மீது நிலைநிறுத்துதலைக் குறிக்கும். தியானத்தின் அடிப்படை, ‘நாட்டம் இரண்டையும் நடுமூக்கில் வைத்தல்’ என்கின்றனர். திருத்தணிகை சந்நிதி முறையில், முகத்திரு விழியும் மூக்கிடை இருத்தி மூடிவாய் மூச்சை உட்செறித்துப் பகைத்த ஐம்பொறியும் அடக்கி நெஞ்சிடை உன் பதமலர் இருத்தும் நாள் உளதோ என்று முருகப் பெருமானிடம் கந்தப்ப தேசிகர் முறையிடுகிறார்.

“நாட்டமிரண்டும் நடு மூக்கில் வைத்திடில்
வாட்டமில்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமுமில்லை உணர்வில்லை தானில்லை
தேட்டமுமில்லை சிவனவனாமே”[118]

இரு கண்களின் பார்வையினையும் நடுமூக்கில் அல்லது புருவ மத்தியில் வைத்து, அலையும் மனத்தை ஓடாமல் உள்ளிறுத்தி நாடிகளை அமைதிப்படுத்தித் தியானம் புரிபவன் சிவமாகவே ஆவான் என்கிறார் திருமூலர்.

புலனறிவும் உள்ளமும் ஒரு பொருளிலேயே இடையீடின்றிப் பாய்ந்து செல்வது தியானம் ஆகும் எனப் பதஞ்சலி முனிவர் உரைக்கின்றார்.

தியானம் என்றால் ஐம்புலனடக்கி யோகம் செய்தல் என்று அபிதான சிந்தாமணி கூறுகிறது.

தியானம் என்பது உயரிய நிலையாகும். இது மனம் ஒரு பொருளின் மீது ஓடிக்கொண்டு இருக்க கூடிய நிலையாகும்.

### 2.17.1 விவேகானந்தர் உணர்த்தும் தியான யோகம்

இளைஞர்களின் இதய வீரன் என்றழைக்கப்படும் விவேகானந்தரின் சிந்தனைகள் மக்கள் வாழ்க்கைக்கு மிகவும் உதவியாக இருப்பது என்றால் மிகையாகாது. இவர் தியானத்தைக் குறித்து "மனிதனை விலங்குகளினின்று பிரித்து பெருமையளிப்பது, உயர்வளிப்பது அவனிடம் அமைந்திருக்கும் மனிதத் தன்மை என்பது மனத்தின் ஆளுமையை குறிப்பதாகும். இந்த ஆளுமை என்பது மனத்தின் மகத்தான வல்லமையைக் குறிக்கும் ஒரு சொல். இவ்வாறு மனம் பிரமிப்பூட்டும் வல்லமையினைப் பெற தியானமே சிறந்தது" என்கிறார்.

### 2.17.2 பகவத்கீதையில் தியானம்

மகாபாரதப் போரில் பகவான் கிருஷ்ணனால் வில்வித்தை வீரன் அர்ஜுனனுக்கு போதிக்கப்பட்ட நூல். இதில் தியான யோகத்தைப் பற்றி மிகச் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. இத்தியான யோகத்தை அப்பியாஸ யோகம் மற்றும் ஆத்ஸமய யோகம் என்பர். இதனை தியான யோகத்தில் "யம் ஸந்நியாஸ-மிதி ப்ராஹுர் யோகம் தம்வித்தி பாண்டவ ந ஹ்யஸந்த்ஸ்த ஸங்கல்போ யோகீ பகவதி கச்சன" இதில் ஸந்நியாசம் என்று சொல்லப்படுவது யோகம் ஆகும்.

### 2.17.3 தியானத்தின் வகைகள்

தியானத்தைப் பழகும் அன்பர்கள் பலவகை தியானங்களில் ஈடுபடுகிறார்கள். அவை புறத் தியானம், உள்முகத் தியானம், பிரார்த்தனை தியானமும் ஆகும்.

### 2.17.4 புறத் தியானம்

பொதுவாக ஒரு புள்ளியை, ஒளியை அல்லது ஒரு படத்தின் மீது மனத்தை தொடர்ந்து செலுத்துவது புறத் தியானம் ஆகும்.

### 2.17.5 உள்முகத் தியானம்

புள்ளியை மனத்தில் கற்பித்து தியானிப்பது மேலும் ஞானி யோகிகளின் உருவங்களையும் மனதில் நிறுத்தி தியானம் பயில்வது உள்முகத் தியானம் ஆகும்.

### 2.17.5 தியானத்தின்போது இருக்க வேண்டிய மனநிலை

தியானத்திற்கு அமர்ந்தவுடன் கீழ்க்கண்டவாறு கூற வேண்டும்.

“எவ்வுயிரும் இன்புற்று இருக்க
எவ்வுயிரும் அமைதி நிலவுக
எவ்வுயிரும் ஆனந்தம் பெறுக
எத்திசை உயிர்களும் இவற்றைப் பெறுக”[119]

என்றவாறு பல தடவை சொல்லி தியானம் செய்து, பிறகு இஷ்ட தெய்வத்திடம் பிரார்த்தனை செய்து கொள்ள வேண்டும். பிரார்த்தனையை சுயநலம் கருதிச் செய்யாமல், இறைவனைப் பற்றியே சிந்தனை செய்தல் வேண்டும்.

தியானத்தின் மூன்று படிகள்

தியானத்தின் மூன்று படிகள் உள்ளன. அவை

- தாரணை
- தியானம்
- சமாதி

தாரணை என்பது ஓர் பொருளின் மீது மனதைக் குவிப்பதாகும். குவிந்த மனத்தினை அப்பொருளிலேயே நிலை நிறுத்துதல் தியானமாகும். பின்னர் யோகியே அந்தப் பொருளாகவே மாறிவிடுதல், அதாவது மனத்தால் அப்பொருளாகவே தன்னை எண்ணிக்கொண்டு ஒன்றிவிடுதல் சமாதி எனப்படும்.

தியானத்தினால் ஒருவன் அடையும் ஆற்றல் அளப்பரியது. தியானம் முறையாகப் பயிலுவதால் நமக்கு அற்புதச் சக்திகள் வாய்க்கப் பெறுகின்றன. எனவேதான் சித்தர்கள் தியானத்தை முறையாகப் பயின்று இறைமை நிலையை அடைந்துள்ளனர்.

### 2.18 சமாதி

‘சமாதி’ நிலையே சாதகரின் இலக்காகும். தியானத்தின் இறுதி நிலையில் யோகி சமாதி நிலைக்குச் செல்கிறார். அங்கு உடலும், புலன்களும் தூக்கத்திலிருப்பது போல ஓய்வாக இருக்கும். அவரது மனமும், காரணமும், விழித்திருப்பது போல, விவேகமாக இருக்கும், ஆனால் அதே பொழுது அவர் அனைத்தையும் கடந்த நிலையிலிருப்பார். சமாதி நிலையிலிருக்கும் யோகி விழிப்புடனும், விவேகத்துடனும் காணப்படுவார்.

தீதகற்றல், நன்றாற்றல் ஆகிய இயம, நியம முறைகளால் சமாதி நிலை உண்டாகும். அதன் இயல்பினைக் கூறக் கேட்கில், அவற்றான் எட்டுச் சித்தியும் உண்டாகும். அந்நிலையின் நின்றவர்க்கே சமாதி முதலியன கைகூடும் என்கிறார் திருமூலர். அவர் தம் திருமந்திரத்தில்,

“சமாதி யமாதியிற் றான்செல்லக் கூடும்
சமாதி யமாதியிற் றானெட்டுச் சித்தி
சமாதி யமாதியில் தங்கினோர்க் கன்றே
சமாதி யமாதி தலைப்படுந் தானே”[120]

ஒரு சாதகன் பிரத்தியாகாரம் மற்றும் தாரணை நிலைகளையும் கடந்து தியானம் பக்குவமானால் பின்பு சமாதி நிலை அடைகிறான். போக முனிவர் சீன நாட்டில் காலாங்கிநாதர் சித்தரின் சமாதி நிலையைக் கண்டதாகக் கூறியுள்ளார்.

அட்டாங்க யோகத்தில் எட்டாம்படியான சமாதி நிலையை அடைந்த ஞானியர் சிவநிலையை அடைவர். சிலை ஞானியர் சமாதி நிலையில் தன்னை ஒடுக்கி மண்ணோடு மண்ணாய்ப் புதைந்து விடுவர். அவர்களது உடல் சுருங்கி விடும். அவர்களது உயிர் உள்ளேயே வைரம்போல் சக்தியையும் ஒளிக்கதிர்களையும் உமிழ்ந்தபடி இருக்கும். உடல் சிவலிங்க வடிவில் கல்லைப் போல் மாறிவிடும்.

சமம்,ஆதி ஸ்ரீ சமாதி. அதாவது ஆதிக்குச் சமமாக, பிரம்மாக இருத்தல் எனும் பொருள்படும். அட்டாங்க யோகத்தின் இறுதி நிலை சமாதியாகும். சமாதியே யோகியின் இலட்சியமாகும்.

மனித உயிர் அகண்ட வெளியோடு கூடுதல் அல்லது இரண்டறக் கலந்துவிடுதல் சமாதி நிலையாகும். இது நேசிப்பு எனவும் குறிக்கப் பெறும். சகுணத்தியானம், நிர்குணத் தியானம் ஆகிய தியான முறைகளில் தேர்ச்சி பெற்றுவிட்டால் பன்னிரண்டு நாட்களில் சமாதி நிலை கூடும்.

### 2.18.1 சமாதியின் வகைகள்

சமாதி நிலை பலவகையாகக் கருதப்பெறுகின்றது. அதனைப் பதஞ்சலி,

1. உணர்வுநிலைச் சமாதி
2. உணர்வற்ற சமாதி

என இரண்டு நிலைகளில் குறிப்பிடுகின்றார்.

#### 2.18.1.1 உணர்வுநிலைச் சமாதி

சமாதி நிலையில் உணார்வோடு இருத்தல் உனார்வுநிலை சமாதியாகும். இது சமாதியின் தொடக்க நிலையாகும்

### 2.18.1.2 உணர்வற்ற சமாதி

ஐம்பொறி உணர்வுகளையும் கடந்து, பூரணப் பொருள் அல்லது பரவெளியில் கலந்து, தாம் பூரணப் பொருளின் முழுவடிவமாகவே மாறிவிடும் நிலை உணர்வற்ற சமாதிநிலை ஆகும்.

உடலாலும், மனத்தாலும், நற்குணங்களாலும், அதிக ஞானத்தாலும் அனைத்திற்கும் குறிக்கோளான ஞானஒளி பெற்றுப் பரம்பொருளுடன் ஐக்கியமாகின்ற சீவன் பரம்பொருளாகவே ஆகிவிடுதல் சமாதி நிலையாகும்.

இவ்வாறு அட்டாங்க யோகத்தின் சிறப்புகளும், சித்தர்கள் இதன் மூலம் பெற்ற ஆற்றல்கள் அளப்பரியது என்பதும் விளங்குகின்றது.

## 2.19 வாசி யோகம்

“வாசிப்பழக்கம் அறிய வேணும் மற்று மண்டல வீடுகள் கட்ட வேணும் நாசிவழி கொண்டு யோகமும் வாரமும் நாளும் பாரடி வாலைப் பெண்ணே”[121]

வாசியோகம் என்பது சித்தர்களின் இரகசிய யோகக்கலை என்று கருதப்படுகிறது. இது சித்தர்களின் கருணையின்றி கிட்டாது என நம்பப்படுகிறது. சுவாசத்தில் உட்சுவாசமாகவும், நாதமாகவும் இயங்குவதாக உள்ளது. இதனை அனுபவம் மிகுந்த ஆசானிடம் கற்று பயிற்சி செய்தல் வேண்டும். வாசி என்பது மூலாதாரத்தில் குண்டலினி சக்தி பிராணயாமம் என்பது உயிர் வளர்க்கும் கலையாக உள்ளது. பிராணாயாமத்தில் பிராணவாயுவையும் வாசியோகத்தில் தனஞ்செயன் வாயுவையும் பிடிக்க வேண்டும் எனப்படுகிறது. ஸ்ரீ கோரக்க சித்தர் அருளிய சந்திர ரேகை 200 என்ற நூலில் வாசி யோகம் பற்றி குறிப்பிட்டுள்ளார். வாசி யோகத்தின் மூலம் ஈசனை அடையும் வழியை அழகாக எடுத்துரைக்கிறார்கள். நம் உடலில் தச வாயுக்கள் இயங்கி வருகிறது. அவை

- பிராணன்
- அபாணன்

- வியானன்
- உதாணன்
- சமானன்
- நாகன்
- கூர்மன்
- கிருகரன்
- தேவதத்தன்
- தனஞ்செயன்

வாசிப் பழக்கத்தை தொடர்ந்து செய்து வரும் போது, நெஞ்சுச் சளி, தொண்டைச் சளி, மண்டைச்சளி யாவும் வெளியேறும். நோய் வரக் காரணமான வாதி பித்த சிலோமத்துமங்களை சமநிலையில் இருக்க வைக்கும். வாசியே ஔடதமாகி நோயில்லா வஜ்ர தேகத்தைத் தரும் என்பதில் ஐயமில்லை.

பிராண வாயு

நமது இருதய ஸ்தானத்திலிருந்து நாசிவழியாக மேல்நோக்கிச் செல்லும். பசி தாகங்களை உண்டாக்கி, உண்ணும் உணவுகளை ஜீரணிக்கச் செய்யும். இடகலை பிங்கலைகளிலே ஓடி 8 அங்குல அளவு உட்சென்று உயிரிலிருந்து 4 அங்குல அளவு சேர்த்து 12 அங்குல அளவு வெளியேறுகிறது. இது தான் உயிர்க்காற்று.

அபாண வாயு

இது மலக்காற்று. இது குதத்தையும் குய்யத்தையும் பற்றி நின்று, மலங்களையும் ஆண் பெண் இன்பச்சுரப்புகளான சுக்கில சுரோணிதங்களையும் வெளியே தள்ளுகின்றது.

வியானன்

இது தொழில்காற்று. இது உடல் பாகங்கள் அனைத்திலும் நிறைந்திருக்கும். ஸ்பரிசத்தொடு உணர்வுகளை அறியச்செய்யும், உண்ட உணவை, திப்பி வேறு சாறு வேறாகச் செய்து கொண்டிருக்கும்.

உதாணன்

இது ஒலிக்காற்று. இது உதாரக்கனியை எழுப்பி, கண்டத்திலிருந்து அன்னத்தை விழுங்கி அதன் சாரத்தை நாடிகளுக்கு அனுப்பிட உதவும். ஓசையோடு கலந்து குரல் ஒலி எழுப்பும். தூங்கும்போது கண், மூக்கு, வாய், காது, மேல் தோல் என்னும் ஐம்பொறிகளையும் அஞ்ஞானம் என்னும் இருளினால் அழுந்தச் செய்து, தூங்கி எழுந்தவுடன் அந்தந்தப் பொறிகளை அதனதன் இடத்தில் இருக்கும்படி செய்யும்.

சமானன்

இது நிரவுக்காற்று. இது நாபி ஸ்தானத்தில் இருந்து உதான வாயுவினால் அனுப்பப்படும் உணவின் சாரத்தை. நாடி நரம்புகளுக்குச் சமமாகப் பங்கிட்டுத் தந்து உடலை வளர்க்கும்.

இந்த ஐந்து வகை காற்றுகளும் உடலில் சஞ்சரிப்பதால்தான் மனிதன் உயிரோடு வாழ்கின்றான். ஆகையால் இவை பஞ்சப்பிராணன்கள் என அழைக்கப்படுகின்றன.

நாகன்

இது வழிக்காற்று, இது வாந்தியை உண்டுபண்ணும். கண்களினால் பார்க்கச்செய்யும். முக்கல், சோம்பல், திமிரல் முதலானவற்றை உண்டாக்கும்.

கூர்மன்

இது இமைக்காற்று. இது கண்களிலிருந்து இமைகளைத்திறக்கவும் மூடவும் செய்யும். மேலும் மயிர்க்கூச்சல், மகிழ்ச்சி, சிரிப்பு முதலானவற்றை உண்டாக்கும்.

கிருகரன்

இது தும்மல்காற்று. இது மூக்கிலிருந்து தும்மலை உண்டாக்கி, கண்களிலிருந்து கண்ணீரை வரவழைத்துவிடும்.

தேவதத்தன்

கொட்டாவிக்காற்று, இது மார்பில் இருந்து கபத்தைச் சேர்த்துக்கட்டி, கொட்டாவியையும் விக்கலையும் உண்டாக்கும்.

தனஞ்செயன்

இது வீங்கல் காற்று. இது கர்ப்பத்திலுள்ள பிண்டத்தை வெளியே தள்ளுவதோடு மூலாதாரத்தில் சுருண்டும் கிடக்கும். பிராணன் போய் மனிதன் மாண்ட பிறகும், இவ்வாயு மட்டும் அவனுடைய உடலை விடாமல் வீங்கச் செய்தும் நாற்றமெடுக்கும்படி செய்யும், தகனம் செய்யும் வரை உடம்பிலேயே இருந்து இறுதியில் கபாலத்தைப் பிளந்துகொண்டு வெளியேறும்.63

இந்தப் பத்தாவது வாயுவான தனஞ்செயன் மூலாதாரத்தில் நான்கு இதழ் கமலத்தில் முக்கோண பீடத்தில் பிந்துவாக இதனை ‘வாசிக்கால்’ என்ற கதி கொண்டு எழுப்பி உடல் முழுவதும் பரவச் செய்து முதுகுத்தண்டின் வழியாக கபாலத்திற்கு மேலேற்றுவதே வாசியோகம்.[122]

சித்தர் பாடல்களில் வாசியோகமே பெரும்பான்மையும் இடம் பெற்றுள்ளது. காகபுசுண்டர் அறுபத்துநான்கு வகையான யோக முறைகள் உள்ளதாகக் குறிக்கின்றார்.

மனித உடலிலுள்ள அசுத்த அணுக்களை சுத்த அணுக்களாக மாற்றி சரீரம் ஒளிமயமாக மாற, சாகா நிலையை அடைய காயகல்ப சாதனையையும் ‘வாசி’ பயிற்சியையும் வகுத்து தந்தவர்கள் சித்தர்கள் ஆவார்கள். வாசி என்பது பிராணாயாமமே. சித்தர்கள் என்றுமே சீரஞ்சீவி.

"சூத்திரப்பாவை கயிறருந்து வீழுமுன்

சூட்சுமக் கயிற்றினைப் பாரடா

அதிசூட்சுமக் கயிற்றினைப் பாரடா!"[123]

சூட்சுமக் கயிறு என்பது இவ்வுடலுக்குள் இருக்கும் உயிரின் ஊசலாட்டம். இந்த ஊசலாட்டத்தையும் அதன் முடிவையும் காண்கிற பாதையிலிருந்து படிப்படியாக மேலேறி ஜோதியைக் காண்பதே சாகாக்கலை என்று குணங்குடி மஸ்தான் சாகிப் தனது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

சாகாக் கலையின் முக்கிய சாதனம் யோகாப்பியாஸமே. யோகாசனங்கள் மொத்தம் .108 அதில் முக்கியமானது 72 தேக ஆரோக்கியமுள்ள ஒருவரின் இதயம் நிமிடத்திற்கு 72 தடவை அடித்துக் கொள்கிறது. ஒரு துடிப்புக்கு ஒரு ஆசனம் என்பது சித்தர்கள் கூறும் வழி.

பசியினால் சோர்வுற்றுக் கிடப்பவனுக்கு உணவும் நீரும் கொடுத்தால் புத்துயிர் பெறுகிறான். அது போலவே ஜீவ சக்திகள் அடங்கி கிடக்கும் நாத விந்து சக்திகளை மூச்சு சக்தியினால் வெளிப்படுத்தி இணைத்தால் பிரகாசமும் இளமையும் ஏற்படும். இதனை தெய்வ அருள் கொண்டு சாதிக்க வேண்டும்.

"ஈராறு கால் கொண்டு எழுந்த புரவியை

பெறாமல் கட்டிப் பெரிதுண்ண வல்லீரேல்

நீராயிரமும் நிலமாயிரத்தாண்டும்

பேராது காயம் பிரான் நந்தி ஆணையே"[124]

சுவாசத்தை குதிரையோடு ஒப்பிட்டுக் கூறுவர். குதிரைக்கு நான்கு கால்கள். சுவாசமான குதிரைக்கு 12 கால்கள். 12 மாத்திரையாக சுவாசம் வெளியேறுகிறது. 12 மாத்திரை வெளியேறிய பின் 8 மாத்திரை சுவாசமே உள்புகுகிறது. இதனால் 4 மாத்திரை நஷ்டமாகிறது. வாசியை நஷ்டப்படாமல் பார்த்துக் கொள்ளா வேண்டும்.ஒரு பொருள் நீரிலும், மண்ணிலும் நெடு நாட்கள் இருந்தால் கெட்டுப் போகும். பிராணனை வழிப்படுத்திய ஆதார யோகி உடல்

நீரில் இருந்தாலும், நிலத்தில் இருந்தாலும் அவன் உடல் கெடாது என்பதை இப்பாடல் மூலம் திருமூலர் எடுத்துக் காட்டுகிறார்.

**2.20 மூவகை சித்திகள்**

"மூவகை சித்தியின் முடிபுகள் முழுவதும்
ஆவகை எனக்கருள் அருட்பெருஞ்சோதி"[125]

சித்திகள் மூன்று வகையாகும். அவை கா்ம சித்தி, யோக சித்தி, ஞான சித்தி. அணிமா முதலிய அஷ்ட சித்திகளைப் பெறுவது கா்ம சித்தி. சித்தி ஏற்படும் காலம் 23/3 நாழிகை முதல் 3/34 வருஷம். 64 சித்திகளைப் பெறுவது யோக சித்தி, இறந்தவரை அவா் தேகம் நாசமடையுமுன் இந்த சித்திகளைக் கொண்டு உயிா்ப்பிக்க முடியும். சித்தி ஏற்படும் காலம் 12 வருஷம் முதல் 108 வருஷம் வரை. 688 கோடி பேதமாகிய மகா சித்திகளை தன இஷ்டம் போல நடத்துவது ஞான சித்தி.

**2.21 ஆயுள் நிலை**

மனிதா்களுக்கு 21,600 சுவாசம் நடக்குமானால் ஏறத்தாழ 120 வருடங்கள் உயிா் வாழலாம். இப்பொழுது மனிதா்கள் 61,600 சுவாசத்துக்கு மேல் விடுகிறாா்கள். ஒடுவதனாலும், நடப்பதனாலும், தூங்குவதாலும், போகம் செய்வதாலும் சுவாசம் அதிகரிப்பதனால் இந்த 120 வயதிலும் குறைவு ஏற்படுகிறது. சுவாசம் அதிகாரிக்க, அதிகரிக்க ஆயுள் குறைகிறது என்பது சித்தா்கள் கண்ட உண்மை.

"நூறும் அறுபதும் ஆறும் வலம்வர
நூறும் அறுபதும் ஆறும் இடம்வர
நூறும் அறுபதும் ஆறும் எதிரிட
நூறும் அறுபதும் ஆறும் புகுவரே"[126]

சுவாசம் குறையக் குறைய ஆயுள் கூடிவரும் என்ற உயரிய நிலையை திருமூலர் எடுத்தியம்பியுள்ளார்.

## 2.22 யோகம் அன்றும் இன்றும்

இறைவனிடம் இரண்டற கலப்பதே யோகம் என்று சித்தர்கள் வலியுறுத்தியுள்ளனர். அக்காலத்திலும் யோகம் என்பது இறைவனை அடைவதற்காகவே பின்பற்றப்பட்டு வந்தது. ஆனால் தற்காலத்தில் யோகம் என்பது உடல் நலனை மேம்படுத்துவதற்காக மட்டுமே செய்யப்படுகின்றது.

அன்றைய காலத்தில் யோகம் என்பது முனிவர்கள், சித்தர்கள், யோகத்தின் சிறப்பை உணர்ந்தவர்கள் மட்டும் கையாளக் கூடியதாக இருந்தது. தற்காலத்தில் பெரும்பாலான மக்களிடம் யோகத்தைப் பற்றிய விழிப்புணர்வு காணப்படுகின்றது. தற்காலத்தில் வெளி நாடுகளில்கூட யோகத்தைக் கற்றுக் கொள்வதில் மிகவும் ஆர்வம் காட்டுகின்றனர்.

முற்காலத்தில் குருவினைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு முறையாக, முழுமையாக பல ஆண்டுகள் யோகத்தை கற்றனர். ஆனால் தற்காலத்தில் யோகத்தை சில மாதங்கள் அல்லது ஓராண்டுகளில் பயிற்சி பெற்று பட்டம் பெறுகின்றனர். பட்டம் பெறும் நோக்கத்தில் இல்லாமல் இப்பயிற்சியை முழு மனதுடன் கற்றால் அதற்குரிய பலனைப் பெறலாம்.

யோகம் பற்றிய விளக்க நுல்கள் என்பது அக்காலத்தில் மிகவும் குறைவாகவே காணப்பட்டன. தற்காலத்தில் அதிகமான நுல்கள் விளக்கப்படங்களுடன் வெளி வருகின்றன. அதனைப் பார்த்துப் படித்து இப்பயிற்சியை மேற்கொள்கின்றனர்.

சித்தர்கள் யோகத்தைக் கற்று தங்களது தேகத்தை காயகல்ப தேகமாக மாற்றிக் கொண்டு நீண்ட காலம் வாழ்ந்தனர். அதனோடு நில்லாது இறை நிலையையும் அடைந்தனர். அத்தகைய சித்தர்கள், யோகத்தை மக்களும் கற்று இன்பமாக வாழ வேண்டும் என்று இவர்கள் குருவாக இருந்து மக்களுக்கு கற்றுக்

கொடுத்தனர். மேலும் யோகத்தைப் பற்றி பல நூல்களையும் எழுதி வைத்துள்ளனர். இத்தகு யோகப் பயிற்சியை கற்றுக் கொள்ளும் மக்கள் விருப்பத்துடன் முழுமையாக அறிந்து கொண்டால் நல்ல வளமான வாழ்க்கையை வாழலாம் என்பதாகும்.

## 2.23 முடிவுரை

அழியா உடலையும், சாகா நிலையையும் அடைந்தவர்கள். அத்தகைய நிலையை அடைவதற்கு சித்தர்கள் யோகத்தைக் அழியா உடலையும், சாகா நிலையையும் அடைந்தவர்கள். அத்தகைய நிலையை அடைவதற்கு சித்தர்கள் யோகத்தைக் கையாண்டனர். தாம் வாழ்ந்தால் மட்டும் போதாதென்று தாம் கண்டறிந்த யோகநெறிகளை மற்றவர்களும் பின்பற்றி வாழ்தல் வேண்டும் என்று சித்தர்கள் விரும்பினர். யோகம் என்ற சொல்லின் பொருள், யோகம் என்ற சொல்லுக்கு உபாயம் என்றும் கூடல் என்றும் தமிழ் அகராதி தரும் பொருள், சித்தர்களின் இலக்கணத்தை திருமூலர் திருமந்திரத்தில் எடுத்துரைத்த விதம், யோகம் பற்றிய விளக்கங்கள்,பகவத் கீதை உணர்த்தும் நன்கு வகை யோகம், மனித உடலில் அமைந்துள்ள ஏழு சக்கரங்கள், யோகத்தின் வகைகளில் முக்கிய இடத்தைப் பெற்ற அட்டாங்க யோகம்,உடல் மற்றும் மனத்தை அடிப்படையாக கொண்ட யோகங்கள், திருமூலர், பதஞ்சலி, குதம்பைச் சித்தர், மற்றும் பாம்பாட்டிச் சித்தர் கூறும் அட்டாங்க யோகத்தின் சிறப்புகள், அட்டாங்க யோகத்தை திருக்குறளுடன் ஒப்பிட்டுதல், யோத்தில் சிறப்பு நிலை பெற்ற வாசி யோகத்தின் தன்மைகள்,மூவகை சித்திகள், மனிதனின் ஆயுள் நிலை மற்றும் யோகம் அன்றைய காலத்தில் இடம் பெற்ற நிலையும், இன்றைய காலத்தில் இடம் பெற்ற நிலையும் குறித்து இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

சித்தர்கள் காட்டிய யோக நெறி என்னும் இரண்டாம் இயலில் கீழ்க்கண்ட செய்திகள் ஆய்ந்தறியயப்பட்டுள்ளன.

சி.ஜி.யுங், இளமதி ஜானகிராமன், க.நாராயணன், தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், ந.இராமலிங்கம் போன்ற ஆய்வாளர்கள் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் மற்றும் பதஞ்சலி யோக சூத்திரம்,அபிதான சிந்தாமணி முதலியவற்றிலிருந்து யோகத்தைப் பற்றி விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

பகவத் கீதையில் பக்தி யோகம், ராஜ யோகம், கர்ம யோகம், ஞான யோகம் என்று நான்கு வகை யோகங்களும் விளக்கப்பட்டுள்ளன. யோக தத்துவ உபநிடதம் என்னும் நூல் யோகத்திற்கப் பல வடிவங்கள் தருகின்றது. அவற்றில் முக்கியமானவை நான்கு யோகங்கள் மந்திர யோகம், ஹட யோகம், லய யோகம், ராஜ யோகம் என்பவற்றின் விளக்கங்களும் தரப்பட்டுள்ளன.

யோகத்தின் வகைகள் என்று உடலை அடிப்படையாக கொண்டவை, மனத்தை அடிப்படையாக கொண்டவை உடல், மனம் இரண்டையும் அடிப்படையாக கொண்டவை என்று பகுக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

அட்டாங்க யோகம் குறித்து திருமூலர் தம் திருமந்திரத்திலும், பதஞ்சலி யோக சூத்திரத்திலும் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

திருவள்ளுவர் அட்டாங்க யோகத்தின் கூறுகளான நியமம், இயமம் பற்றி எடுத்துரைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

புலனடக்கம், குண்டலினி, நாடி யோகம், இராஜ யோகம் மற்றும் அதன் எட்டு படிகள் சித்தர்களின் பாடல்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

வாசி யோகம், மூவகை சித்திகள், மனிதனின் ஆயுள் நிலை, யோகம் அன்றும்-இன்றும் என்றவாறு கருத்துகள் கொடுக்கப்பட்டுள்ளன.

# இயல் 2

## அடிக்குறிப்புகள்

1. கழகத்தமிழ் அகராதி, ப.804
2. திருமந்திரம், பா.1463
3. மேலது., பா.1430
4. மேலது., பா.1431
5. மேலது., பா.1432
6. மேலது., பா.1433
7. மேலது., பா.1434
8. மேலது., பா.1435
9. மேலது., பா.1436
10. மேலது., பா.1437
11. மேலது., பா.1438
12. மேலது., பா.1439
13. அமரகவி சித்தேஸ்வரர், ஞானத்தின் குரல், ப.35
14. சிங்கார முதலியார் சிவப்பிரகாச முதலியார், அபிதான சிந்தாமணி, ப.1363
15. ஜெகாதா, சித்தர்களின் யோக நெறி, ப.22
16. மேலது., ப.30
17. ஒரு யோகியின் சுய சரிதம், சி.ஜி.யுங், ப.359-358
18. சித்தர் பாடல்கள் ஓர் ஆய்வு, க. இளமதி, ப..159
19. சித்தர் தத்துவம், க.நாராயணன், ப.132-131
20. கலைக்களஞ்சியம், தெ.பொ.மீ, ப..624
21. யோக அறிவியல், முன்னுரை, ச.இராமலிங்கம், ப.71
22. டி.என்.கணபதி,போகர் பாடல்கள்., ப.69
23. மேலது., ப.70
24. மேலது., ப.70
25. மேலது. , ப.73
26. பாட்டுச்சித்தர் ஓம்நாராயண சாமி, ஸ்ரீ கோரக்க சித்தர் கதையும் கருத்தும், ப.69
27. அமரகவி சித்தேஸ்வரர், ஞானத்தின் குரல், ப.19
28. மீ.ப.சோமு, சித்தர் இலக்கியம், ப.. 240

29. ஜி.வரதராஜன், திருமந்திரம் நெறி, ப.71
30. ஜி.வரதராஜன்,திருமந்திரம் விரிவுரை, ப.606
31. சோ.ந.கந்தசாமி, பௌத்தம், ப. 134
32. யோகாச்சார்யா ஜனார்தன், திருமூலரின் யோகம், ப.43
33. மீ.ப.சோமு, சித்தர் இலக்கியம், ப.240
34. ஜி.வரதராஜன், திருமந்திர நெறி, ப.54
35. திருமந்திரம்., பா.852
36. மேலது., பா.857
37. மேலது., பா.868
38. மேலது., பா.864
39. மேலது., பா.866
40. மேலது., பா.867
41. மேலது., பா.872
42. மேலது., பா.873
43. ஏ.ஆர்.சங்கரபாணி, சித்தர் நெறி, ப.852
44. மேலது ப.72
45. யோகாச்சார்யா ஸ்ரீ சுந்தரம் ராஜயோகம், ப.2
46. ஜி.வரதராஜன், திருமந்திரம் விரிவுரை ப.30
47. மீ.ப.சோமு, சித்தர் இலக்கியம், ப..53
48. பிங்கல நிகண்டு, சூத்திரம், ப.419
49. திருமந்திரம், பா. 537
50. ஜெகாதா, சித்தர்களின் யோக நெறி, ப.95
51. தொல்.பொருள் 75-வது உரைச் சூத்திரம்
52. திருமந்திரம்., பா.563
53. தொல்.பொருள் 75-வது உரைச் சூத்திரம்
54. திருமந்திரம்., பா.522
55. மேலது., பா.563
56. மேலது., பா.578
57. மேலது., பா.588
58. மேலது., பா.591
59. மேலது., பா.597
60. மேலது., பா.600
61. மேலது., பா.604

62. மேலது., பா.620
63. மேலது., பா.627
64. மேலது., பா.628
65. ஜெகாதா.,சித்தர்களின் யோக நெறி.,ப.95
66. குதம்பை.,பா.20
67. ஜெகாதா.,சித்தர்களின் யோக நெறி., ப.30
68. மேலது., ப.31
69. பெரிய ஞானக்கோவை, சிவவாக்கியர் பாடல், பா.127
70. பெரிய ஞானக்கோவை, சட்டைமுனி நாயனார் முன் ஞானம் -100, பா.44
71. தொ.ஆ.ஞா.மாணிக்கவாசகன், அவ்வையார் ஞானக்குறள் சித்தர் பாடல்கள், பா.36
72. திருமந்திரம்., பா.2134
73. திருக்குறள்., 126
74. மேலது.,124
75. மேலது.,317
76. மேலது.,295
77. மேலது.,282
78. மேலது.,343
79. மேலது.,368
80. பதஞ்சலி யோக சாத்திர விளக்கம்,. 30ஆம் சூத்திரம்
81. அட்டாங்க யோக சூத்திரம், பா.9
82. மேலது.,298
83. மேலது.,304
84. மேலது.,174
85. மேலது.,623
86. மேலது.,262
87. மேலது.,267
88. மேலது.,346
89. மேலது.,350
90. இராஜயோக விளக்கம், பதஞ்சலி யோக சூத்திரம், சுலோகம் 38
91. சித்தர் பாடல்கள், பாம்பாட்டிச் சித்தர், பா.54
92. திருமந்திரம்., பா.556
93. ராஜயோக விளக்கம், பதஞ்சலி யோக சூத்திரம்,. சாதன பாதம்.31
94. பகவத் கீதை, .6.12
95. திருமந்திரம், பா.563

96. ஜெகாதா, சித்தர்களின் யோக நெறி, ப.117
97. மேலது., .ப.117
98. மேலது., ப.118
99. மேலது,, ப.119
100. மேலது., ப.123
101. டாக்டர்.சோ.ந.கந்தசாமி, இந்தியத் தத்துவக் களஞ்சியம் தொகுதி- 2, ப.93
102. ராஜன்.எம்.என்., அதிசய ஆற்றல் தரும் பிராணாயாமம், ப.34
103. திருமந்திரம் முதல் தொகுதி, பா.715
104. டாக்டர்.சோ.ந.கந்தசாமி, இந்தியத் தத்துவக் களஞ்சியம் தொகுதி-2, ப.94
105. யோகாச்சார்யா ஸ்ரீ சுந்தரம் ராஜயோகம்., ப.287
106. திருமந்திரம், பா.578
107. மேலது., பா.595
108. திருக்குறள்.126
109. மேலது., 341
110. மேலது., 343
111. திருமந்திரம். 597
112. திருக்குறள். 350
113. மேலது., 351
114. மேலது., 359
115. மேலது., 367
116. மேலது., 368
117. திருமந்திரம்., பா.58
118. மேலது., பா.604
119. மிழலைத்தொண்டன், தியானமும் யோகமும், ப.19
120. திருமந்திரம்., பா.61
121. பாட்டுச்சித்தர் ஓம்நாராயண சாமி, பதினெண் சித்தர்களின் தச தீட்சை, ப.65
122. மேலது., ப.67-68
123. டாக்டர்.நஜன், சித்தர்கள் காட்டிய யோக நெறி, ப..69
124. திருமந்திரம்., பா.702
125. டாக்டர்.நஜன், சித்தர்கள் காட்டிய யோக நெறி, ப..35
126. சி.எஸ்.முருகேசன், சித்தர்கள் கண்ட இறைமை, ப..68

# இயல் 3

## சித்தர்களின் தத்துவச் சிந்தனைகள

அறவழிக்கோட்பாடே உலகிலுள்ள அனைத்துச் சமயங்களுக்கும் ஆதாரமாகவிருப்பது என்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு உண்மை. அறநிலையின் வரையளவு காலத்திற்கும், கலாச்சாரத்திற்கும் ஒப்ப மாறுபடலாம். ஆனால் அடிப்படை மெய்ம்மை எல்லாச் சூழ்நிலையிலும் ஒன்றாகவே இருக்கும். கருத்தாழம் மிகுந்த சிந்தனையாளர்கள் அந்தந்தக் காலங்களில் தங்களுடைய ஆராய்ந்தறிந்த நேர்த்தியான எண்ணங்களாலும், சீரிய அறமுறைப் பண்புகளாலும் மக்களை நல்வழியைப் பின்பற்றி முன்னேறத் தூண்டுகோலாகச் செயல்பட்டு வந்துள்ளனர். யோகியரும், ஞானிகளுமான தமிழ்ச் சித்தர்களும் அத்தகைய அருந்திறன் படைத்த சிந்தனையாளர்களே. தமது கூரிய ஆய்வறிவுச் சிந்தைகளாலும், சமயத்தில் புகுந்துள்ள படுமோசமான கொள்கைப் பிடிவாதங்களையும், மூட நம்பிக்கைகளையும் அடியோடு பறித்தெறிய இடைவிடாது கொண்ட முயற்சிகளாலும் தனிப்பட்டு விளங்குபவர்கள் சித்தர்கள். அகங்காரமெனும் பேயை அகழ்ந்து எறிந்தும், மனமெனும் குரங்கினை அடக்கியும், புத்தி தெளிந்து அறிவை அறிந்தும், சித்தத்தின் பால் சிந்தையை ஊன்றி சிவத்தோடு கலந்திருப்பவர்கள் சித்தர்கள்.இயற்கையை மாற்றும் சக்தி இருந்தும் இயற்கைக்குக் கட்டுப்பட்டே இருந்தார்கள். உலக இன்பத்தைத் துறந்து, தான் தன்னுள் தேடி அறிந்ததைத் தனக்காக அன்றிப் பிறருக்காக உரைப்பதே தத்துவம் என்பது சித்தர்கள் வாழ்விலிருந்து பெறப்படுகின்ற உண்மையாகும். சித்தர் பாடல்களில் நிறைந்துள்ள தத்துவக் கருத்துகளை எடுத்தியம்புவதாக இவ்வியல் அமைந்துள்ளது.

**3.1 தத்துவம்**

தத்துவம் என்ற சொல் தத்+த்வம் எனப் பிரியும். தத் என்பது தன்னையும் த்வம் என்பது திறனையும் குறிக்கும். தன் திறனே தத்துவம் ஆகும். உடலியலைப் பொறுத்துத் திறமை என்பதாகவும் உளவியலைப் பொறுத்துத் தன்னைத் தான் அறிதல் என்பதாகவும் உணரப்படுகின்றது.

தத் எனில் பசு எனவும்,த்வம் எனில் பாசம் எனவும், அசி எனில் பதி எனவும் பொருள் கொண்டு பதியை (இறைவனை) அடைய பசுவானது (ஆன்மா) கொள்ளும் பாசம் (பற்று) தத்துவமசி ஆகும் என்பர்.[1]

உயிரின் பற்றே தத்துவம் ஆகும் என்பதை மகாவாக்கிய ஆராய்ச்சி மூலம் தெரிய வருகின்றது. உயிரானது விருப்பத்தினால் கட்டப்பட்டுள்ள நிலையே ‘‘தத்துவ நிலை’’ அந்நிலையை அறிந்து அக்கட்டிலிருந்து விடுபடச் சொல்வதே தத்துவம் ஆகும்.

தத்துவங்களின் வகைகளை அபிதான சிந்தாமணி நூல், ஆன்ம தத்துவம் 24, நாடி 10, அவத்தை 5, மலம் 3, குணம் 3, மண்டலம் 3, பிணி 3, விகாரம் 8, ஆதாரம் 6, தாது 7, மரபு 10, கோசம் 5, வாயில் 9, எனப் பிரித்து வகைப்படுத்திக் காட்டுகிறது.[2]

உலகில் உயர்திணையாகிய மாந்தர் மட்டுமே கோட்பாடு உடையவர்கள் அல்லர். அஃறிணைகளுக்கும் கோட்பாடு காணப்படுகின்றது. அவ்வாறெனில் தத்துவம் உலகம் முழுவதும் நிறைந்துள்ளது. புவியியல், தத்துவம், இயற்பியல் தத்துவம், விலங்கியல், தாவரவியல், எந்திரவியல் இப்படி அனைத்திலும் தத்துவம் இரண்டறக் கலந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. எனவே தான் ஆன்மீக அறிஞர்கள் இறைவனே தத்துவமாய் இருக்கிறான் என்கின்றனர்.

**3.2 தத்துவம் - விளக்கம்**

“புலன்களைத் தவறான பாதையில் கொண்டு செல்வதிலிருந்து பாதுகாக்க அறிவுத் தர்க்கமென்னும் ஆயுதத்தைத் திறமையாகப் பயன்படுத்துவது தத்துவ இயலில் வலியுறுத்தப்பட்டுள்ளது” என்று இசுலாமியத் தத்துவவியல் அறிஞர் ஸீனோ குறிப்பிடுகிறார்.

“தத்துவஞானம் மட்டுமே உண்மையிலேயே சுதந்திரமான விஞ்ஞானம் ஏனெனில் இது மட்டுமே தனக்காக நிலவுகிறது” என்று அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார். மனதை அடக்கி இறையருள் பெற்ற அருளாளர்களான சித்தர்கள் தங்களின் வாழ்வியல் அனுபவங்களில் கண்ட உண்மைகளே சித்தர் தத்துவங்கள் ஆகும்.

“தமிழ்மொழி, தத்துவம் என்ற சொல்லிற்கு இணையாக மெய்யியல், மெய்ப்பொருளியல், உண்மையியல் போன்ற சொற்களைக் கொண்டுள்ளது. ஆங்கிலச் சொல்லான ‘Philosophy’ என்பதற்கு தத்துவம் என்பது தமிழ் தரும் பொருளாகும். தன்னைப் பற்றியும் தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கை அமைப்பைப் பற்றியும் அறிவதே தத்துவம் என்பார் வேதாத்திரி மகரிஷி அவர்கள்”[3]

“தமிழ் தத்துவ நெறிப்படி முக்தி நெறிகளை நான்கெனப் பகுக்கின்றனர்.

(1 சாலோக்கியம் (இறைவன் உலகில் வாழும் பேறு)

(2 சாமீப்பியம் (இறைவனின் அருகில் வாழும் பேறு)

(3 சாரூப்பியம் (இறைவனின் அருளைப் பெறும் பேறு)

(4 சாயுச்சியம் (இறைவனோடு இரண்டற கலக்கும் பேறு)”[4]

இவ்வரிசையில் சித்தர்கள் இறைவனோடு இரண்டறக் கலந்த சாயுச்சிய நிலையைப் பெற்றவர்கள் எனலாம்.

### 3.3 சித்தர்களின் தத்துவங்கள்

சித்தர்களின் தத்துவங்கள் 96 என்று குறிப்பிடப் பெறுகின்றது. திருமந்திரத்தில் திருமூலர் உரைக்கும் தத்துவம்,

"முப்பது முப்பது முப்பத்தறு வரும்
செப்பு மதிலுடைக் கோவிலுள் வாழ்பவர்
செப்பு மதிலுடைக் கோயில் சிதைந்த பின்
ஒப்பி லனைவரும் ஓடெடுத்தாரே"[5]

உடம்பு அழிய தத்துவங்கள் 96 ம் உடம்பை விட்டு நீங்கும், கருவின் மூலமாக ஏற்பட்ட உடைமைகளாகிய தொண்ணுற்றாறு தத்துவங்களாவது,

| | |
|---|---|
| ஆத்ம தத்துவங்கள் | 24 |
| நாடிகள் | 10 |
| அவஸ்தைகள் | 5 |
| மலங்கள் | 3 |
| குணங்கள் | 3 |
| மண்டலங்கள் | 3 |
| பிணிகள் | 3 |
| விகாரங்கள் | 8 |
| ஆதாரங்கள் | 6 |
| தாதுக்கள் | 7 |
| வாயுக்கள் | 10 |
| பஞ்சகோசங்கள் | 5 |
| வாயில்கள் | 9 |
| மொத்தம் | 96 |

சைவ சமயத்தில் நமது உடல் 96 தத்துவங்களால் ஆனது என்று குறிக்கப்பட்டிருக்கின்றது. மனித உடலின் அமைப்புக்கும், கோவில்

கட்டுமானத்திற்கும் நெருங்கிய தொடர்புகள் உள்ளன என்பதை, சிதம்பரம் கர்ப்பக் கிரகத்தின் விசேஷ அமைப்பு மூலம் அறிந்து கொள்ளலாம்.

சிதம்பரம் கோவிலின் கர்ப்பக் கிரகத்தில் 9 படிகள் உள்ளன. அவை, நம் நவத்துவாரங்களையும் அடக்க வேண்டுமென்றும், அதன்பின் 18 தூண்கள் உள்ள மண்டபம், நமது 18 தத்துவங்களையும் அடக்கிக் கடக்க வேண்டுமென்றும் உணர்த்துகிறது. கடவுள் இருக்கும் அறை நம் உடலைக் குறிக்கிறதென்றும், அந்த அறைக்கு 96 பலகனிகள் உண்டு, இவை நமது உடலின் 96 தத்துவங்களைக் குறிக்கின்றன. அந்த்த அறைக்கு 64 கைமரங்கள் உண்டு, இவை கிளை நாடிகளைக் குறிக்கின்றன. மேல் கூறைக்கு 21,600 ஓடுகள் உண்டு. இவை மனிதன் விடும் மூச்சு தினம் 21,600 என்றும் கூறப்படுகிறது.[6]

### 3.4 மாயை

இறைவனால் படைக்கப்பட்ட இந்த உலகமானது, மாயை என்ற ஒன்றினைக் கொண்டு பிணைக்கப்பட்டிருக்கின்றது. அந்த மாயை சுத்தம், அசுத்தம், பிரகிருதி என மூன்று வகைப்படும் என்றும், அவற்றில் இருந்துதான் மூன்று வகையான தத்துவங்களும் தோன்றுகின்றன என்று திருமூலர் குறிப்பிட்டுள்ளார். சுத்தம், அசுத்தம், பிரகிருதி மூன்று வகையான மாயைகளில் இருந்து முப்பத்தாறு வகையான தத்துவங்களும் தோன்றுகின்றன. இதனை சிவ தத்துவம், வித்யா தத்துவம், பிரகிருதி தத்துவம் என்று வழங்குவது மரபாக உள்ளது.

சுத்த மாயையில் இருந்து சிவ தத்துவங்களும், அசுத்த மாயையில் இருந்து வித்தியா தத்துவங்களும், பிரகிருதி மாயையில் இருந்து ஆன்ம தத்துவங்களும், தோன்றுகின்றன.

"ஆதி பரஞ்சிவஞ் சத்தி சதாசிவம்"[7]

சிவம், சத்தி, சதாசிவம், மகேசுரம், சுத்தவித்தை ஆகிய தத்துவங்களின் தோற்றத்தினை மேலே உள்ள திருமந்திரப் பாடல் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

"சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள் - நித்திமாம்
சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம் நற்
சக்தி சிவங் காண் அவைகள்தாம்"[8]

என்னும் சித்தாந்த சாத்திரத்தின் வாயிலாகச் சிவ தத்துவங்கள் ஐந்து என்பதையும் அவற்றின் பெயர்களையும் அறிய முடிகின்றது.

சிவ தத்துவத்தினை நாத தத்துவம் என்று குறிப்பிட்டு வழங்கும் மரபும் உண்டு என்று தெளிவாகின்றது.

"நாலா றுடன்புருட னற்றுத் துவமுடன்
வேறான வையைந்து மெய்ப்புரு டன்பரங்
கூறாவி யோமம் பரமெனக் கொண்டனன்
வேறான நாலேழு வேதாந்த தத்துவமே"[9]

ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கு, புருட தத்துவம்ஒன்று, மெய்ப்புருடானகிய பரம் ஒன்று, ஆகாயம் ஒன்று என்றும் தொகையாகிய இருபத்தெட்டும் சுத்த சைவ வேதாந்த தத்துவமாகும், என்றும் திருமூலர் குறுப்பிடுகின்றார். இதன் வாயிலாக ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கு என்பது திருமந்திரத்தின் வாயிலாகப் பெறப்படுகின்றது. இதுவே சுத்த சைவ வேதாந்த தத்துவம் என்பதாகும்.

அந்தக் கரணங்கள் ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள் தன்மாத்திரைகள், பூதங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் ஆன்ம தத்துவங்கள் காணப்படுகின்றது.

| | |
|---|---|
| அந்தக் கரணங்கள் | 4 |
| ஞானேந்திரியங்கள் | 5 |
| கன்மேந்திரியங்கள் | 5 |
| தன்மாத்திரைகள் | 5 |
| பூதங்கள் | 5 |

ஆன்ம தத்துவங்கள் 24

“தத்துவங்களின் இயல்பை உள்ளவாறு உணர்வது அவற்றிற் கட்டுற்று நில்லாது நீங்குதற் பொருட்டேயாகும். அங்ஙனம் நீங்கும் வழிகளில் அவற்றை அதிதேவர்களின் வழி வழிபட்டு நீங்கும் முறை உண்டு. அவற்றை அம்முறையில் யாவராலும் நன்கறியப்பெற்ற பூதங்கட்கு வடிவம், நிறம், குறி, எழுத்து, அதிதேவர் என்பவற்றை ஆகமங்கள் கூறும் என ந.சுப்புரெட்டியார் குறிப்பிடுகின்றார்.[10]

சிவ தத்துவங்கள்-5, வித்தியா தத்துவங்கள்-7 ஆன்ம தத்துவங்கள்-24 என்னும் மூன்று ஆன்ம தத்துவங்களின் வாயிலாக முப்பத்தாறு தத்துவங்களும் தோன்றும் முறை விளக்கப்பட்டுள்ளது.

சிவ தத்துவங்கள் ஐந்து, வித்தியா தத்துவங்கள் ஏழு, ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கு, தாத்துவிகங்கள் அறுபது ஆக இவையெல்லாம் சேரும்போது தொணணுற்றாறு தத்துவங்கள் என ஆகின்றன. இந்தத் தொண்ணுற்றாறு தத்துவங்களும் உயிர்களுக்கு உரிய கருவிகள் எனக் குறிப்பிடுகின்றது.

| | | |
|---|---|---|
| தத்துவங்கள் | - | 36 |
| தாத்துவிகங்கள் | - | 60 |
| தத்துவதாத்துவிகங்கள் | - | 96 |

### 3.5 தாத்துவிகங்கள்

நிலத்தின் கூறுகள் 5, நீரின் கூறுகள் 5, தீயின் கூறுகள் 5, காற்றின் கூறுகள் பத்து, ஆகாயத்தின் கூறுகள் பத்து, ஞானேந்திரியங்களின் விடங்கள் ஐந்து கன்மேந்திரியங்கள் 5, அகங்காரம் 3, குற்றம் 5, குணம் 3, வாக்குகளின் கூறுகள் 4 ஆகிய அனைத்தும் சேர்ந்த அறுபதும் தாத்துவிகங்களாகும்.

உயிர்கள் தத்துவங்களையும், தாத்துவிகங்களையும் அறிந்து அவற்றிலிருந்து விடுபட்டு உண்மையாகிய இறைவனை உணர வேண்டும் என்பதே சித்தாந்தத்தின் முடிபாகும்.

### 3.6 தத்துவம் தொகை வகை

"நாலொரு கோடியே நாற்பத்தெண் ணுறாயிரம்
மேலுமோ ரைந்தாறு வேறா யடங்கிடும்
பாலவை தொண்னு றோடாறுட் படுமவை
கோலிய வையந்து ளாகுங் குறிக்கிலே"[11]

தத்துவங்கள் நான்கு கோடியே நாற்பத்தெண்ணுயிரத்து ஐந்நூறு (40048500) என்று வகைபடுத்துகின்றனர். அவற்றைப் பகுத்துத் தொகுக்கின் அது 96 எனப்படும் என்று திருமூலர் வரையறுத்துள்ளார்.

### 3.7 சித்தர்களின் உடல் தத்துவம்

"உடம்பை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பின் உள்ளே உறு பொருள் கண்டேன்
உடம்பின் உள்ளே உத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்பை யானிருந்து ஓம்புகின்றேனே"[12]

உடம்பினை அசுத்தம் என்று நினைத்து வெறுத்து, பின்பு தியான நிலையில் அமர்ந்து உள்ளேயே ஏதோ ஓர் அற்புத ஆற்றல் இருப்பதை கண்டு, இறைவன் தான் உடலில் கோயில் கொண்டுள்ளான் என்பதை அறிந்து உடலை மிகவும் தூய்மையாக பாதுகாத்து வருவதாக உடலின் சிறப்பினை திருமூலர் எடுத்துரைத்துள்ளார்.

நம் உடலானது 96 தத்துவங்களால் ஆனது என்பதை பகுத்தறிந்து சிந்தித்து உணர வேண்டும் என்றும், கண்ணுக்குத் தெரியும் நம் உடல் பொய்

என்றும், அறிவினால் அறியும் ஆன்மாவே மெய் என்றும் சித்தர்கள் இயம்புகின்றனர்.

“உடம்பார் அழியின் உயிரார் அழிவார்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே”[13]

இறைவன் மனித உடலில் இருப்பதையும் உள்ளங்கை நெல்லிக்கனி போன்று மிக அழகாகவும், தெள்ளத் தெளிவாகவும் பாடியுள்ளார்.

உலகின் உண்மைத் தத்துவத்தை விளக்கிக் கூறுவதே சித்தர் பாடலின் நோக்கமாக உள்ளது. உயிர் வாழ்வதற்கு உறைவிடமாக இருக்கும் மனித உடலைப் பேணி பாதுகாப்பதன் அவசியத்தைத் திருமூலர் பல பாடல்களில் வலியுறுத்திக் கூறியுள்ளார்.

“உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கக்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே”[14]

ஊனால் ஆகிய உடம்பு திருக்கோயில் என்றும், ஆருயிரின் உள்ளமாகிய நெஞ்சமே கருவறை என்றும், வாய் கோபுர வாசல் என்றும், உயிரே சிவக் கொழுந்தாகவும் உள்ளது. அழியக்கூடிய உடம்பை வைத்துதான் அழிவற்ற ஆன்மா, தன் குறிக்கோளாகிய இறைவனை அடைய முடியும் என்ற கருத்தினை திருமூலர் வலியுறுத்துகின்றார்.

### 3.8 திருமந்திரம் – வாழ்க்கைத் தத்துவம்

சித்தர்களின் வாழ்வியல் குறித்த சிந்தனையில் முக்கிய இடம் வகிப்பது நிலையாமை குறித்த சிந்தனையாகும். நிலையாமை என்பது இந்தியச்

சமயங்களில் பலவற்றிலும் இடம்பெறும் ஒரு தத்துவமும் வாழ்க்கைக் கோட்பாடும் ஆகும். இந்த உலகமும் அதில் இடம் பெறுகின்றன. மனித வாழ்வும்,பொருட்களும் நிலையற்றவை அழியக்கூடியவை. நிலையற்ற இந்த உலகிலிருந்தும் வாழ்விலிருந்தும் விடுபடுவதே வீடுபேறு என்றும், அதனை அடைவதே உயிரின் இலட்சியம் என்றும் இந்தியச் சமயங்கள் வலியுறுத்தின. இவர்களைத் தொடர்ந்து வந்த சித்தர்களும் தங்களுடைய பாடல்களில் நிலையாமை சிந்தனையை வெளிப்படுத்தியுள்ளனர்.

சித்தர்களில் தலைசிறந்தவர் என்று போற்றப்பெறுகின்றவர் திருமூலர். அவர் தம் திருமந்திரப்பாடலில் அரிய வகைக் கருத்துக்கள் பொதிந்து உள்ளன. அதில் உடல், உயிர் தத்துவம் போன்று வாழ்க்கைத் தத்துவமும் நிரம்பி உள்ளன. திருமூலர் எழுதிய திருமந்திரம் வாழ்க்கைக்கு ஏற்ற தத்துவங்களை யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, என்ற நிலையில் குறிப்பிடுகின்றது.

### 3.8.1 யாக்கை நிலையாமை

“இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா”[15]

உடல் மற்றும் செல்வம் நிலையானது அல்ல என்று நிலையாமை குறித்த கருத்துகள் மணிமேகலையில் கூறப்பட்டுள்ளன. எந்த ஒப்பற்ற உயிராக இருந்தாலும், உயர்ந்த வலிமையாக இருந்தாலும், செல்வச் செழிப்பாக இருந்தாலும் ஒரு நாள் அழிந்துதான் போகும் அது போன்று தான் உடலும் நமக்கு நிலையானது அல்ல என்று சித்தர்களும் கூறியுள்ளனர்.

ஐந்து பூதப் பொருளால் உருவானதே யாக்கையாகும். ஐந்தும் ஒவ்வொன்றாக ஒழிந்து போனால் யாக்கையும் அழியும். நிலையில்லாத வாழ்வினை மனிதர்கள் உணர்ந்து உயர்ந்து வாழ்வை மேற்கொள்ள வேண்டும். பச்சை மண்பாண்டம், நீரில் கரைந்து மீண்டும் மண்ணாகவே மாறும். இதைப் போலவே

மனிதவுடம்பும் தவத்தால் சிவ ஒளியைப் பெறும் போது அழிவதில்லை. சிவ ஒளியைப் பெறாத போது வலிமையில்லாமல் மனிதர்கள் இறக்கின்றனர். மனித உடம்பு நிலையானதல்ல. நிலையில்லாத இந்த உடலை நிலை என்று வாழாமல் தர்மம் செய்ய வேண்டும். அதனால் மிக்க வலிமையுடைய பாசமாகிய பிணியிலிருந்து விலகி முக்தி என்ற வீடுபேறு அடையலாம்.

உலகத்தில் மனிதன் குழந்தையாக பிறக்கும் போதே அவனுடைய இறப்பும் இறைவனால் தீர்மானிக்கப்பட்டடுள்ளது என்பது அறிந்ததே, அத்தகு உடல் நிலையாமை குறித்து திருமூலர்,

"ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கி பிணமென்று பேரிட்டு
சூரை அங்காட்டிடை கொண்டுபோய் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பும் ஒழிந்தார்களே"[16]

ஊரெல்லாம் ஒன்றுகூடி பிணம் என்று சொல்பவருக்கு அழகான பெயரிட்டு வாழ்ந்து முடித்தவர் என்று அவருடைய பெயரையே விடுத்து, பிணம் என்று அழைத்து அந்தப் பிணத்தை எரித்து விட்டு, அதனையே தீட்டாகக் கருதி, அதனை நீக்க புனிதநீராடி இறந்து போனவரின் நினைவை சில தினங்களிலே மறந்துபோவதுதான் மனித இயல்பு என்றும், சீழும்,மலமும், இரத்தமும் தசையும் சேர்ந்த மனித உடம்பு, இறந்துவிட்டால் துர்நாற்றம் வீசும் நிலையில், நாய், நரி, பேய், கழுகு எல்லாம் நமக்கு கிடைத்த இரை என்று தின்றுவிடும் என்று யாக்கை நிலையாமை பற்றி திருமூலர் எடுத்துரைத்துள்ளார்.

### 3.9 சிவவாக்கியரின் தத்துவச் சிந்தனைகள்

சிவவாக்கியரின் தத்துவங்கள் சமுதாயத்தில் நிலவும் பல்வேறு வாழ்வியல் சிக்கல்களுக்குத் தீர்வு கூறுவனவாக அமைந்துள்ளன. சமுதாயத்தில் புரையோடிப் போயிருக்கின்ற பல்வேறு கருத்துருவாக்கங்களை இவர் இழிவெனக் கூறி அவற்றின் உண்மை நிலைகளைத் தம்பாடல்வழி மக்களுக்கு எடுத்துரைக்கின்றார்.

சிவவாக்கியர் பாடல்களில் அவற்றில் பக்தி அல்லது கடவுள்பற்றிற்கு எந்த முக்கியத்துவமும் கொடுக்கப்படவில்லை என்பது நோக்கத்தக்கது. ஏ.வீ.சுப்ரமணிய ஐயர் அவர்களின் "கவிதையும், தமிழ்ச்சித்தர் தத்துவமும்" (Poetry and the philosophy of the Tamil Siddhars) என்ற நூலில் "Sivavakkiyar's poem is a grand remonstrance almost against everything that was held sacred in his time" என்று குறிப்பிட்டுள்ளார். அதாவது, "அவரது காலத்தில் புனிதத்தன்மை வாய்ந்தவை எனக் கருதப்பட்டுவந்த ஏறத்தாழ அனைத்தையுமே சிவாவாக்கியர் பாடல்கள் மிகவும் வன்மையாகக் கண்டிக்கின்றன". இருப்பினும் அவர் ஒரு நாத்திகரோ, லோகாயதவாதியோ அல்லர். மெய்ந்நெறியில் ஆர்வமும், தெய்வ சிந்தனையும் கொண்ட புரட்சியாளரும், சமய ஒருமைப்பாட்டின் ஆதரவாளரும் ஆவார் அவர். சூது தெரியாத, கலப்படமற்ற உளந்திறந்த அறிவுரையையே சிவவாக்கியம் அளித்துள்ளது. தனது "தமிழ் இலக்கிய வரலாறு" (History of Tamil Literature) எனும் நூலில் அறிஞர் மீனாட்சிசுந்தரம் அவர்கள் இப்பாடல்களை, "ஒளிவுமறைவற்ற வெளிப்படைத்தன்மையால் சில சமயங்களில் நம்மை அதிர்ச்சியடையச் செய்யும் ஆற்றல்வாய்ந்த தெளிவுபடைத்தவை" என்கின்றார். "ஆபாசமானவை என்றும், நயமற்ற வக்கிரமானவை என்றும் விடாப்பிடியான ஒழுக்கக் கொள்கையுடையவர்கள் அழைக்கக்கூடிய சொற்றொடர்களை வரையாது பயன்படுத்துவதில் சிவவாக்கியர் சற்றும் தயக்கம் காட்டவில்லை" என்று குறிப்பிடுகின்றார். மனிதரின் நிலையற்ற காமவேட்கையையும், மனிதப்பிறப்பின் உயிரியல் அடிப்படையிலான உண்மைகளையும் ஏளனத்தொனியில் அவரது பாடல்களில் இடையறாது சுட்டிக் காட்டியிருப்பதே சிவவாக்கியருக்கு நேரான ஆபாசக் குற்றச்சாட்டிற்குரிய காரணமாக உள்ளது.

### 3.9.1 சடங்குவெறிகொள்வதன்று சமயம்

சிவவாக்கியம் சைவசமயத்தில் விளைந்தது மட்டுமன்று, அச்சமயத்தின், முக்கியமாக அதனுடைய ஆசாரக் கோட்பாட்டில் உறுதியாக இருக்கின்ற, சடங்கு வினைகளால் செறிவு குன்றிய அமைப்புமுறைகளின் எதிர்க் கிளர்ச்சியாக எழுந்ததுமாகும். எல்லாச் சித்தர்களையும்போல சிவவாக்கியரும் ஒரு சுதந்திரச் சிந்தனையாளரும், சமயம், மறைநூல்கள், ஆசாரச் சடங்குகள், முதலானவற்றால் ஈர்க்கப்படாத புரட்சியாளரும் ஆவார். சிவவாக்கியரைப் பொறுத்தவரையில் சமயம் என்பது ஒரு விதிகளின் தொகுப்போ, நம்பிக்கைக் கோட்பாடோ அன்று. பரம்பொருளான இறைவனைப் பற்றிய நுண்ணறிவுத்திறமும், ஆழ்ந்த தொடர்புமாகும் அது.

“ஒன்றும் ஒன்றும் ஒன்றலோ உலகனைத்தும் ஒன்றுமே
அன்றுமின்றும் ஒன்றுமே அனாதியானது ஒன்றுமே”[17]

என உலகம் அனைத்தும் ஒன்று என்றும், அன்றும் இன்றும் அனாதியானவன் இறைவன் ஒருவனே என்றும் பறைசாற்றுகிறார் சிவவாக்கியர்.

அதுமட்டுமன்று. எங்கும் நிறைந்த, எல்லாவற்றிலும் இரண்டறக் கலந்திருக்கும் சிவபெருமானை உள்ளும் புறமுமாக உணர்வுபூர்வமாக அறிபவனே ஞானியாவான்

“பாரடங்க வுள்ளதும் பரந்தவானம் உள்ளதும்
ஓரிடமும் இன்றியே ஒன்றி நின்ற ஒண்சுடர்
ஆரிடமும் இன்றியே அகத்துள்ளும் புறத்துள்ளும்
சீரிடங்கள் கண்டவர் சிவன் தெரிந்த ஞானியே”[18]

எனவும் வரையறுத்துக் கூறுகின்றார்.

சிவவாக்கியர் கருத்துப்படி,

“அண்டர்கோனிருப்பிடம் அறிந்துணர்ந்த ஞானிகள்
கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்பதில்லையே”[19]

அதாவது, ஞானியான ஒருமனிதன் கோயிலிற் சென்று கைகூப்பி வேண்டுதல் செய்து இறைவழிபாடு நடத்துவதில்லை.

எங்கும் நிறைந்த இறைவன் உமக்குள்ளேயே இருக்கும்போது அவ்விறைவனை அந்தர்முகமாக உன்னி வணங்குவீராயின், அச்சுருக்கமற்ற சோதிவடிவினனான இறைவனை அடையலாம். அவ்வாறிருக்க,

"நெஞ்சிலே யுருத்தியிருந்து நெருங்கியோடும் வாயுவை"[20]

"நெருப்புநீரு மும்முளே நினைத்துகூற வல்லிரேல்
சுருக்கமற்ற சோதியைத் தொடர்ந்துகூட லாகுமே"[21]

என்று சரியான முறையையும் புகட்டுகின்றார்.

ஆனால், அந்தர்முகமாகச் செய்யப்படுகின்ற வெறுமையான தியானமுறைகளும் பலன்தரப் போவதில்லை. கையில் உருத்திராட்ச மாலையை வைத்து உருட்டிக்கொண்டு, கண்ணையும் சிமிட்டிக்கொண்டிருப்பினும், மனம்போவது எவ்விடம்! மனதிற்கிடக்கும் பொய், வஞ்சனை முதலானவற்றைத் துடைத்தெறியாமல் மெய்ப்பொருளை மனதின்கண் காணவும் இயலாது என்பதனை,

"கைவடங்கள் கொண்டுநீர் கண்சிமிட்டி நிற்கிறீர்
எவ்விடங்கள் கண்டுநீ ரெண்ணியெண்ணி பார்க்கிறீர்
பொய்யுணர்ந்த சிந்தையை பொருந்திநோக்க வல்லிரேல்
மெய்கடிந்த தும்முளே விரைந்துகூற லாகுமே"[22]

எனச் சிவவாக்கியர் சுட்டிக்காட்டுகிறார்.

### 3.9.2 போலியான வழிபாடுகள் பலனைத் தராது

நல்லெண்ணத்துடன் செய்வதாயினும் கூட சிற்சில கிரியைகள் அதைச் செய்பவன் மனதிற்கு 'நானே அதைச்செய்தேன்' என்ற போலியான நிறைவு தருமேயல்லாமல் வேறெந்த பலனையும் கொடா என்பதனை,

"பூசைபூசை யென்றுநீர் பூசைசெய்யும் பேதைகாள்

பூசையுள்ள தன்னிலே பூசைகொண்ட தெவ்விடம்

ஆதிபூசை கொண்டதோ அனாதிபூசை கொண்டதோ

ஏதுபூசை கொண்டதோ வின்னதென் றியம்புமே”[23]

எனச் செய்த பூசையைக் கொண்ட பொருள் யாதென விளக்கித் தருமாறு கேட்கின்றார்.

சமைத்த கறியின் சுவையை அக்கறியைச் சமைத்த சட்டியும், கிளறும் சட்டுவமும் தெரிந்து கொள்ளாது. பரம்பொருள் மனத்தின்கண்ணேயே இருக்க சிற்பியினால் உருவாக்கப்பட்ட கற்சிலை நிட்கள, நின்மல பர-வத்துவான பொருளாகாது என்பதனை உணர்த்த,

“நட்டகல்லை தெய்வமென்று நாலுபுட்பம் சார்த்தியே

சுற்றிவந்து மொணமொணென்று சொல்லுமந்திர மேதடா?”[24]

என்று கேட்கிறார்.

பேதமை நிறைந்த மக்கள் அனைவரும் கூடி விழா முதலான பேரில் செப்புச் சிலையை வைத்துச் செய்யும் பித்தலாட்டங்களையும் கடுமையாகச் சாடுகிறார் சிவவாக்கியர். இதனை,

“ஊரிலுள்ள மனிதர்கா ளொருமனதாய்க் கூடியே

தேரிலே வடத்தையிட்டு செம்பைவைத் திழுக்கிறீர்

ஆரினாலு மறியொணாத வாதிசித்த நாதரை

பேதையான மனிதர்பண்ணும் புரளிபாரும் பாருமே”[25]

என மொழிகின்றார். தேர்த்திருவிழா போன்ற வெறும் சமய சம்பிரதாயங்களை ஏளனம் செய்கின்றார்.

### 3.9.3 பலியிடுவது பாபம்

மூடநம்பிக்கைகளில் உழலும் உலகத்தவர் தங்களுக்கு ஏதாவதொரு நோய் வந்தால் கொல்லா விரதத்தை எள்ளளவும் கொண்டாடாமல், ஆடு, கோழி முதலியவற்றைப் பலி கொடுக்கும் ஈனச்செயல்களைத் தவிர்க்குமாறு எச்சரிக்கிறார்

சிவவாக்கியர். அத்தகைய பாபச்செயல்களைச் செய்யத்தூண்டும் உங்களது குலதெய்வங்கள் உங்களைக் குணமாக்கப்போவதும் இல்லை. உடல்நலம் மேலும் குன்றி மூஞ்சூறு போல இளைத்துப் போவீர்களேயன்றித், தேறும் நிலை உண்டாகாது என்பதை,

"தங்கள்தேகம் நோய்பெறின் தனைப்பிடாரி கோயிலிற்
பொங்கல்வைத்தும் ஆடுகோழிப் பூசைப்பலியை இட்டிட
நங்கச்சொல்லு நலிமிகுந்து நாளுந்தேய்ந்து மூஞ்சூராய்
உங்கள்குலத் தெய்வமுங்க ளுருக்குலைப்ப துண்மையே."[26]

என்று அழுத்தமாகச் சொல்கின்றார்.

ஐம்புலன்களையும் வெல்லாது அவற்றின் வழியே செல்லும் அஞ்ஞானிகளுக்கு அன்னதானம் முதலான தருமங்கள் செய்வதும் வீணே. அத்தகைய போலித் துறவிகளுக்கு ஈகை செய்வது தீமையையே விளைவிக்கும்.

"ஐம்புலனை வென்றிடா தவத்தமே யுழன்றிடும்
வம்பருக்கு மீவதுங் கொடுப்பதும்ம வத்தமே"[27]

என்பதே சிவவாக்கியரின் அறிவுரை.

நல்ல இடங்களைத் தேடி அவற்றைச் சுத்திசெய்து பீடமிட்டு, அதன் மீது திருநீறு பூசி அமர்ந்து அருமையாகத் தவங்கள் செய்வார்கள். ஆனால், ஆன்மவடிவினனான இறைவன் ஒடுங்குமிடமும் உதிக்குமிடமும் யாதென்று அறிந்து பின் தவம் செய்யுங்கள் என்று அறிவுறுத்துகின்றார் சிவவாக்கியர். இதனை,

"இடங்கள்பண்ணி சுத்திசெய்தே யிட்டபீட மீதிலே
அடங்கநீரும் பூசல்செய் தருந்தவங்கள் பண்ணுவீர்
ஒடுங்குகின்ற நாதனா ருதிக்குஞான மெவ்விடம்
அடங்குகின்ற தெவ்விடம் அறிந்துபூசை செய்யுமே."[28]

என்ற பாடல் தெளிவுறுத்துகின்றது.

மேலும்,

"நித்தலு மணிதுலக்கி நீடுமூலை புக்கிருந்து
கத்தியேக தறியே கண்கள்மூடி என்பயன்"[29]

என்றும்,

"தேடிவைத்த செம்பெலாந் திரள்படப் பரப்பியே
போடுகின்ற புட்பபூசை பூசையென்ன பூசையோ"[30]

என்றும்,

மெய்ப்பொருளாகும் இறைவனை உள்நோக்கியுணர வேண்டுமேயன்றி வெளிப்புறமான மரபுவழிச் சடங்கு வழிபாடுகளாலும், ஆசாரங்களை மேற்கொள்ளுதலாலும் எந்தப் பயனும் இல்லை என்று மனதில் பதியும்படிப் பல பாடல்களில் ஆவேசமாகக் கண்டனம் செய்கின்றார் சிவவாக்கியர்.

### 3.9.4 ஒன்றே தெய்வம்

தமிழ்ச்சித்தர்கள் கடைப்பிடித்த மெய்யுணர்வு நெறிமுறையில் தனிப்பட்ட தெய்வங்களுக்கு இடமில்லை. இறைவனைப் பற்றிய ஆத்திகக் கோட்பாடு தவறான இரண்டு கருத்துக்களை உருவாக்கியுள்ளது. தனிப்பட்ட தெய்வம் என்ற கருத்து ஒன்று படைத்தவனான இறைவன் படைப்புக்களிலிருந்து நிரந்தரமாக வேறுபட்டிருப்பவன் என்பது மற்றொன்று. சிவவாக்கியரின் பார்வையில் எனக்கென்றொரு தனிக்கடவுள், உனக்கென்றொரு தனிக்கடவுள் என்று இருக்கமுடியாது. ஏனெனில் அதனால் இரண்டு கடவுளர் உருவாவர்.

"எங்கள்தேவ ருங்கள்தேவ ரென்றிரண்டு தேவரோ
அங்குமிங்கு மாகிநின்ற வாதிமூர்த்தி யொன்றலோ
அங்குமிங்கு மாகிநின்ற வாதிமூர்த்தி யொன்றெனில்
வங்கவாரஞ் சொன்னபேர்கள் வாய்புழுத்து மாள்வரே"[31]

என இடித்துரைக்கின்றார் சிவவாக்கியர்.

இரண்டற விளங்கும் இறைவனை திருமால் எனவும் சிவன் எனவும் பாகுபடுத்தி வணங்குவது மடமை. பொன்னாற் செய்யப்படுகின்ற நகைகள் பல வடிவம் கொண்டவையாயிருப்பினும் ஆதாரமாயிருப்பது பொன் ஒன்றே என்பதை,

''தங்கமொன்று ரூபம்வேறு தன்மையான வாறுபோல்
செங்கண்மாலு மீசனுஞ் சிறந்திருந்த தெம்முளே''[32]

என்ற பாடல் எடுத்தியம்புகின்றது.

மேலும்

''எங்கள் தெய்வ முங்கள் தெய்வ மென்றிரண்டு பேதமோ
உங்கள் பேதமன்றியே வுண்மை ரெண்டு மில்லையே''[33]

என்று, கடவுளைக் கூறுபோட்டுக் கொள்வது மனிதர்களிடமுள்ள பேதமையாலும், பேதவுணர்வாலுமே என்பதனையும் வலியுறுத்துகிறார். இக்கருத்தை,

''அரியுமாகி யயனுமாகி அண்டமெங்கு மொன்றதாய்
பெரியதாகி யுலகுதன்னில் நின்றபாத மொன்றலோ
விரிவதென்று வேறுசெய்து வேடமிட்ட மூடரே
அறிவினோடு பாருமிங்கு மங்குமெங்கு மொன்றதே''[34]

எனவும் கூறி, ஒன்றே இறைவன் எனும் உண்மையை வலியுறுத்துகின்றார்.

### 3.9.5 உடலே இறையுறையும் கோயில்

சித்தர் மரபில் மனிதவுடல் என்பது பேரண்டத்தின் குறுவடிவமாகக் கொள்ளப்படுகின்றது. உடலை ஒப்புக் கொள்கின்றவன் உலகையே ஒப்புக் கொண்டவனாகின்றான் என்பதே சித்தர்களின் நிலைப்பாடு. உருவிலங்குமேனி எனும் புலன்களால் உணரத்தக்க மனித உடலின் தன்மை காலத்தால் அழிவதும், திருவிலங்குமேனி எனும் அகவுணர்வால் உணரத்தக்க உடல் அழியாமற் பாதுகாக்கப்பட வல்லதுமாகும் என்பது சிவவாக்கியர் கொள்கை. இக்கொள்கையானது,

"உருவிலங்கு மேனியாகி யும்பராகி நின்றநீர்

திருவிலங்கு மேனியாகச் சென்றுகூட லாகுமே"[35]

என்ற பாடலில் வெளிப்படுவது குறிப்பிடத்தக்கது.

உடலைப் பேணி இறைவனை அடைய வேண்டும் என்பது சிவவாக்கியரின் உயரிய சிந்தனையாகும். இதனை,

"வடிவுகண்டு கொண்டபெண்ணை மற்றொருவ னத்தினால்

விடுவனோவ வனையின்னம் வெட்டவேணு மென்பனே

நடுவன்வந் தழைத்தபோது நாறுமிந்த நல்லுடல்

சுடலைமட்டுங் கொண்டுபோய்த் தோட்டிகைக் கொடுப்பரே"[36]

என்ற சிவவாக்கியரின் ஆறாவது பாடல் மொழிகின்றது. இதன் பொருளாவது, யாக்கையே இறைவனை அறியவல்ல கருவியாக இருக்கும்போது, அதனைப் பேணாது புறக்கணித்து முடிவில் மரணமடைந்து சுடலையில் எரிபடக் கொடுக்கின்றனர். அடுத்ததாக சிவவாக்கியர் சொல்லணிமிக்க ஒரு கேள்வியைக் கேட்கின்றார்: இதே மனிதர்கள் அழகிய உடல்வடிவுள்ள பெண்ணைத் தேடிக் கண்டுபிடித்து திருமணம் செய்துகொண்ட பின், அப்பெண்ணை மற்றொருவன் கவர்ந்து கொண்டு போக எண்ணினால் அனுமதிப்பார்களா? ஆகவே மாந்தர் தங்கள் இல்லப் பெண்களைக் காப்பது போல யோகமுறைகளால் தத்தம் உடல்களையும் பேணிப் பாதுகாக்க வேண்டும் என மக்களுக்கு உணர்த்துகிறார். உடலைப் பேணவேண்டியதன் அவசியத்தை,

"சருகருந்தி நீர்குடித்து சாரல்வாழ் தவசிகாள்

சருகருந்தில் தேகங்குன்றி சஞ்சலமுண் டாகுமே"[37]

என இயம்புகின்றார். உதிர்ந்த இலைச்சருகுகளை மட்டும் தின்று, தண்ணீரையும் குடித்து மலைச்சாரல்களில் வாழும் தவசிகளிடமும், அவர் உடலைப் பேணிக்காக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகின்றார்.

இவ்வாறு, மனிதவுடலுக்கான முக்கியத்துவத்தையும், அதன் உள்ளார்ந்த பயனையும் சுட்டிக்காட்டுகின்றார் சிவவாக்கியர். உடலாகின்ற கோவிலில் இறைவனைக் காணலாம் என உறுதியாக நம்பிக்கையூட்டுகிறார் அவர். ஆனால், ஞானம் கொண்டு நல்லெண்ணத்துடன் வணங்க வேண்டியது அவசியம்.

ஞானமான பள்ளியில் நன்மையாய் வணங்கினால்
காயமான பள்ளியில் காணலா மிறையையே என்கிறார்.

அதுமட்டுமன்று, எவ்வாறு குடமானது நீரில் அமிழ்த்தப்படும்போது வெள்ளத்தால் நிரம்பப்படுகின்றதோ, அவ்வாறே எங்கும் இறைமயமாக இருக்கின்ற இவ்வெளியிலுள்ள இவ்வுடலும் சிவத்தால் நிறைந்திருக்கின்றது என்பதனை,

''அக்குடஞ் சலத்தைமொண் டமர்ந்திருந்த வாறுபோல்
இச்சடஞ் சிவத்தைமொண் டுகந்தமர்ந் திருப்பதே''[38]

என்று விளங்கக் கூறுகின்றார்.

மனிதவுடலுருவால் ஆன அரங்கமே இறைவனின் திருவரங்கம் என்ற உண்மையறியாது உழலும் மாந்தர்களைக் கண்டு அவர் வருந்துகிறார். இத்தகைய இவரின் சிந்தனை,

''உருவரங்க மாகிநின்ற வுண்மையொன்றை யோர்க்கிலீர்
கருவரங்க மாகிநின்ற கற்பனை கடந்துபின்
திருவரங்க மென்றுநீர் தெளிந்திருக்க வல்லீரே.''[39]

என்ற பாடலில் புலப்படுவது குறிப்பிடத்தக்கது.

இங்ஙனம் இறைவனை மெய்யுள் காணும் பயிற்சி நாடாமல் வெளியே தேடி அலையும் மக்களை நோக்கி,

''தூரந்தூரந் தூரமென்று சொல்லுவார்கள் சோம்பர்கள்
பாரும்விண்ணு மெங்குமாய்ப் பரந்த அப் பராபரம்
ஊருநாடு காடுமோடி யுழன்றுதேடு மூமைகாள்
நேரதாக வும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே''[40]

எனவும்,

"உறியிலே தயிரிருக்க ஊர்புகுந்து வெண்ணெய்தேடும்

அறிவிலாத மாந்தரோ டணுகுமாற தெங்ஙனே"[41]

என்றும் வருந்துகிறார் சிவவாக்கியர்.

சிவவாக்கியர் மனிதவுடலைத் தனிமுதலான மெய்ப்பொருளை அடைவதற்கான புனித வழியின் வாயிற்படியாக அடையாளம் காட்டுகிறார். புண்ணிய நதிகளெனவும், கோயில்களெனவும், மலைகளெனவும் அநேக வாசல்களைத் தேடிப் போவானேன். ஏழையான மனிதனுக்குகந்த புனிதவாசல் உடலான இவ்வாசலே ஆகும் என்பதை,

"அண்டவாச லாயிரம்ப்ர சண்டவாச லாயிரம்

ஆறிரண்டு நூறுகோடி யானவாச லாயிரம்

இந்தவாச லேழைவாச லேகபோக மானவாசல்

எம்பிரான் இருக்கும்வாசல் யாவர்காண வல்லரே."[42]

என்று வலியுறுத்துகிறார்.

### 3.9.6 அகநிலையனுபூதி

இறைவனான சிவபெருமானுடன் ஒத்து வேறுபடா நிலையை உணர்தலே தமிழ்ச் சித்த மரபில் அகவறிவு அல்லது ஆன்ம அனுபூதி எனப்படுவது. தன்னையறிதல் தன்னுளேயிருக்கும் இறைவனையும் அறியும் வழியாகின்றது. ஆனால் சிவவாக்கியர் ஒருபடி மேலே போகின்றார். மெய்ஞ்ஞானம் பெற்று இறைவனையுணர்ந்த நிலையில் தனக்குள்ளே தானன்றி மற்றொன்றையும் கண்டிலேன் என்று வியக்கின்றார். அவரது இறைநிலை அனுபவத்தை,

"என்னகத்து ளென்னைநா னெங்கும்நாடி யோடினேன்

என்னகத்து ளென்னைநா னறிந்திலாத தன்மையால்

என்னகத்து ளென்னைநா னறிந்துமே தெரிந்தபின்

என்னகத்து ளென்னையன்றி யாதுமொன்று மில்லையே"[43]

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது.

காண அரிதான அந்த மெய்ப்பொருளை முயன்று காணும்போது மட்டுமே அது அறிவில் விளங்கும். "நோக்கொணாத அந்த நோக்கு" கைவரப்பெறின் எல்லாவிடத்திலும் மெய்ப்பொருளாம் இறைவனைக் காண்பதும் எளிதாகி விடும் என்ற பொருள்பட,

"நோக்கொணாத நோக்கையுன்னி நோக்கையாவர் நோக்குவார்
நோக்கொணாத நோக்குவந்து நோக்கநோக்க நோக்கிடில்
நோக்கொணாத நோக்குவந்து நோக்கையெங்க ணோக்குமே"[44]

என்றும் அவர் குறிப்பிடுகின்றார்.

சுத்தமெய்ஞ்ஞானமே யோகநிலையின் உன்னதமான குறிக்கோளாகும். சிவவாக்கியர் இந்நிலையை, 'Seedless Consciousness' என்று ஆங்கிலத்தில் கூறப்படுகின்ற, வித்தானது இற்றுப் போய் அதிலுண்டான வித்துப் போன்ற அவத்தையென்கிறார். கட்டற்ற அந்நிலையில் சித்தமும், சிந்தையும், சீவனும், மோட்சமும், மூலமந்திரங்களும் நீக்கம் பெற்று விடுகின்றன என்பதை,

"சித்தமற்று சிந்தையற்று சீவனற்று நின்றிடம்
சத்தியற்று சம்புவற்று சாதிபேத மற்றுநன்
முத்தியற்று மூலமற்று மூலமந்தி ரங்களும்
வித்தையிற்று ஈன்றவித்தில் விளைந்ததே சிவாயமே"[45]

என்று நவில்கின்றார்.

### 3.9.7 சிவவாக்கியரின் மரண தத்துவம்

மறுபிறவியை மறுக்கும் சிவவாக்கியரின் புகழ்பெற்ற பாடலொன்று உண்டு. இறந்த பின்னர் வீடுபேறு அடைவர் என்று கூறுவர். செத்தபின் முக்தி என்ற கருத்தில் சிவவாக்கியருக்கு ஒப்புதலில்லை. அத்தகைய விடுதலை வெறும் ஒரு அனுமானம் மட்டுமே. அறியவிருப்பவனின் மரணம் அவன் அறிவதைத் தடை செய்யும் என்றும், அதனால் மரணத்திற்குப் பின் முக்தி என்பது சாத்தியமன்று என்பதனை,

"கறந்தபால் முலைப்புகா கடைந்த வெண்ணைய் மோர்புகா
உடைந்துபோன சங்கினோசை யுயிர்களும் முடற்புகா
விரிந்தபூ வுதிர்ந்தகாயு மீண்டுபோய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லை யில்லையில்லை யில்லையே."[46]

என்று அறுதியிட்டுக் கூறுகிறார் சிவவாக்கியர்.

ஓடம்போலோடுகின்ற உடல் கவிழுமுன்னே யோகஞ்செய்து தேகத்தை நிலைநிறுத்திச் மெய்ப்பொருளையறிய வேண்டும் என்பதை,

"ஓடமுள்ள போதெலா மோடியே யுலாவலாம்
ஓடமுள்ள போதெலா முறுதிபண்ணிக் கொள்ளலாம்
ஓடமு முடைந்தபோது வொப்பிலாத வெளியிலே
ஆடுமில்லை கோலுமில்லை யாருமில்லை யானதே"[47]

என்று, இறந்துபட்ட பிறகு சூனியமென்ற இடத்தில் யாவருள்ளனர் என்ற கேள்வியை அவர் எழுப்புகின்றார்.

### 3.9.8 மறைநூல்களின் பயனின்மை

ஆன்மமுத்தி அல்லது சிவப்பேறு என்பது ஜாதி, குலம், பதவி, வயது எனும் பேதங்களற, மனிதராகப் பிறந்தவர் அனைவருக்குமுள்ள பிறப்புரிமையாகும். சிவவாக்கியரின் கணக்குப்படி நமது வாழ்வில் காணப்படுகின்ற மருட்சிக்குக் காரணம் சமூக அமைப்புகளேயன்றி தனிமனிதனின் இயல்பன்று. ஆகவே சில சமய சமூக அமைப்புக்களையும், ஒழுங்குகளையும், சிவவாக்கியர் மிகத் தீவிரமாகத் தாக்குகின்றார். சமயக்கோட்பாடுகளில் உறுதியாகவிருக்கின்ற சிந்தனையாளர்கள் இதனை ஏற்புடைய வழிமரபிற்கு எதிராக எழுந்த கிளர்ச்சி இயக்கமென பொருள் கொடுத்து வந்துள்ளனர். சமய மறை நூல்களுக்கும் இறைமைக் கோட்பாட்டிற்கும் எதிராகவுள்ள அவரது மனப்பான்மையும், அத்துடன் சாதிப்பிரிவினைகள், உருவ வழிபாடு, அர்த்தமற்ற சமய ஆசாரங்கள், சடங்குகள் முதலானவற்றைப் பற்றிய கடுமையான விமரிசனமும், போலிப் போதகர்களையும்,

பொய்த்துறவிகளையும் பற்றி விடுத்துள்ள எச்சரிக்கைகளும் சமூக-ஒழுங்கு நெறிக் கோணத்திலிருந்து (socio-ethical angle) மதிப்பிட வேண்டியவையாகும்.

பகுத்தறிவுச் சிதைவிலிருந்தும், இயல்பற்ற சமுதாயமரபு சார்ந்த சிந்தனைகளிலிருந்தும் மக்களை உலுக்கியெழச்செய்ய பல்வேறான சாத்திரங்களையும், மறைநூல்களையும் சிவவாக்கியர் கடுமையாகச் சாடுகிறார். இறக்குந் தறுவாயில் வேர்வையும், மூச்சுத்திணறலும் வந்து அலட்டும்போது வேதங்கள் பலனளிக்காது என்பதை,

''வேர்த்திரைப்பு வந்தபோது வேதம்வந்து உதவுமோ'' என்று எள்ளி நகையாடுகிறார்.

அதேவேளையில், ஒரு மாத்திரைப் பொழுதாவது தன்னைத்தானே அறிந்து கொள்ள இயலுமாயின் சாத்திரங்கள் மீதுள்ள அளவற்ற வேட்கை எனும் நோயிலிருந்து விடுபட்டுவிடலாம். சத்தியமான முத்தி சித்திக்கவும் வாய்ப்புண்டு என்ற உயரிய சிந்தனையை,

''மாத்திரைப்போ தும்முளே யறிந்துதொக்க வல்லிரேல்
சாத்திரப்பை நோய்களேது! சத்திமுத்தி சித்தியே''[48]

எனத் தெளிவுபட உரைக்கிறார்.

மெய்ப்பொருளையறிய இயல்பான, நேரடியான அணுகுமுறையைத் தேடும் ஒருவன் தனது ஆன்மிகப் பயிற்சிக்குச் சாத்திரங்களும், சமயவிதிமுறை நூல்களும் பெரும் இடையூறாக இருப்பதனையறிந்து அவற்றை விலக்கவேண்டும் என்பதே சிவவாக்கியரின் அறிவுரை. பாலுக்குள் நெய் மறைந்திருப்பதைப்போல் ''ஆலமுண்ட கண்டனார் அகத்துளே'' யிருப்பதை உணராமல்,

''நாலுவேத மோதுவீர் ஞானபாத மறிகிலீர்
பாலுணெய் கலந்தவாறு பாவிகா ளறிகிலீர்''[49]

என்று கூறி மனிதர்களின் செயலுக்காக வருந்துகிறார்.

சூரியனை நேராகப் பார்த்துத் துதிசெய்தால் விளையும் பயன் கண்குருடாகும் என்பதுதான். இறையுறையும் பாத்திரமான சித்தத்தினுள் ஒன்றி மோன பக்தியில் ஆழும்போது சிவத்தையுணர்ந்து அனைவரும் சித்தராகலாம். அல்லாது சாத்திரங்களை மட்டும் நம்புவதில் பயனில்லை என்பதனை,

சாத்திரங்கள் பார்த்து பார்த்து தான் குருடு ஆவதால்

“நேத்திரங்கெட வெய்யோனை நேர்துதிசெய் மூடர்காள்
பாத்திரம் அறிந்துமோன பத்திசெய்ய வல்லிரேல்
சூத்திரப்படி யாவருஞ் சித்தராவி ரங்ஙனே”[50]

என்று பாடுகிறார்.

மறைநூல்களெனத் தொன்று தொட்டுப் பாராயணம் செய்யப்பட்டு வரும் நான்கு வேதங்களும், ஆறு சாத்திரங்களும், ஐம்பூதங்களையும், தொண்ணூற்றாறு தத்துவங்களையும் விளக்குகின்ற ஆகமங்களும், மற்றும் சாதிபேதங்களை எடுத்துக் கூறுகின்ற தரும சாத்திர நூல்களும், ஆகிய இவையனைத்துமே பற்பல வேறுபாடுகளுடையவையாகத் தோன்றி, மீண்டும் ஏற்றபடியான, பிழையற்ற முறை இல்லாத காரணத்தால் உழன்று கொண்டிருக்கின்றன என்பதனை,

“ஓதும்நாலு வேதமும் உரைத்தசாத்தி ரங்களும்
பூததத்து வங்களும் பொருந்துமாக மங்களும்
சாதிபேத வன்மையுந் தயங்குகின்ற நூல்களும்
பேதபேத மாகியே பிறந்துழன்றி ருந்தவே”[51]

எனத் தன்கருத்தை வெளியிடுகின்றார்.

சொந்தமான அனுபவத்தை விட உயரியவல்ல ஏட்டளவிற் படிக்கின்ற சாத்திரங்கள். இதனை,

“நூறுகோடி யாகமங்கள் நூறுகோடி மந்திரம்
நூறுகோடி நாளிருந்து மோதினால் அதுஎன்பயன்”[52]

என்று எடுத்துக்கூறி கேள்வி கேட்கின்றார்.

இறையனுபூதிக்குப் புலன்களையடக்கியுள்ள உள்நோக்கே முக்கியமானது. சாமங்கள் தோறும் நான்கு வேதங்களையும் சந்தச்சிதைவு வராதபடி பாராயணஞ் செய்தாலும், சகல சாத்திரங்களையும் ஐயந்திரிபுற ஆராய்ந்தாலும் பயனில்லை. இறைவனையறியப் புலனடக்கம் செய்து ஒருமுகமாக உள்நோக்கினால் மட்டுமே சிவத்தை உணரமுடியும் என்றும், அங்ஙனம் உணர்ந்து கொண்டபின் அச்சிவநிலை உங்களது உடலின்கண் ‘‘ஊமையான காயமாக’’ – மௌனநிலையாகக் குடிகொள்ளும் என்ற சமுதாயத் தத்துவத்தை,

‘‘சாமம்நாலு வேதமுஞ் சகலசாத் திரங்களும்
சேமமாக வோதினுஞ் சிவனைநீ ரறிகிலீர்
காமநோயை விட்டுநீர் கருத்துளே யுணர்ந்தபின்
ஊமையான காயமா யிருப்பனெங்க ளீசனே’’[53]

என்று சுட்டிக்காட்டுகிறார்.

மறைநூல்களும், சாத்திரங்களும் மெய்ப்பொருளிருக்கு மிடத்தையும், அதனை அடைய வேண்டிய முறையையும் குறிப்பால் காட்டுகின்ற தாற்காலிகமான வெறும் கருவிகளேயன்றிச் சுயமாகக் கடைப்பிடித்தொழுக வேண்டிய பயிற்சிக்கு ஈடாகமாட்டா. வேதங்களோதுவது வெறுமொரு சமயச் சம்பிரதாயம் ஆகிவிட்ட நிலையில், அதைக் கண்டிப்பதற்கு சிவவாக்கியர் இந்தப் பாடல்களைப் பாடியிருக்க வேண்டும். இத்தகு சிந்தனையை,

‘‘வேதமோது வேலையோ வீணதாகும் பாரிலே’’[54]

என்றும்,

‘‘இட்டகுண்ட மேதடா விருக்குவேத மேதடா
சுட்டமட் கலத்திலே சுற்றுநூல்க ளேதடா’’[55]

என்றும் உள்ளத்தில் பதியும் வகையில் சினத்துடன் எடுத்துரைக்கின்றார்.

### 3.9.9 சாதிப்பிரிவினை எதிர்ப்பு

கடவுட்பாகுபாடுகளை எதிர்ப்பது போலவே சாதிப் பிரிவினைகளையும் கடுமையாக எதிர்க்கிறார் சிவவாக்கியர். அவரது காலத்தில் சாதிபேதம் பாராட்டுவது மிக மோசமன நிலையில் இருந்திருக்க வேண்டும். மேற்குடியினர் கீழ்க்குடியினரை மிகக் கேவலமாக நடத்தியிருக்க வேண்டும். சாதிகளின் பேரால் நிகழும் இக்கொடுமைகளைக் கண்டு சிவவாக்கியர் குமுறுகிறார். அவரது வெகுளி இப்பாடலில் பெருக்கெடுத்து எழுகிறது. அவரது சினம்,

"பறைச்சியாவ தேதடா பணத்தியாவ தேதடா
இறைச்சிதோ லெலும்பினும் இலக்கமிட் டிருக்குதோ"[56]

எனப் பாடலாக வெளிப்படுவது குறிப்பிடத்தக்கது.

சாதிப் பிரிவையொட்டி மனிதர்களின் மாமிசம், தோல், எலும்பு ஆகியவற்றை வேறுபடுத்திக்காட்ட இலக்கங்கள், அடையாளங்கள் இடப்பட்டிருக்கின்றனவா என்று சிவவாக்கியர் குமுறுகின்றார். சாதியென்பது என்ன என்ற கேள்வியை எழுப்பி அதனுடைய குறிக்கோளின்மையை,

"சாதியாவ தேதடா சலந்திரண்ட நீரெலாம்
பூதவாச லொன்றலோ பூதமைந்து மொன்றலோ
காதில்வாளி காரைகம்பி பாடகம்பொ னொன்றலோ
சாதிபேத மோதுகின்ற தன்மையென்ன தன்மையே"[57]

என்று எடுத்துக் காட்டுகின்றார்.

அதாவது, மனிதர்கள் எச்சாதியைச் சார்ந்தவராயினும் பஞ்சபூதச் சேர்க்கையாலான உடலையே அனைவரும் கொண்டுள்ளனர். பொன்னாலான அணிகலன்கள் அவற்றை அணிபவரின் சாதியையொட்டி மதிப்பை இழப்பதில்லை என்பதே. பிறப்பினால் ஒருவன் கீழ்ச்சாதியில் தள்ளப்படும் கொடுமையை,

"பிறந்தபோது கோவணம் இலங்குநூல் குடுமியும்
பிறந்துடன் பிறந்ததோ பிறங்குநாட் சடங்கெலாம்"[58]

என்று வன்மையாகக் கண்டிக்கிறார் சிவவாக்கியர்., அதாவது, தாயின் வயிற்றினின்றும் பிறந்த காலத்திலேயே கோவணம், பூணூல், குடுமி இவைகளும், அந்தந்த நாட்களில் செய்யப்படும் சடங்குகளும் கூடவே பிறந்தனவோ என்று பரிகாசமாகக் கேட்கிறார்.

வேதியர்போன்ற உயர்குடிகளிற் கடைப்பிடிக்கும் உடல்சார்ந்த எச்சில், தீட்டு முதலானவற்றைத் ஆசாரத்தூய்மை கெட்டவையாக மதிக்கும் வழக்கத்தையும் சிவவாக்கியர் கண்டிக்கின்றார். வாயினாற் குடித்தநீர் எச்சிலாகுமெனின் எச்சிலல்லாதது யாதொன்று என்பது அவருடைய கேள்வி. இதனை,

> "ஓதுகின்ற வேதமெச்சி லுள்ளமந்திரங்க ளெச்சில்
> போதகங்க ளானதெச்சில் பூதலங்க ளேழுமெச்சில்
> மாதிருந்த விந்துவெச்சில் மதியுமெச்சி லொலியுமெச்சில்
> ஏதிலெச்சி லில்லதில்லை யில்லையில்லை யில்லையே"[59]

என்ற பாடல் தெளிவுறுத்துகின்றது.

உணவு உண்ட கலத்தை எச்சிலென்று கூறி தூக்கியெறிகின்றீர்கள் அப்போது அதிலிருந்து எடுத்து உண்ட உமது கைகள் எச்சிலல்லவோ? அந்தக் கை மட்டும் கடவுளுக்கு ஏற்றுக் கொள்ளத் தக்கதோ? அக்கையில் தண்ணீர் படும்போது மட்டும் அந்த அசுத்தம் எப்படி மறைகிறது? என்பதும் அவருடைய ஐயவினா. இவ்வினாவினை,

> "உண்டகல்லை யெச்சிலென் றுள்ளெறிந்து போடுநீர்
> கண்டவெச்சில் கையலோ பரமனுக்கு மேறுமோ
> கண்டவெச்சில் கேளடா கலந்தபாணி யப்பிலே
> கொண்டசுத்த மேதடா குறிப்பிலாத மூடரே"[60]

என்று பாடலில் கேட்கின்றார்.

வேதியர்கள் ஆன நீவிர் இறைவனையுணர்ந்தவர்களாயின் அனைத்தும் அவனல்லாது எச்சிலென்று என்னவுள்ளது? என்பதை,

"வாயிலெச்சில் போகவே நீர்குடித்துத் துப்புவீர்
வாயிருக்க எச்சில்போன வாறதென்ன தெவ்விடம்
வாயிலெச்சி லல்லவோ நீருரைத்த மந்திரம்
நாதனை யறிந்தபோது நாடுமெச்சி லேதுசொல்"[61]

என்று வினாவாக எழுப்புகின்றார். தூய்மையாக்கி வைத்திருக்கின்ற நுமது உடல் எச்சிலாகும். அபிடேகமாக நீங்கள் வைத்திருக்கின்ற தேன் என்பது தேனீயின் எச்சிலாகும். அர்ச்சனை செய்யும் பூக்கள் வண்டுகளின் எச்சிலாகும். பசுவின் மடியில் கைவைத்துக் கறந்த பாலும் எச்சிலாகும். பின்பு எதை நீங்கள் எச்சில், எச்சில் என்று பழிக்கின்றீர்கள் எனச் சிவவாக்கியர் கேட்டிருப்பது சிந்திக்கத் தக்கது. இத்தகைய அரிய சிந்தனையானது,

"எச்சிலெச்சி லென்றுநீ ரிடைந்திருக்கு மேழைகாள்
துச்சிலெச்சி லல்லவோ தூயகாய மானதும்
வைத்தவெச்சில் தேனலோ வண்டினெச்சில் பூவலோ
கைச்சுதாவில் வைத்துடன் கறந்தபாலு மெச்சிலே"[62]

என்ற பாடலில் தெளிவுறுத்தப்பட்டுள்ளது நோக்கத்தக்கது.

### 3.9.10 சிலைவழிபாட்டு மறுப்பு

சமயம் ஒரு சமூக அமைப்பாக மாறும்போது கூடவே அதையொட்டிய நெறிமுறைகளும், வழக்கங்களும் உருவாகத் தொடங்குகின்றன. ஆனால் அவை மக்களின் சமய உணர்விலுள்ள தூய்மையை நாளடைவில் குறைத்து விடவும் செய்கின்றன. சம்பிரதாயங்களைக் கடைப்பிடிப்பது என்பது தன்னிலை உணர்வதைவிட முக்கியத்துவம் பெற்றதாகிவிடுகின்றது.

காலம் செல்லச்செல்ல இவையே பெரும் தளைகளாகவும் மாறி விடுகின்றன. மெய்யறிவை நாடும் மனித சமுதாயம் இந்த இக்கட்டான சூழ்நிலையிலிருந்து விடுபடவேண்டுமென்பதே சிவவாக்கியரின் ஆவல். அந்த வகையில் உருவ வழிபாட்டையும், புண்ணியத் தலங்களையும் நோக்கியுள்ள

யாத்திரை, தீர்த்தங்களில் முழுகுதல், தவவேடச்சின்னங்கள் அணிதல் முதலான சடங்குகளையும் அவர் அறவே மறுக்கின்றார். இவற்றைக் கடுமையாகக் கேலி செய்கின்ற போக்கு இவருடைய பாடல்களில் மிகுந்திருப்பதைக் காணலாம். உருவ வழிபாட்டை,

"செங்கலுங் கருங்கலுஞ் சிவந்தசாதி லிங்கமும்
செம்பிலும் தராவிலும் சிவனிருப்ப னென்கிறீர்"[63]

தீவிரமாகக் கண்டனம் செய்கிறார் சிவவாக்கியர். கல்லிலும், உலோகத்திலும் பொம்மைசெய்து வைத்துகொண்டு, அதில் சிவனைத் தேடிப் பொழுதை வீணடிக்கிறீர்களே என்று வருந்துகிறார்.

உடைக்கப்பட்ட கல்லின் ஒருபகுதி வாயிற்படியில் மிதிகல்லாகவும், மற்றொரு பகுதி கருவறையுள் கடவுள் சிலையாகவும் மாறுவதைக் கண்டு சிவவாக்கியர் வியக்கிறார். இத்தகைய சமுதாயச் சீர்திருத்த தத்துவமானது,

"ஓசையுள்ள கல்லைநீர் உடைத்திரண்டு செய்துமே
வாசலிற் பதித்தகல்லை மழுங்கவேமி திக்கிறீர்
பூசனைக்கு வைத்தகல்லில் பூவும்நீருஞ் சார்த்துறீர்
ஈசனுக் குகந்தகல் எந்தகல்லு சொல்லுமே"[64]

என்ற பாடலில் தெளிவுறுத்தப்பட்டுள்ளது நோக்கத்தக்கது.

தத்துவங்களைச் சடங்காக்கி இறைவனைக் கல்லாக்கிவிட்ட மூடர்கள் உயிரோடுயிராகக் கலந்து நிற்கும் இறைவனைக் காண மறுப்பதை,

"சாவதான தத்துவச் சடங்குசெய்யு மூமைகாள்
தேவர்கல்லு மாவரோ சிரிப்பதன்றி யென்செய்வேன்
மூவராலு மறியொணாத முக்கணன் முதற்கொழுந்து
காவலாக வும்முளே கலந்திருப்பன் காணுமே"[65]

என்று எண்ணிச் சிரிக்கின்றார் அவர்.

மெய்யான இறையனுபூதியை நேரடியாகப் பெறவேண்டுமேயல்லாமல் மற்றொரு உபாதிமூலமாக அதைப்பெற விழைவது மூடத்தனம் என்பதே சிவவாக்கியரின் கருத்து. சிற்பிகளின் கைவேலைப்பாடான சிலையுருவங்களை உயர்ந்த தெய்வமென்றெண்ணி அவற்றிற்குப் பெயர்களையும் இட்டு அழைக்கின்றீர்கள் அனைத்தையும் படைத்த முழுமுதற்கடவுளை உம்முள்ளத்தில் சிந்தனை செய்யுங்கள் எனும் அவரது அறிவுரையை,

> ''பண்ணிவைத்த கல்லையும் பழம்பொருள தென்றுநீர்
> எண்ணமுற்று மென்னபே ருரைக்கிறீர்க ளேழைகாள்
> பண்ணவும் படைக்கவும் படைத்துவைத் தளிக்கவும்
> ஒண்ணுமாகி யுலகளித்த வொன்றைநெஞ்சி லுன்னுமே''[66]

என்ற பாடல் வெளிப்படுத்துகின்றது. இறைவன் உருவற்றவன் என்பதனை

> ''கட்டையாற்செய் தேவருங் கல்லினாற்செய் தேவரும்
> மட்டையாற்செய் தேவரும் மஞ்சளாற்செய் தேவரும்
> சட்டையாற்செய் தேவரும் சாணியாற்செய் தேவரும்
> வெட்டவெளிய தன்றிமற்ற வேறுதெய்வ மில்லையே''[67]

என்று உறுதியாக மொழிகிறார்.

சிலைவழிபாடு ஒருக்காலும் மெய்யான இறையின்பத்தையளிக்காது என்பதை,

> ''கல்லுவெள்ளி செம்பிரும்பு காய்ந்திடுந் தராக்களில்
> வல்லதேவ ரூபபேத மங்கமைத்துப் போற்றிடின்
> தொல்லையற் றிடப்பெருஞ் சுகந்தருமோ சொல்லுவீர்
> இல்லையில்லை யில்லையில்லை யீசனாணை யில்லையே''[68]

என்று சிவவாக்கியர் முடிவாகக் கூறுகிறார்.

ஆலய வழிபாடு, புனிதநீராடல் முதலானவற்றின் வீணான தன்மை சிலை வழிபாட்டைக் கண்டனம் செய்வதோடு, ஆலய வழிபாடு, ஆறுகுளங்களில்

புனிதநீராடல், புண்ணிய தலயாத்திரை முதலான நடவடிக்கைகளையும் சிவவாக்கியர் மட்டுமீறிய கடுமையுடன் இகழ்கிறார். யாராலும் ஆக்கவும் அழிக்கவும் இயலாத கோயிலும், குளங்களும் மனிதனின் மனத்தினுள்ளே இருக்கையில்,

"கோயிலாவ தேதடா குளங்களாவ தேதடா
கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே
கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே
ஆவதும் அழிவதும் இல்லையில்லை யில்லையே"[69]

என்று கோயில் குளங்களை நாடுவதை விட்டுவிட்டுக் கடவுளை உங்களுக்குள்ளேயே கண்டுகொள்ளுங்கள் என்கிறார். நல்ல புண்ணிய தீர்த்தங்கள் எங்கேயென்று நாடியோடும் மாந்தரைச் சிவவாக்கியர்,

"நல்லமஞ் சனங்கள்தேடி நாடிநாடி யோடுநீர்
நல்லமஞ் சனங்களுண்டு நாதனுண்டு நம்முளே"[70]

என அறைகூவி விளிக்கிறார்.

நாள்தோறும் நீரில் குளிப்பதால் இறைவனது அருளைப் பெற்றுவிடலாம் என்று பலரும் நினைக்கின்றனர். இது மூடத்தனமாகும் என்பதனை,

"காலைமாலை நீரிலே முழுகுமந்த மூடர்காள்
காலைமாலை நீரிலே கிடந்ததேரை யென்பெறும்"[71]

என்று தெளிவுபடுத்துகின்றார். காலையும் மாலையும் தண்ணீரிலே மூழ்கினால் இறைவனருள் கிட்டுமாயின் எப்போதுமே நீரில் கிடக்கின்ற தேரையும் இறைவனுருள் பெற்றுவிடுமல்லவா? என்ற கேள்வியை விடுக்கிறார்.

இறைவன் அந்த ஊரில் இருக்கின்றான், இந்த ஊரில் இருக்கின்றான் என்று ஊர் ஊராகத் தேடித் தேடியலையும் மாந்தரைப் பார்த்து,

"இந்தவூரி லில்லையென் றெங்குநாடி யோடுநீர்
அந்தவூரி லீசனும் அமர்ந்துவாழ்வ தெங்ஙனே"[72]

இவ்வூரிலில்லாத இறைவன் அவ்வூரிலிருப்பான் என்று என்ன உறுதி? என்று கேட்கின்றார். மேலும்,

"தீர்த்தலிங்க மூர்த்தியென்று தேடியோடும் தீதரே
தீர்த்தலிங்க முள்ளினின்ற சீவனைத் தெளியுமே,"[73]

என்று மக்களின் மனத்தைத் தெளிவிக்கின்றார். தீர்த்தம், லிங்கம், மூர்த்தி என்று ஊரூராகச் சென்று தேடுவோரே! அவை அனைத்தையும் உம்முள்ளேயே கொண்டுள்ள உம் சீவனை உன்னிப்பாகக் கவனிப்பீராக என்று அறிவுரை புகட்டுகின்றார். காடுமேடு குன்றுபள்ளங்கள் அகற்றியும் நாடுதேசம் விட்டலைவர் நாதன்பாதங் காண்பரோ? இல்லை. இறைவனை மனத்துள் அல்லால் எங்குத் தேடியும் பயனில்லை என்பது சிவவாக்கியச் சித்தரின் உயரிய சிந்தனையாகும்.

### 3.9.11 போலிக்குருமார்களைப் பழித்தல்

போலித் துறவிகளையும், பொய்த் தவ வேடமணிந்தவர்களையும் நையாண்டிசெய்வதில் சிவவாக்கியர் ஒருபோதும் இரக்கம் காட்டியதில்லை. அகநிலையனுபூதி பெற்ற மெய்யடியார்கள் தம் நிலையை எப்போதும் மறைத்து வைத்திருப்பர்., மற்றவர் வெளிவேடங்களாலும் நடிப்புக்களாலும் தம் புகழ் பாடித் திரிவர். சிவவாக்கியர் அத்தகைய போலி ஞானிகளை நாய்களுடன் ஒப்பிட்டு,

"ஞானிஞானி என்றுரைத்த நாய்கள்கோடி கோடியே"[74]

என வெளிப்படையாகத் தாக்குவதற்கும் அஞ்சவில்லை. மேலும்,

"குண்டலங்கள் பூண்டுநீர் குளங்களோடோறு மூழ்கிறீர்
மண்டுகங்கள் போலநீர் மனத்தின்மா சறுக்கிலீர்"[75]

என்றும்,

"வெந்தநீறு மெய்க்கணிந்து வேடமுந் தரிக்கிறீர்"[76]

என்றும்,

"காவியுஞ் சடாமுடிக் கமண்டலங்க ளாசனம்
தாவுருத்தி ராட்சம்யோகத் தண்டுகொண்ட மாடுகள் என்றும்

முத்திசேரச் சித்தியிங்கு முன்னளிப்பேன் பாரெனச்

சத்தியங்கள் சொல்லியெங்குஞ் சாமிவேடம் பூண்டவர்''[77]

என்றும் பலவிதமாக இழித்துரைத்து அவர்கள் மக்களை ஏமாற்றாது நன்னெறியில் ஒழுகுதல் வேண்டும் என்று கூறுகின்றார்.

''நீரினிற் குமிழியையொத்த நிலையிலாத காயமென்

றூரினிற் பறையடித்து உதாரியாய்த் திரிபவர்''[78]

என்றும் பலவிதமாகக் கபடத்துறவி வேடம் போட்டவர்களிடம் சிக்காமலிருக்கப் பல பாடல்களில் மக்களைச் சிவவாக்கியர் எச்சரிக்கிறார். பொய்வேடதாரிகளைத் தனது பல பாடல்களிலும் வேடமிட்ட மூடர், சாத்திரச் சழக்கர், பாதகக் கபடர், மதியிழந்த பித்தர், மடிப்புமோசஞ் செய்பவர், கருத்தழிந்த கசடர், அறிவழிந்த மூடர், குணங்கெடுங் குருக்கள் என்றெல்லாம் பலவாறாக வசை பாடுகின்றார்.

''மெதுவாக முணமுணவென்று சொல்லி உட்கார்ந்திருக்கும் மூடர்களே! நீங்கள் அள்ளி அள்ளி நீரை மேலெ எறிந்ததேது? உள்ளங்கையாற் குழைத்ததேது? திருட்டுவேடம் தரித்ததேது? கண்ணைமூடி விட்டதேது? அதன் விசேடத்தைச் சொல்லுவீர்களாக''

என்று பொய்த்தவ வேடர்களைப் பார்த்து,

''அள்ளிநீரை யிட்டதே தகங்கையிற் குழைத்ததேது

மெள்ளவே முணமுணென்று விளம்புகின்ற மூடர்காள்

கள்ளவேட மிட்டதேது கண்ணைமூடி விட்டதேது

மெள்ளவே குருக்களே விளம்பிடீர் விளம்பிடீர்''[79]

என்று கேட்கின்றார்.

மனதிலுள்ள ஆசையெனும் மாயக் கட்டவிழ்ந்து ஆழமான ஆன்மிகஞானம் கைவரப்பெற்ற யோகியர் மங்கையின் மார்பகத்தடியில் இருந்தாலும் அவர்கள் உலகமயக்கத்திற்கு வயப்படாமல் வினைத்தொடரை அறுத்தெறிந்து இருப்பர்.

ஆனால் மனவொடுக்கம் பெறாததால் பற்றறாத ஒரு யோகி மௌனம்பூண்டு வனத்தில் வாழ்ந்தாலும், மனதின்கண்ணுள்ள மாயையை அறுத்தொழித்தவராக மாட்டார் என்பதனை,

"மனத்தகத் தழுக்கறாத மவுனஞான யோகிகள்
வனத்தகத் திருப்பினும் மனத்தகத் தழுக்கறார்
மனத்தகத் தழுக்கறுத்த மவுனஞான யோகிகள்
முலைத்தடத் திருப்பினும் பிறப்பறுத் திருப்பரே."[80]

என்று சிவவாக்கியர் உரைக்கின்றார்.

### 3.9.12 பெண்ணைத் தரந்தாழ்த்தக் கூடாது

தமிழ்ச் சித்தர்கள் காம இன்பம் துய்ப்பதைப் பெரும்பாவமாகவே கூறியிருக்கின்றனர். பொதுவாக பெண்ணாசையைக் கண்டனம் செய்யும் வகையில் பெண்களைப் பழித்துரைக்கின்றனர். சிற்றின்பத்தில் மூழ்கிப் பேரின்பத்தை அடைய முடியாமல் தடுமாறும் மாந்தர்களுக்கு அறிவுரை சொல்லுகின்றபோது, வாழ்க்கையின் நிலையில்லாத்தன்மையை உணர்த்துவதற்கு, அவர்கள் பெண்மயக்கத்தை, முக்கியமாக விலைமகளிரிடம் ஆண்கள் சிக்கிச் சீரழிவதைக் கண்டித்துப் பாடியதாகக் கருத வேண்டுமேயல்லால், சித்தர்கள் பெண்ணினத்தையே முற்றாக வெறுத்து இருப்பார்கள் என்று எண்ணுவதற்கு இடமில்லை.

சிவவாக்கியத்திலும் பெண்ணாசையால் மதி மறக்கும் மானிடர்களைத் தூற்றும் பாடல்களிருப்பினும், பெண்களுக்குத் தூய்மையின்மையைக் கற்பித்துத் தரம் தாழ்த்துவதைப் பல பாடல்களில் சிவவாக்கியர் கண்டித்துள்ளார். முக்கியமாகப் பெண்களின் மாதவிடாய் நாட்களில் பெண்ணை அசுத்தமடைந்தவள் என ஒதுக்குவதை மிகவும் துணிவுடன் அக்காலத்திலேயே எதிர்த்தப்பெருமை சிவவாக்கியரைச் சேரும். மாதவிடாய்க் காலங்களில் பெண்கள் இறைவனை வழிபாடு செய்தல் கூடாது என்று கூறி அவர்களை விலக்கி வைப்பதை சிவவாக்கியர் கண்டனம் செய்கின்றார்.

தாயான பெண்ணின் இரத்தத்திலிருந்தே குருக்கள், தேசிகர்கள் முதலான பேராளர்களுக்கும் பிறவி பெற்றனர். அவளுடைய உதிரமானது அவளுக்குள்ளேயே எக்காலமும் இருக்கின்றது. அப்படியிருக்க அம்மூன்று நாட்கள் மட்டும் பெண்ணைத் தீண்டத்தகாதவளாக்கித் துவண்டலைக்கின்றீர்களே என்று வருந்திக் கேட்கின்றார். ஆய்வறிவின் அடிப்படையில் எந்த ஆதாரமும் இல்லாத மூடவழக்கங்களை, அவை எத்தகைய மறைவான, கொச்சையான தன்மையுடையவையாயினும், அப்பட்டமாகக் கண்டிப்பதில் சிவவாக்கியர் ஒருபோதும் தயங்கியதில்லை. அதுமட்டுமன்று, பெண் ஒரு சக்தியாக மாட்டிக்கொண்டதனாலேயே சிவனாரும் கங்கையைத் தனது தலைமேல் வைத்து மகிழ்ந்திருக்கின்றார். அதனால் மனைவியோடு சேரும்போது தான் மனிதர் வாழ்வு சிறக்கும் என்பதை,

“மாதர்தோள்சே ராததேவர் மாநிலத்தி லில்லையே
மாதர்தோள்பு ணர்ந்தபோது மனிதர்வாழ்வுசி றக்குமே
மாதராகுஞ் சக்தியொன்று மாட்டிக்கொண்ட தாதலால்
மாதராகும் நீலிகங்கை மகிழ்ந்துகொண்டா னீசனே”[81]

என்று தெளிவுபடுத்துகின்றார்.

### 3.9.13 அறவழியின் சிறப்பு

பூசை, நியமம், நிட்டை முதலானவற்றை வெளியார் மயங்கச் செய்தாலும், அறவழியில் செல்லாது அந்நியர் பொருள்களின் மேல் ஆசை வைத்துத் தினந்தோறும் அவற்றை மோசஞ்செய்து அபகரிப்பதற்காக எப்போதும் அலைந்து திரிபவர்களுக்கு எழுநரகங்களும் காத்துக்கொண்டிருக்கின்றன் இது உண்மையாகும் என்பதை,

“ஆசைகொண்டு அனுதினமு மன்னியர் பொருளினை
மோசஞ்செய்து அபகரிக்க முற்றிலும் மலைபவர்
பூசையோடு நேமநிட்டை பூரிக்கச்செய் பாதகர்

காசினியி லெழுநரகைக் காத்திருப்ப துண்மையே''[82]

என அதர்மவழியைப் பின்பற்றினாலுண்டாகும் விளைவை எடுத்துக்கூறி எச்சரிக்கின்றார் சிவவாக்கியர். அறவழி பின்பற்றுவதற்கான மனோதிடமின்றிப் பிறர்பொருளை எதிர்நோக்கி அதன்பின்னே ஊரெல்லாம் சுற்றி அலைந்து சுற்றத்தாரால் இகழப்படுகின்ற அவலநிலையை அடைந்தவர்களை,

''மனவுறுதி தானிலாத மட்டிப்பிண மாடுகள்
சினமுறப் பிறர்பொருளைச் சேகரித்து வைத்ததைத்
தினந்தினமு ரெங்குஞ்சுற்றித் திண்டிக்கே யலைபவர்
இனமதிற் பலர்கள்வையும் இன்பமற்ற பாவிகள்''[83]

என்றும் சாடுகின்றார்.

அளப்பரிய செல்வம் சேர்த்து வைப்பினும் எமனோலை வருகின்ற காலத்தில் குறுக்கே வந்து தடுக்க மாட்டா. பாத்திரமறிந்து ஓடிச்சென்று இட்ட பிச்சையும், மன உவப்போடு செய்த தருமச்செயல்களும் மட்டுமே வந்துதவும் என்பதை,

''ஆடுநாடு தேடினும் ஆனைசேனை தேடினும்
கோடிவாசி தேடினுங் குறுக்கேவந்து நிற்குமோ
ஓடியிட்ட பிச்சையும் உகந்துசெய்த தருமமும்
சாடிவிட்ட குதிரைபோல் தருமம்வந்து நிற்குமே''[84]

என்ற பாடலால் விளக்குகிறார்.

அவாவொழித்தலே மனநிறைவுக்கான வழி என்பதே சித்தர்களின் பொதுவான கோட்பாடு. அறவழியில் நின்று முத்தி நாடுபவரும், முத்திக்கான ஆசையை நீப்பது அவசியம். ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள் ஈசனோடாயினும் ஆசையறுமின்கள் என்பது திருமந்திரம். அவ்வழியிலேயே, சிவவாக்கியரும் ஆசையை ஒழிப்பீரானால் நாடும் அந்த தத்துவப்பொருள் தானேவந்து கைகூடும் என்பதனை,

"வேணும்வேணு மென்றுநீர் வீணு ழன்று தேடுவீர்
வேணுமென்று தேடினாலு முள்ளதல்ல தில்லையே
வேணுமென்று தேடுகின்ற வேட்கையைத் திறந்தபின்
வேணுமென்ற வப்பொருள் விரைந்துகாண லாகுமே"[85]

என்கின்றார்.

### 3.10 பாம்பாட்டிச் சித்தர்

"முக்கனியுஞ் சர்க்கரையும் மோதகங்களும்
முதிர்சுவைப் பண்டங்களும் முந்தி உண்டவாய்
மிக்க உயிர் போனபின்பு மண்ணை விழுங்க
மெய்யாகக் கண்டோம் என்று ஆடுபாம்பே"[86]

மனித உடலிருந்து உயிர் பிரிந்த பிறகு, உடலைப் பிணம் என்கின்றனர். சுவை மிகுந்த உணவை அதிகமாக உண்டு சுவைத்த வாயனாது, இறுதியில் மண்ணை உண்கின்ற நிலை ஏற்படுகின்றது. மனித உடலில் இவ்வுலகை விட்டுச் செல்லும்போது எந்தப் பொருளையும், எந்த இன்பத்தையும் எடுத்துப் போவதில்லை என்பதைப் பாம்பாட்டிச் சித்தர் தனது பாடலில் உணர்த்தியுள்ளார்.

### 3.11 அழுகணிச் சித்தர்

அழுகணிச் சித்தர் பாடல் ஒப்பாரி போலவே அமைந்திருக்கின்றது. அழுகின்ற ஓசையே அப்பாடலின் இசையமைப்பாக உள்ளது. அழுகின்ற இசை போன்று பாடியிருப்பதால் இவர் அழுகணிச் சித்தர் என்று அழைக்கப்பட்டார். மனித உடல் என்பது நிலையில்லாதது என்ற கருத்தை வலியுறுத்தி கூறப்பட்ட பாடல்

"ஊத்தைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி
மாற்றிப் பிறக்க மருந்தெனக்கு கிட்டுதில்லை
மாற்றிப் பிறக்க மருந்தெனக்கு கிட்டுமென்றால்."[87]

நீரில் எழுதப்படும் எழுத்து உடன் அழிவது போன்று யாக்கையும் விரைவில் அழியும் இயல்புடையது. இது பிணி, மூப்பு, சாக்காடு முதலியவற்றிற்கு ஆட்பட்டு

நிலை தடுமாறும் தன்மையுடையுது. உடலில் உயிர் உள்ளவரை மட்டுமே உடம்பிற்கு மதிப்பு ,உடம்பிலிருந்து உயிர் பிரிந்தவுடன் அதைப் பிணம் என்று பெயரிட்டு தீயிட்டு எரித்து விடுவர்.இத்தகைய யாக்கையில் நிலையற்ற தன்மையினைச் சித்தர்களும் எடுத்துக் கூறியுள்ளார்கள். ''வீட்டைக் கட்டி சுக வாழ்விற்காக வேள்விகளைச் செய்து மெய்யும் பொய்யும் பேசி மக்கள் ,மனைவி, சுற்றமென்று வாழ்ந்து கொண்டிருக்கும் மாந்தர்களே “எமன் உயிரைக் கொண்டுபோன பிறகு ஒரு ஓடுபெற்ற மதிப்பைக் கூட உடம்பு பெறாது என்பதை உணருங்கள் என்று யாக்கையின் நிலையாமைத் தன்மையினை சிவவாக்கியர் குறிப்பிடுகிறார்.

சித்தர்கள் உடலைத் தெய்வம் உறையும் ஆலயமாகவும் ஆன்ம விடுதலை பெறுவதற்கான சாதனமாகவும் கருதியவர்கள். அத்தகைய உடலை மனிதர்கள் பேணிக்காத்து இறைவனை உணர வேண்டும் என்றும்,அவ்வாறு காக்காமால் வீணான வழிகளில் செலுத்தி அதனை அழித்துவிடக் கூடாது என்றும் அறிவுறுத்தும் பொருட்டு சித்தர்கள் யாக்கை நிலையாமையை வலியுறுத்தியுள்ளனர். மேலும் யோகத்தால் உடலை அழியாமல் இளமையாகவும், வலிமையாகவும் வைத்துக்கொள்ள முடியும் என்கிறார்கள்.

### 3.12 செல்வம் நிலையாமை

மனிதனின் அடிப்படைத் தேவைகளைப் பெருக்கிக் கொள்ள செல்வம் என்பது தேவையான ஒன்றாகி விட்டது. அத்தகைய செல்வமானது நிலையில்லாதது என்பதை அறிந்துக் கொள்ள மனிதன் மறுக்கிறான். தன்னுடைய ஆரம்ப செலவுகளுக்காக செல்வத்தைத் தேடி ஓடிக்கொண்டே இருக்கின்றான்.

“நாடுநகர் வீடுமாடு நற்பொருள் எல்லாம்
நடுவன் வரும்பொழுது நாடி வருமோ
கூடுபோன பின்பவற்றால் கொள்பவன் என்னோ
கூத்தன் பதங் குறித்து நின்றாடாய் பாம்பே”[88]

நாம் வாழ்கின்ற நாடும் நகரமும் வீடும், மாடும், பிற நல்ல வளமும் நடுவானம் எமன் நம்மை அழைத்துக் கொண்டு போக வரும்போது நம்முடன் வருமா, வராது. இச் செல்வம் நமக்கு நிலையானதல்ல எனவே சிவனை வணங்கி அவன் பாதம் போற்ற வேண்டுமென்கிறார்.

“துகள்தீர் பெருஞ்செல்வம் தோன்றிக்கால் தொட்டுப்

பகடு நடந்த கூழ் பல்லாரோடுண்க”

செல்வமானது யாரிடத்தும் நில்லாது வண்டிச் சக்கரம் போல மாறி புரளும்.எனவே செல்வமிருந்தால் பலருக்கும் அளித்து பலன்பெற வேண்டும் என்பது நாலடியார் பாடல் வழி புலனாகிறது.

### 3.13 இடைக்காட்டுச் சித்தர்

“மாடும் மனைகளும் மக்களும் சுற்றமும் வான்பொருளும்

வீடும் மணிகளும் வெண்பொன்னும் செம்பொன்னும்வெண்கலமும்

காடுங் கரைகளும் கல்லாம் பணியும் கருபாயும்

தேடும்பல் பண்டம் நில்லா சிவகதி சேர்மின்களே!”[89]

மனிதர்கள் மாடு, வீடு, பிள்ளைகள் ஆபரணங்கள் காடுபோன்றவற்றை மனிதர்கள் தேடித் தேடிச் சேர்த்து வைக்கின்றனர். அவை அனைத்தும் எதேனும் ஒரு நிலையில் திருட்டு, இயற்கை பேரழிவு காரணமாக நொடியில் காணாமல் போய்விடும், அதனால் மனதுள் இறைவனை மட்டும் தேட வேண்டும் என்று செல்வ நிலையாமைக் குறித்து இடைக்காட்டுச் சித்தர் பாடியுள்ளார்.

கடவுள் என்னும் உணர்வும் உயிர் என்னும் உணர்வுமே அழியாதவையாகும். இவற்றையே “அருட்செல்வம்” என்பர். உடல் வாழ்விற்குரிய நுகரும் செல்வமெல்லாம் பொருட்செல்வமாகும். இவை அழியக்கூடியவை ஆகும். இக்கருத்தினை திருமூலரின் திருமந்திரப் பாடல் அழகாக விளக்கிக் காட்டுகிறது. வானிலே இயங்கும் முழுநிலா தேய்ந்து, தேய்ந்து இறுதியில் இருள்மயம் ஆவது போல, நாளடைவில் செல்வமும், செலவாகிக் குறைந்து இல்லாமலே போய்விடும்.

இதனை யாரும் சொல்லாமலே அறியலாம். தேவர்களின் தலைவனான இறைவனை நீங்கள் உலகப் பொருள் மயக்கமின்றி உள்ளத்திலே நாடுங்கள் அவன் அழியாத பெருஞ்செல்வமான அருளை மழைமுகில் போல வாரி, வாரி வழங்குவான் என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

### 3.14 இளமை நிலையாமை

இளமைப் பருவம் என்பது அனைத்து மக்களாலும் விரும்பி ஏற்றுக்கொள்ளக் கூடியது. எதையும் துணிச்சலுடன் செய்யக்கூடியது. கல்வி, காதல், திருமணம், உழைப்பு என்ற அனைத்தையும் உள்ளடக்கியது. இப்பருவத்தைச் சரியான முறையில் வழிநடத்தினால் வாழ்வில் உயர்வு கிட்டும். ‘‘இளமையில் கல்’’ ‘‘இளமையில் புகழ்’’ என்பது போல இளமை காலத்திலேயே செய்யத் தகுந்த நற்செயல்களை செய்து புகழ் அடைய வேண்டும். ஏனெனில் இந்த இளமை நிலையில்லாதது என்பதைத் திருமூலர் தம் திருமந்திரத்தில்,

‘‘பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலம் காவன கண்டும் அறிகிலார்
ஏலம் கடந்து அண்டம் ஊடு அறுத்தான் அடி
மேலும் கிடந்து விரும்புவன் நானே’’[90]

என்கிறார்., மேலும் இளமையானது சிறிது சிறிதாகக் குன்றித் தேயும் இயல்புடையுது. பௌர்ணமி நாளில் முழுவதுமாகக் காட்சி அளித்த நிலவானது சிறிது சிறிதாக தேய்ந்து போகும். அது போல் இளமையும் தேயும் தன்மையுடையது. எனவே மூப்பு அடைந்து உடலில் வலிமையற்றுப் போவதற்குள் இறைவனை வழிபட்டு மனிதாபிமானத்துடன் பிறருக்கு உதவி செய்ய வேண்டும் என்கிறார் திருமூலர்.

உடலுக்குரிய இளமைப் பொலிவு வளர்வது போலவே,தளர்ந்து முதுமை அடைவதும் இயல்பாகின்றது.இந்த உண்மையை எல்லோரும் உணர்ந்தால்,வீணே செருக்கு அடைய மாட்டார்கள். இதற்காகவே இந்த நிலையாமையை

முன்னறிவிப்புச் செய்கிறார் திருமூலர். மக்கள் இறை உணர்வில்லாமல் பல ஆண்டுகளை வீணாக்குகின்றனர். உலக உயிர்கட்கெல்லாம் அப்பனாகிய இறைவனை உள்ளத்திலே கொண்டவர்கள் பலர். அவர்களும் இறைத்தன்மையின் முழுமையை உணரவில்லை. மக்கள் கூட்டம் நீண்ட காலம் வாழ்கின்ற வாய்ப்பு இருந்தும், தூண்டு விளக்கின் பெருஞ்சுடரான இறைவனை அறிந்து தொழாமல் காலத்தை வீணே கழிக்கின்றனர் என திருமூலர் விவரிக்கின்றார். இளமைப் பருவத்தின் நிலையாமையை உணர்ந்த நல்லறிவாளர்கள் மூப்பு நிச்சயமாக வரும் என்று கருதி இளமையிலேயே துறவு பூண்டனர். இவர்கள் குற்றம் நீங்காத நிலையற்ற இளமைப்பருவத்தில் மகிழ்ந்து வாழ்ந்தனர். முதுமையில் கோலை ஊன்றி எழுந்திருப்பார் என்று உணர்த்தப்படுகின்றது.

இளமைப் பருவம் என்றுமே நிலையில்லாதது. எனவே அத்தகைய பருவத்தை வீணாக்காமல் நன்மையைச் செய்து பயன்பெற வேண்டும் என்கிறார். செல்வத்தில் சிறந்து மாட மாளிகைகளையும், அரண்மனைகளையும் பெற்ற அரசனாலும் செல்வம் நிலையில்லாதது தான் என்பதை உணர்ந்தால் அச்செல்வத்தை உடனே வெறுத்து விடுவர் என்று பாம்பாட்டிச்சித்தரும் தெளிவுபடுத்துகின்றார்.

### 3.15 உடல், இளமை நிலையாமை

பிறந்த பத்தாண்டில் இளமை நம்மைவிட்டுச் செல்லும் முப்பதில் உடலின் பொலிவு நீங்கும். நாற்பதில் உடலில் கொழுப்பு சுருங்கிவிடும். ஐம்பதில் உடல் வலிமை குன்றி, அறுபதில் தாது குறைந்து, எழுபதில் கண்ணின் ஒளி மங்கி தொண்ணுற்றில் மனஆற்றல் குறைந்து, நூறாவது ஆண்டில் உடலைவிட்டு உயிர் நீங்கி விடும்.எனவே நிலையில்லாத சிற்றின்பத்தைத் தரும் உடலை விடும்போது பேரின்ப கதியாகிய இறைவனை அடைவது சிறப்பானது என்பதை சித்தர்கள் உணர்ந்துகொண்டு தவ வாழ்க்கையை மேற்கொள்கின்றனர் என்பதை,

“இட்டமிடும் இளமைநலம் ஈரையாண்ட தனில்

இருபதனில் வளர்ச்சியில்,முப்பதுவருடத் தழகும்

உப்பகைய மேதையும்நாற் பதுவருடத்து,உடலின்
ஒண்பலமும் ஐம்பதினில், அறுபதினில் தாதும்
திட்டியும்அங் கெழுபதினில்,என்பதினில் செவியும்
திகழ் மனமும் தொண்ணூறில், சீவனும் நூறளவில்
விட்டகல விரவியுதீத் தோடுங்குவதென் றுணதோர்
வீணாள்பட் ழியாமல் விரும்புனற் றவமே'' [91]

## 3.16 உயிர் நிலையாமை தத்துவம்

திருமூலர் தம்முடைய பாடல்களில் நிலையாமை ஒன்றே நிலையானது என்ற மெய்ம்மையை நிலைநாட்டினார். உயிரென்பது ஒளி அணுவாகும். இது பேரொளியாகிய இறைச் சுடரிலிருந்து தோன்றுகிறது. தழைக்கின்ற சிவந்த தளிரையும் குளிர்ந்த மலரையும் கொண்ட பூக்கிளைகள் அழகு காட்டி ஒருநாள் காய்ந்து உதிர்கின்றன. இதனைக் கண்ட நாமும் இப்படித்தான் ஒரு நாள் இறப்போம் என்று கருத வேண்டும். வழிபட தவறினால் எமன் அழைக்கும் நாளில் இறைவனை அறிந்து போற்றுவதற்கு எவர்க்கும் வாய்ப்பில்லாமல் ஆகிவிடும். இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில்,பாம்பாட்டி சித்தர் பாடலைக் காணலாம்.

''நீரில் எழும் நீர்க்குமிழி நிலைகெடல் போல
நில்லாத உடல் நீங்கி விடும் நிச்சயம் என்றே
பாரிற்பல உயிர்களைப் படைத்த வன்தனைத்
பற்றவே நீ பற்றி தொடர்ந்து ஆடுபாம்பே''[92]

நீரில் எழும் நீர்க்குமிழி எவ்வாறு நிலை இல்லாமல் அழிந்து விடுகிறதோ, அதுபோல மனிதனின் உடலுள் உயிரும் ஒரு நாள் அழிந்து போகும் என்பது பாம்பாட்டி சித்தரின் கருத்தாகும்.

## 3.17 சிவ தத்துவம்(அ) இறை தத்துவம்

இறைவனைக் குறித்தும் இறைவனது குணங்களைக் குறித்தும் பல்வேறு அறிஞர்கள் பற்பல கருத்துக்களைப் புலப்படுத்தியுள்ளனர். ஆயினும் இறைவனது

குணங்கள் அறிய இயலாததாய் இருக்கின்றன. பாம்பாட்டி சித்தர் இறைவனது தன்மையினை மிக எளிமையாக வெளிப்படுத்திகின்றமை ஈண்டு குறிப்பிடத்தக்கது.

"பொன்னில் ஒளி போல வெங்கும் பூரணமதாய்
பூவின் மணம் போலத் தங்கும் பொற்புடையதாய்
மன்னும் பல உயிர்களில் மன்னிப் பொருந்தும்
வள்ளலடி வணங்கி நின்று ஆடும்பாம்பே"[93]

எனும் பாடலில் இறைவன் பொன்னில் நிறைந்திருக்கும் ஒளி போலவும், பூவில் தங்கியிருக்கும் மணம் போலவும் மண்ணுலகில் வாழும் உயிர்களில் நீக்கமற நிறைந்திருக்கின்றான் என்றும் இறைவன் வெளியில் எங்கும் இல்லை நம் உடலிலேயே தங்கியிருக்கின்றான் என்றும் கூறுவது உள்ளத்து உள்ளானடி கோயில் உள்ளேயும் உள்ளானடி எனும் கவிமணியின் பாடல் வரிகளுக்கு இணையாக அமைந்து உள்ளது. எள்ளில் எண்ணெய் போல இறைவன் எங்கும் நிறைந்தவன் எனக் கூறுவதும் இறைவன் மனித உடலில் வாசம் செய்பவன் எனும் தத்துவத்தை தெள்ளிதின் விளக்குகின்றது

### 3.18 சித்தர்களின் குணம்

சித்தர்களில் சிலர் மக்களிடம் கடுமையாக நடந்து கொள்வதுண்டு. அவர்கள் சினந்தாலும், சீறினாலும் வெறுத்து ஒதுக்கக் கூடாது. நம்மிடம் உள்ள தீயசக்திகளை அவர்கள் அவ்விதம் விரட்டி அடிப்பார்கள் சித்தர்கள் என்றால் இப்படி இருப்பார்கள் என்றோ,இப்படித்தான் நடந்து கொள்வார்கள் என்றோ நாம் வரம்பு கட்டுவதற்கில்லை. அவர்களிடம் ஓர் ஈர்ப்பு சக்தி இருக்கவே செய்யும். அதனால்தான் காடு,மலை,குகை தனியிடம் நாடிச் சென்ற போதும் மக்கள் அவர்களைப் பின் தொடர்ந்தனர். அவர்கள் சீறினாலும், சினந்தாலும், காரி உமிழ்ந்தாலும் அவற்றைத் தமக்கு வழங்கப்பட்ட வரமாகவே மக்கள் கருதினர். சித்தர்கள் எது செய்தாலும் அது மக்களுக்கு நன்மை விளைவிப்பதாக இருக்கும் என்பது மட்டும் உண்மை.

### 3.19 சித்தர்களின் தத்துவம்

சித்தர்களின் தத்துவம் குறித்துத் தேவபேரின்பன் கூறும்போது, பொதுவாக அவற்றில் இந்திய மரபு வழியிலான ஆன்மிகத் தத்துவச் சாயலையும் உலகாயத்தின் கூறுகளையும் காணலாம். ஆனால் அவர்களை இவ்வாறு பொதுவாக வரையறுத்துவிட முடியாது என்று கூறுகிறார். மேலும் ஹரிதாஸ் பட்டாச்சாரியாவின் ‘‘யோகா உளவியலை’’ மையமிட்டு ,சித்தர் என்பது எண்ணங்களைக் குறிக்கும் சொல் , அதனை நமது புலன் உறுப்புகளால் அறிந்து கொள்ள முடியாது. மனதில் ஓயாது எண்ணங்கள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. புறப்பொருளின் தாக்கத்தினால் ஏற்படுபவை. இந்த எண்ண அலைகளை ஒடுக்கி, அலைகளே இல்லாத சமாதி நிலையை அடைவது சித்தர்களது நோக்கமாக இருக்கிறது. இது புலன்களைக் கட்டுப்படுத்தி உள்வாங்கும் நிலையைக் குறிக்கின்றது. இந்த நிலை கைவரப் பெற்றவர்களைச் சித்தர் என்று குறிப்பிடுகின்றனர். அவர்களால் எதிலிருந்தும் விலகி இருக்க முடியும் என்று எஸ்.தோதாத்ரி கூறுகின்றார்.

### 3.20 யாக்கை நிலையாமை

நிலையில்லா உடலையும், செல்வத்தையும் வைத்து எதையும் செய்ய இயலாது, ஆடம்பரமாக சுகபோக வாழ்க்கை தேவையில்லை. உடலுக்கு வாசனைத் திரவியங்கள் தேவையற்றது. நாம் இறந்த பின்பு நம்மோடு வருவதும் எதுவுமில்லையென்கிறார் குதம்பைச் சித்தர்.

‘‘காகம் கழுகு களித்துன்னும் மேனிக்கு
வாகனம் ஏதுக்கடி குதம்பாய்’’[94]

பிறப்பென்று ஒன்று உண்டென்ற பொழுதே இறப்பென்பதும் தவிர்க்க இயலாதது இவ்விடைப்பட்ட காலத்தில், பொய், களவு,கொலை, காமம் போன்று இன்னபிற செயல்களெல்லாம், எதற்காக? இந்த உடல் அழியக்கூடியது என்ற

நிலைப்பாடு மனதில் எழுந்தாலே பிற தீயச்செயல்கள் தவிர்க்கப்படுமென்பது கருத்தாகும்.

### 3.21 சாதியை சாடுதல்

மனித குலத்தை அழிக்க வந்த வேராக இருப்பதில் சாதி முக்கியமானதாகும். நாட்டுப்புறத்திலிருக்கும் பாமரரைக் காட்டிலும், நகர்புறத்திலிருக்கும் படித்தவரே, சாதி வெறியால் மதியிழந்து செயல்படுகிறார். சாதியத்தைச் சமூகத்தின் புற்றுநோய் என கருதலாம்.

“பார்ப்பாரைக் கர்த்தர், பறையறைப் போலவே
தீர்ப்பாய்ப் படைத்தாரடி குதம்பாய்
தீர்ப்பாய்ப் படைத்தாரடி”[95]

இறைவனால் படைக்கப்பட்ட சாதிகள் இரண்டு மட்டுமே. அது ஒன்று ஆண் சாதி, மற்றொன்று பெண் சாதி என்கிறார். மற்ற எல்லாம் மனிதனால் கற்பனையாக உருவாக்கப்பட்டவை என்கிறார். பார்ப்பாராக இருந்தாலும் பறையராக இருந்தாலும் பிறப்பால் அனைவரும் சமம் என்கிறார். வள்ளுவர் “பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்(குறள் 972) என்பார். சித்தரும் அதி சிவன் உலகை படைத்த போது சாதிகளை படைக்கவில்லை என்கிறார்.

### 3.22 செல்வம் நிலையாமை

நாம் பொன்னையும், பொருளையும் தேடும் முயற்சியில் காலத்தை கழித்துக் கொண்டிருக்கிறோம். இவை நிலைத்த செல்வமில்லை என்ற நிலைப்பாடு தெரியாமல் பொருளைத் தேடுகிறோம்.மனிதன் இறந்த பின்பு அவன் சேர்த்த பொன்னும்,பொருளும் அவனோடு வருவதில்லை. இந்நிலைப்பாடு அரசனுக்கும் ஆண்டிக்கும் பொதுவானதாகும்.

போம்போது தேடும் பொருளில் அணுவேனும்
சாம்போது தான் வருமோ? குதம்பாய்
சாம்போது தான் வருமோ? [96]

இவ்வாறு பொன்னும், பொருளும் நிலையானதில்லை என வலியுறுத்துகிறார்.

### 3.23 சித்தர் பாடல்களில் தத்துவங்கள்

திருமந்திரத்தில் உள்ள செய்யுளடிகள் வெண்டளை பயின்று வருகின்றன. இதன் யாப்பு வெண்பாவிற்கும் விருத்தப்பாவிற்கும் இடைப்பட்டதாக உள்ளது. இந்நூலின் யாப்பமைதி பற்றியும் கருத்தாழம் குறித்தும் அறிஞர் கு.அருணாசலக் கவுண்டர் கூறுவது இங்குக் கருதத்தக்கது.சிறு கலிவிருத்தங்களால் அமைந்தத இதன் மூவாயிரம் பாடலும் ஒரே யாப்பில் அமைந்தது என்றாலும் வாசகர்க்குச் சலிப்போ அலுப்போ தோன்றுவதில்லை. அந்த யாப்பைக் கையாளுவதில் திருமூலர் அபார வெற்றி அடைந்திருக்கிறார். ஆழ்ந்த சிந்தனைகள், உள்ளுணர்வுகள் புதைப்பொருள்கள் உருவங்களைக் கொண்டதேனும் பழகு தமிழில் மிக எளிய சிறு சொற்கள் பாடலிலே சிறகடித்துப் பறக்கின்றன. சிந்தனையைக் கிளருகின்றன. ஓசையும் பொருளும் இசையுமாறு உருவகக் கவிதைகளை உருவாக்கியிருப்பது பெரிய சாதனை தான் பேராசிரியரின் இக்கூற்று உண்மைதான் என்பதற்கு ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதமாக உதாரணம் காட்டலாம்.

''அன்பே சிவம் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவம்என்ப தாரும் அறிகிலார்'' [97]

''நான் பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்'' [98]

''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்''
நன்றே நினைமின்'' [99]

''கற்றவர் பேரின்பம் உற்றுநின் றாரே''[100]

''பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நகரத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே!''[101]

### 3.24 உடல் பற்றிய சித்தர்களின் கருத்து

சித்தர்களின் பார்வையில் உடம்பு என்பது மோட்சம் சாதனம் அதாவது வீடுபேற்றிற்க்கான கருவி யோகம் என்கிற மனோ-வேதிச் செயலுக்கு அதுவே அடிப்படை. இதனை காயசாதனை என்று சொல்லுவர் அகப்பேய்ச்சித்தர் காயசாதனையைத் தேவஞானம் என்கிறார்.

"யோகம் ஆகாதே அகப்பேய்!
உள்ளது கண்டக்கால்
ஞானமடி அகப்பேய்
தேடாது சொன்னனே" [102]

இந்த நிலையில் உடம்பு தூய்மைப்படுத்தப்பட்டு சிதைக்க முடியாத தன்மையைப் பெறுகிறது. சித்தர்கள் உடம்பை ஆக்கபூர்வமான ஒன்றாகவே கருதுகிறார்கள். இந்த நிலைப்பாடு உடம்பைப் பழித்தும் அதனை ஓர் இழி பொருளாக எண்ணியும் வசைப்பாடுகிற மற்ற சமயச் சிந்தனையிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாகும்.

### 3.25 திருமூலரின் பாடல்களில் நிலையாமை

மாற்றம் ஒன்றையே மாறாத இயற்கையாகக் கொண்ட உலகில் பொருள்கள் யாவும், தோற்றத்திற்கும், மாற்றத்திற்கும், அழிவிற்கும் உட்படுகின்றன. இவ்வுலக இயற்கைச் சுட்டிக் காட்டுவதாக நிலையாமைக் கோட்பாடு அமைகின்றது.

பிறப்பு இறப்பு என்கிற எல்லைக்குட்பட்ட வரையறுக்கப்பட்ட மானிட வாழ்க்கை நிலையில்லாதது. இனிமையற்றது என்கிற சலிப்பு இயற்கையானது போல இங்கே கூறப்படுகின்றது. ஆனால் இது இயற்கையானதல்ல சலிப்பு என்பது ஒரு விடாமுயற்சியின் போது வருகிற பின்னடைவு இந்தச் சலிப்பை அகற்றுகிற தூண்டுதல்தான் நிலையாமைக் கருத்தின் அறுதிப்பயனாகத் தெரிகிறது. மொத்தத்தில் அவ்வப்போது மானுட வாழ்க்கை இனிமையற்றது என்று

உணரப்பட்டாலும், இந்தச் சலிப்புணர்வு வாழ்க்கை மறுப்பை நோக்கிச் சரிந்து விடமால் வாழ்வு பற்றிய பிடிப்பை ஏற்படுத்துவதாக உள்ளது. செய்கையான உடைமை நாகரீகத்தில் அதிகார வேட்டையில் ஈடுபடுகிற ஆண்களின் முயற்சியில் ஏற்படுகிற சலிப்பு என்ற நோய்க்கு சமண,பௌத்த மதங்கள் வழங்கிய மருந்தாக நிலையாமையைச் சொல்லலாம்''(ராஜ்1997:97) என்பார் ராஜ்கௌதம். ஆனால் திருமூலர் இறைப்பிடிப்பிற்கு ஏதுவாக நிலையாமையை வலியுறுத்திச் செல்கிறார்.

ஆரவாரம் செய்து எழும் சுற்றத்தவரும், மனைவியும் மக்களும் ஊருக்குப் புறம்பே உள்ள நீர்த்துறை வரை வந்து நீங்கிச் செல்வர்.

''ஆர்த்துஎழு சுற்றமும் பெண்டிரும் மக்களும் ஊர்த்துறைக்
ஊர்த்துறைக் காலே ஒழிவர்''.[103]

மண்ணால் ஆன குடம் உடையுமானால் அதன் பகுதியான ஓடு பயன்படும் எனப் பாதுகாத்து வைத்திருப்பார். ஆனால் உடல் என்பது உடையுமாயின் ஓர் இமைப்போதும் வீட்டில் வைத்திருக்கமாட்டார்கள் என்பதை,

''குடம் உடைந்தால் அவை ஓடு என்று வைப்பார்
உடல் உடைந்தால் இறைப்போதும் வையாரே''[104]

என்ற வரிகள் சுட்டுகின்றன. குடையும், கதிரையும், கொற்றவாளும் உடையவர் தம் யாக்கையும் அழியும். சாதாரண மக்களாயினும் நாடாளும் அரசனாயினும் போகும் உயிரைத் தடுத்து நிறுத்த எவராலும் இயலாது என்கிறார் திருமூலர்.

''நாட்டுக்கு நாயகனும் முன்னே பறைகொட்ட
நாட்டார் பின்செல்ல காட்டுக்குச் சிவிகையில் சென்றான்
நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே''[105]

என்றும் நிலையில்லாத உடலை நிலையென்று நம்பி மக்கள் வாழ்வதை,

"விடிஞ்சு இருள் ஆவது அறியா உலகம்

படிஞ்ச கிடந்து பதைக்கின்ற வாறே"[106]

என்பனவாக யாக்கை நிலையாமை பேசப்படுகின்றது. வாழ்க்கை உண்பதும், உறங்குவதும் இன்புறுவதாகவும் முடிந்தும் விடுவதும், மரணம் என்பதும் வாழ்க்கையின் எல்லைக் கோடாக அமைந்து விடுவதும் எடுத்துரைக்கப்படுகிறது.

"அடப்பண்ணிவைத்தார் அடிசிலை உண்டார்

மடக்கொடியாரோடு மந்தணம் கொண்டார்

இடப்பக்கமே இறை நோந்ததே என்றார்

இடக்கப்படுத்தார் இடந்தொழிந்த்தாரே"[107]

உணவு சமைத்தற்கான பொருள்களை ஈட்டி, சமைத்த நல்லுணவை உண்டு பெண்டிர் இன்பம் துய்த்தார். இடப்பக்கம் வலி என்று சொல்லிப்படுத்தார். இறந்தொழிந்தார் என்பது கருத்து. இக்கருத்தையே,

"உண்டார் படுத்தார் உறங்கினார் பேருறக்கம்

கொண்டார் எனக் கேட்டும் கூசிலையே"[108]

என்பார். வள்ளலாரும் இங்கு இறையருள் பெறுதல் வேண்டும் எனும் ஊக்கத்தை முன்மொழிந்து யாக்கை நிலையாமையைக் குறிப்பிடுகின்றார்.

### 3.26 இறைத் தத்துவம்

சமுதாயம் நலம் பெற மக்களோடு மக்களாய் இருந்து அனைத்து உயிர்களிலும் இறைவனைக் கண்டு மனித முன்னேற்றத்திற்கு வழிகாட்டுபவராக விளங்கியவர்கள் சித்தர்கள். மேலும் சமயத்துறையிலும்,சமுதாயத்துறையிலும் ஒரு புரட்சியை ஏற்படுத்தி, ஓரிறைக் கொள்கையையும், சமத்துவ நெறியையும் நிலைநாட்டியவர்கள். அகப்பேய்ச் சித்தர் இறைவனைப் பற்றிக் கூறும்போது அவன் ஆனந்தமயமானவன் என்றும் அவனைக் கண்டு கொண்டதாகவும் கூறுகின்றார். இறைவனின் பாசம் எங்குச் சென்றாலும் காணப்படுகின்றது என்பதையும்

உணர்த்துகிறார். இறைனை அடையும் ஞானமார்க்கத்தின் மூலம் பெரும் பயனாகிய சாயுச்சநிலையை,

"ஒன்றோடு ஒன்று கூடில் ஒன்றுங் கெடுங்கானே"[109]

என்று எடுத்துரைக்கின்றார்.

சித்தர்கள் இறை நம்பிக்கை கொண்டவர்கள் என்பதில் ஐயமில்லை, ஆனால் இறைவன் ஒருவன் என்ற கோட்பாடு உடையவர்கள் சித்தர்கள். இறைக்கோட்பாடு என்பது அண்டத்தில் உள்ள இறைவன் பிண்டத்திலும் உள்ளான் என்பதே ஆகும்

சித்தர்கள் இறைவனை வெறுக்கின்ற நாத்திகர்கள் அல்ல. அவர்கள் இறைவன் ஒருவனே என்ற நம்பிக்கை கொண்டு விளங்குகின்றனர். அத்தகு இறைவனும் நம் உடம்பிற்குள்ளே குடி கொண்டிருக்கிறான் என்று பல்வேறு சித்தர்கள் உரைத்திருக்கின்றனர்.

### 3.27 நீண்ட ஆயுள் தத்துவம்

மனிதன் என்பவனுக்கு பிறப்பினைப் போன்று இறப்பு என்பதும் உறுதி செய்யப்பட்ட ஒன்றாகும். அத்தகைய ஆயுட் காலத்தில் தங்களுடைய வாழ்நாளை அதிகரித்துக் கொள்ள சில முறைகளை சித்தர்கள் கூறியிருக்கின்றனர். அதில் காயகல்பம், என்ற ஒன்றை குறித்து வலியுறுத்துகின்றனர். காயகல்பம் என்பது மருந்தாக காணப்படுவதில்லை. இது ஒரு பயிற்சியாக உள்ளது. காயம் என்பது உடல். கல்பம் என்பது உடல் நலம், உறுதி ஆகியவற்றை அளிக்கக் கூடியது. எனவே காயகல்பப் பயிற்சி என்பது உடல் வளத்தைக் காத்து, வாழ்வின் வளமான நீண்ட ஆயுளை அளிக்க வல்லது. தத்துவஞானி வேதாத்திரி மகரிஷி அவர்கள் 40 ஆண்டுக் காலம் தொடர்ந்து ஆராய்ச்சி செய்து காயகல்பப் பயிற்சியை மக்களுக்கு அளித்துள்ளார். காயகற்பம் பற்றி வேதாத்திரி மகரிஷி கூறுவது,

"சுக்கிலத்தை மேலேற்றி மனதை வைத்துத்

துரித நிலை நின்று தவம் ஆற்றும் யோகம்
சுக்கிலத் தவம் குதத்துப் பயிற்சி கூட்டி
தூக்கம்,போகம், உணவு முன்னம் செய்ய
சுக்கிலமே கெட்டியாம், ஆண்மை ஓங்கும்
தொல்லைதரும் நோய் வகைபோம். இளமை காக்கும்
சுக்கிலத்தோடு உயிர் சீவ காந்தம் மிகும்
சூட்சுமமாம் இக்கலையே காயகற்பம்'' [112]

### 3.28 உடல் தத்துவம்

இறைவனை, கோயிலில் சென்று வழிபடுவதை விட மனித உடலில், உள்ளத்தில் உறைந்துள்ளான் என்று சித்தர்கள் வலியுறுத்துகின்றனர். மனிதனுக்குள் ஒரு சக்தியுண்டு. அதுவே கடவுள் என்பது தான் சித்தர் கோட்பாடாகும்.

'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்' என்றார் திருமூலர். மனத்தைப் பேண வேண்டுமாயின் உடலைப் பேண வேண்டும். அதனாலே திருமூலர், உடலை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன்' என்றக் கோட்பாட்டை வற்புறுத்தலானார். இறைவனின் ஆலயம் வெளியே இல்லை மனித உள்ளத்தில் தான் இருக்கின்றது என்றுரைத்து மனிதனை இறைவனடியாகக் காண்கின்றார்கள்

''உடல் தத்துவம்
நீளப்பா பிர்மாவில் வானந்தோன்றி
நிலையான வானத்தில் வாயுதானே
போகர் ஞானசூத்திரம்''[113]

சித்தர்களின் பார்வையில் உடம்பு என்பது மோட்ச சாதனம் அதாவது வீடுபேற்றிற்கான கருவி யோகம் என்ற மனோ-வேதிச் செயலுக்கு அதுவே

அடிப்படை என்பர். சித்தர்கள் உடம்பை ஆக்கப்பூர்வமான ஒன்றாகவே கருதுகிறார்கள்.

### 3.29 உயிர்த் தத்துவம்

உலகப் பொருள்களின் இயக்கத்திற்குக் காரணமாக அமைவது உயிர்த் தத்துவமாகும். இவ்வுயிர்த் தத்துவம் உடல், உயிர் ஆன்மாவை அணுகும் முறை முதலான பலவற்றையும் விளக்குகின்றது. உடலுக்கு அப்பால் உயிர் என்ற ஒன்று தனியே இல்லை. பூதங்களின் சேர்க்கை உடைந்து உடல் அழியும்போது உயிரும் அழியும். உடலை நிலைக்களனாகக் கொண்ட ஒரு பண்பே உயிர் என்பது சாருவாகத் தத்துவம் எனப்படுகின்றது.

### 3.30 அன்பெனும் மலர்

மனிதனின் வாழ்நாட்கள் என்பது இறைவனால் தீர்மானிக்கப்பட்டது. அத்தகைய இறைவனை வாழும் நாட்களிலேயே தேடி மனதார நினைத்தல் வேண்டும் என்று சித்தர்கள் வலியுறுத்தி கூறுகின்றனர். அன்பு என்ற நல்ல மலரை தூவி தெய்வத்தின் அருளைப் பெறுதல் வேண்டும் என்கின்றனர்.

“அன்பென்னும் நன்மலர் தூவிப் பார
மானந்தத் தேவின் அடியினை மேவி"[114]

என்று கடுவெளிச் சித்தர் இறைவனை அன்பு என்னும் மலரால் அர்ச்சித்து வணங்க வேண்டும் என்கிறார்.

இறைவன் படைத்த உடலைப் புறவுலக இன்பத்துக்குப் பயன்படுத்தாமல், ஞானத்தை கருவியாகப் பயன்படுத்தினால் உடம்பு சிறப்படையும், ஈசன் திருவடியை அறியாதவர்க்கு, உடல் என்பது மண்ணிற்கு இரையாகும் பொருள்.

“தசநாடி தசவாயு சத்த தாது
சார்ந்த மரக்கப்பல் அது தத்தி விழுமே
இசைவான கப்பலினை ஏக வெள்ளத்தில்
எந்நாளும் ஓட்டத்துணிந்து ஆடு பாம்பே”[115]

அழியக் கூடிய உடம்பிற்கு உறுதி சேர்க்க குண்டலினி யோகத்தால் பேரின்பத்தைப் பெறலாம்.

சித்தர்களின் தத்துவக் கொள்கைகள், உலகம், சாதி, சமயம், குடும்பம், வழிபாடு எனப் பல்வேறுபட்ட நோக்குகளில் அமைகின்றது. தத்துவத்தை மையமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் சித்தர்கள் ஆவர்.

சித்தர்கள் சமுதாயத்திற்கு விட்டுச் சென்ற நன்மொழிகள் சித்தர்களின் தத்துவம் எனப்படும். சித்தர்களின் தத்துவங்கள் காரண காரியத் தொடர்புடன் ஞானத்தின் வெளிப்பாடாய் விளங்குகிறது. பல்வேறு வகையான மூடப் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகளில் மூழ்கி இருக்கும் பூரித இனத்தை ஓர் வழியில் நல்வழிப்படுத்த சித்தர்கள் கூறிய மொழித் தத்துவங்களில் தாக்கம் பெறுகின்றன.

### 3.31 சாதியம் பற்றிய தாக்கங்கள்

சித்தர்கள், மக்களிடையே காணப்படும் சாதியப் பிரிவுகளை பழிக்கின்றனர். தமிழ்ச் சித்தர்கள் சாதி அமைப்பை மிகவும் எதிர்த்தார்கள். சாதி என்னும் பிரிவினில் தீயை மூட்டுவோம் என்று பாம்பாட்டி சித்தர் சாதிக்கு எதிர்ப்புக்குரல் கொடுக்கிறார்.

> “சாதிப்பிரிவினிலே தீயை மூட்டுவோம்
> சந்தை வெளியினிலே கோலை நாட்டுவோம்”[116]

என்கிறார். சாதிக்கு எதிரான சித்தர் பாடல்கள் சில கோ‘ங்கள் போல் ஒலிக்கின்றன.

சாதி, பேதம் அனைத்தையும் அறிவற்ற முட்டாள் மட்டுமே தேடுவார்கள். சாதியைத் தேடுபவர்களால் இறைவன் என்னும் ஒளியைக் காண முடியாது என்கின்றனர். சைவம், வைணவம் சாகிதம், கௌமாரம், காணாபத்யம், சௌரம் எனப்படும் ஆறு வகையான சமயவாதிகளும் தம் உள்ளத்தில் உறையும் இறைவனைக் காணவில்லை என்கிறார் திருமூலர்.

“ஆலயத்துள் நின்ற ஆறு சமயத்தோரும்

காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலர்”[117]

மனிதனை நெறிப்படுத்தி, அவன் உள்ளத்தினைப் பக்குவப்படுத்த வேண்டிய மத வழிப்பாட்டில் சடங்குகள் வந்து புகுந்தன. சமயச் சடங்குகளால் மக்களிடையே பல்வேறு முரண்பாடுகள், ஏற்றத்தாழ்வுகள் காணப்படுகின்றன.

சமயம் என்றால் சமைத்தல் அல்லது பக்குவப்படுத்தல் என்று பொருள்படும். மனிதனின் மனத்தைப் பக்குவப்படுத்துவதைச் சமயம் என்று கூறலாம். சித்தர்கள் சமயநெறி கொள்ளாதவர்கள். இறைவன் ஒருவனே எனக் கண்டவர்கள். இறைவனுக்குப் பூசைகள், வழிபாட்டு முறைகள் போன்றவை தேவையில்லை எனக் கூறியவர்கள்.

### 3.32 சித்த மருத்துவ தத்துவம்

சித்தர்கள், பல்வேறான உண்மைகளை அறிவுரைகளாகவும், சாதாரணமாகவும் மக்களுக்கு எடுத்து வழங்கியுள்ளனர். அதில் முக்கியமாக, மனிதனின் உடலுக்கும், மனதிற்கும் தேவையான ஒன்றையே முழுமையாக எடுத்தியம்பி உள்ளனர். சித்தர்கள், உடம்பு அழிந்து போகாமல் காப்பாற்றும் வழி அறிந்தவர்கள். தாங்கள் கண்டறிந்த உண்மைகளைப் பாடல்களாய் மக்களுக்கு வழங்கியுள்ளனர். மனதைச் செம்மைபடுத்த ஆசனம் மற்றும் யோக நிலைகளை முறையாகச் செய்ய வேண்டுமென்று வலியுறுத்தியுள்ளனர். மருந்து என்பது உடலில் தோன்றி நோயை நீக்கி குணமாக்கி உளநோயாகிய மனநோயையும் நீக்குகிறது. சித்த மருத்துவத்தில் நோயின்றி வாழ, நோய்வராமல் தடுக்க காயகற்ப முறைகள் முதன்மையாகக் கூறப்பட்டுள்ளன. நல்ல மருந்தை உட்கொள்ளும் போது அந்த மருந்துகள் குருதி அணுக்களை இளமைத் தலமாக மாற்றி இரத்த அணுக்களுக்கு அழிவுபடா இளமை நலம் தருவதால் உடலில் நோய் வராத வண்ணம் மறுப்பது மருந்தாகும். இதைத் திருமூலர்,

"மறுப்பதுடல் நோய் மருந்தெனல் சாலும்
மறுப்பதுள நோய் மருந்தெனல் சாலும்
மறுப்பதினி நோய் வாராதிருப்ப
மறுப்பது சாவை மருந்தெனலாமே"[118]

### 3.32.1 மருந்திற்குரிய இலக்கணம்

1. உடல் நோயைப் போக்க வேண்டும்.
2. மன நோயைப் போக்க வேண்டும்
3. இனி நோய் வராமல் தடுக்க வேண்டும்
4. மரணம் வராமல் தடுக்கப்படுதல் வேண்டும்

### 3.32.2 தமிழ் மருத்துவம்

சித்தர்களின் மருத்துவ முறைகள் 'தமிழ் மருத்துவம்' என்றும் 'பாட்டி வைத்தியம்' என்றும் சிறப்பாக அழைக்கப்படுகின்றது. இவ்வகையான மருத்துவக் குறிப்புகளை மிகுதியாக திருமூலர், அகத்தியர், போகர் போன்ற சித்தர்கள் பாடல்களில் காணமுடிகின்றது.

இவர்கள் உணவை மருந்தாகவும், மருந்தை உணவாகவும் மாற்றியதுடன் தாதுப்பொருட்கள், நவலோகம், பாசானம், மூலிகை, கிழங்கு இலை இவைகளையும் இணைத்துக் காயகல்பம் போன்ற பல மருந்துகளைச் செய்து நெடு நாள் வாழும் சக்தியினைப் பெற்றதுடன், அவ்வழி முறையினைத் தம் பாடலில் கூறிச் சென்றுள்ளனர்.

### 3.32.3 உணவே மருந்து

"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"[119]

என்பது திருமூலரின் வாக்கு. இத்தகைய முறையினில் உடம்பினைப் பேணிக்காத்திட நோய் வரும்முன் காப்பதே சிறப்பாகும். அதற்கு நம்முடைய உணவு முறை மிகவும் அவசியமாமகின்றது.

“மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்”[120]

“ஒருபோது உண்பான் யோகி
இருபோது உண்பான் போகி
முப்போது உண்பான் ரோகி
நாற்போது உண்பான் பாவி”[121]

என்று சித்தர்கள் முழங்கியதற்கிணங்க நாம் உண்ணும் உணவு வகையிலும், முறையிலும் நம்முடலை நோயினின்றும் காத்திட உதவும் என்பதனை அறியலாம். கிராமத்தில் உள்ள மக்கள் சாதாரணமாக வெற்றிலை போடும் பழக்கம் உடையவர்களாக இருப்பார்கள். திருமணம் போன்ற சுபகாரிய வீடுகளில் மதிய உணவு முடிந்ததும், வெற்றிலை போடும் வழக்கம் இன்றளவும் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது. இதனை காலை, நண்பகல், இரவு என்ற மூன்று வேளையும் உண்பவர்கள் அடையும் பலன்தனை,“வைகறையில் வெற்றிலையினை அதிகமாக வைத்துமென்றால் கோழை, சூடு, பித்தம் போன்றவைகள் தீரும் என்றும், நண்பகலில் சுண்ணாம்பைக் கூடுதலாகச் சேர்த்துப் போட்டால், சீரணமும், தூக்கமும் உண்டாகும். இரவில் களிப்பாக்கினைக் கூடுதலாக உண்டால் மிகுதியான இன்பம் அடைய இயலும்” என்பதும் சித்தர்களின் வாக்கு ஆகும்.

சித்த மருத்துவத்தின் சிறப்பை உணர்ந்தவர்கள் நோயின்றி நீண்ட நாள் வாழ முடியும் எனலாம். ‘மனமது செம்மையானால் மந்திரம் வேண்டாம் என்பது போல்’ உடலது செம்மையானால் நோயோடும், மருந்தோடும் வாழ வேண்டாம் என்பதனை உணர்ந்து சித்தர்கள் காட்டிய மருத்துவ நெறியில் நிற்பவர்கள்,

சித்தர்களைப் போன்று காடுமலைகளில் அலையாமலேயே நிலைத்த ஆரோக்கியமான வாழ்வினை அடைந்து மகிழ முடியும் என்பர்.

### 3.32.4 எட்டு என்ற எண்

சித்தர்கள் கண்ட அறிவியல் தத்துவத்தின் படி எட்டு என்பது அடிப்படைக் கணக்காக உள்ளது.

“சொல்லிய நாழி கொண்டு
தூணியில் எட்டொன் றாக்கி
நன்னீா் விட்டே எட்டொன்றாய்
நாடிக் காய்ச்சிக் கொள்வீரே” [122]

என்று, மருந்துப் பொருள்கள் எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சினால் மருந்தாகும் என்பர். எட்டின் தத்துவம் மருந்துக்கு மட்டுமல்லாது எல்லாவற்றுக்கும் பொருந்துவதாக உள்ளது. சாதாரணமாகக் குடிக்கப் பயன்படுகின்ற வெந்நீா், எட்டுக்கு ஒன்றாகக் காய்ச்சினால் மருந்து என்று கண்டறியப்பட்டுள்ளது.

### 3.33 சித்தர்களின் சமநோக்கு பார்வை

சித்தர்கள், அகத்தில் கண் கொண்டு, ஆண்டவனை உள்ளத்தில் கண்டு மகிழ்வதே பேரானந்தம் எனக் கருதி, சிவனைக் கண்டு மகிழ்வதே பேறு பெற்றதாகும் என்கின்றனா். சமுதாயத்தில் மக்கள் “மெய்யுணா்வு” (அ) மெய்யறிவு பெற்றுத் திகழ வேண்டும் என்பதில் கருத்தாய் இருந்தனா். எந்த சமுதாயத்தில் மெய்யுணா்வு பெற்ற “மேன்மக்கள்” அதிகம் உள்ளாா்களோ அச்சமுதாயம் சீா்மை பெறும் என நம்பினா். உலகிற்குத் தங்கள் யோக சாதனையினால் ஒளியூட்டி சமுதாயத்தைப் பாதுகாப்பதே சித்தா்களின் குறிக்கோளாக உள்ளது.

‘யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்’ என்பதே சித்தர் இலக்கியத்தின் அடிப்படை உண்மையாக உள்ளது.

சித்தர்கள் நமது உடலுக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்தனர். வேதாந்த தத்துவங்கள் யாவும் ''காயமே இது பொய்'' உடலை விடுத்து உயிரின் ஈடேற்றத்திற்கு உழை' என்பதனைச் சித்தர்கள் கண்டிப்புடன் மறுத்தனர்.

கடவுளே நெறியை படைத்தவனாக விளங்குகிறான். நெருஞ்சி முள்ளை படைத்தவனும் இறைவனே ஆவார். நெறி தவறி நடந்தால் காலில் முள் குத்தும். நெறி தவறாமல் நடக்க வல்லவருக்கு அந்த முள் ஒன்றும் இடர் செய்யாது என்பதனை,

''நெறியைப் படைத்தான் நெஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவின் நெறிஞ்சில் முன்பாயும்
நெறியில் வழுவாது இயங்கவல் லார்க்கு
நெறியில் நெறிஞ்சில் முள் பாய கிலாவே''[123]

என்று இப்பாடல் வரிகள் காட்டுகின்றன. வாழ்க்கைக்கு என வகுக்கப்பட்ட பாதையில், நல்வழியும், தீய வழியும் உண்டு. இவற்றில் நாம் எவ்வழியைத் தேர்வு செய்கிறோமோ அவ்வாறே வாழ்வில் நன்மை, தீமை அமையும்.

### 3.34 மனதத்துவம்

#### பத்ரகிரியார்

பட்டினத்தாரின் சீடராக விளங்கியவர், அரசராக இருந்த பத்திரகிரியார் பட்டினத்தாருடன் தொடர்வு ஏற்பட்டவுடன் அரச போகத்தைத் துறந்து பட்டினத்தாரின் சீடராகி துறவு வாழ்க்கை வாழ்ந்ததாகக் குறிப்பிடுவார்.

'ஆங்கார உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமல் தூங்கிச் சகம் பெறுவது எக்காலம்' 124

'நான்' என்பது அகங்காரம். அந்த 'நான்' ஒருவனிடம் என்றைக்கு விடுபடுகிறதோ, அன்றைக்குத் தான் அவன் ஞானம் பெறுகின்ற தகுதியை உடையவன் ஆகிறான்.

### 3.35 சித்தாந்த தத்துவம்

தமிழ்மொழியில் விளங்கும் மிகப்பழைய தத்துவ நூல் திருமந்திரம் எனப்படுகிறது. திருமந்திரத்தில் திருமூலர், 5, 6, 7, 8, 9 போன்ற தந்திரங்களில் சித்தாந்த தத்துவம் பற்றி குறிப்பிட்டுள்ளார். சைவ சித்தாந்த சாஸ்திரங்கள் எனக் குறிப்பிடுகின்ற 14 நூல்களுக்கும் காலத்தால் மிக முன் தோன்றிய நூல் திருமந்திரம் எனப்படுகிறது.

சித்தாந்தம் என்னும் சொல்லுக்கு பல்வேறு அறிஞர்கள் பல்வேறு விளக்கங்களை தந்துள்ளனர். இச்சொல்லை மூன்று வகையாகப் பிரித்துப் பொருள் கூறலாம் எனப்படுகின்றது. சித், அந்தம் எனப் பிரித்து சித்துப் பொருள் பற்றிய முடிவு,

சித்தம் அந்தம் எனப் பிரித்து முடிவின் முடிவு என்றும்

சித்தர் அந்தம் எனப் பிரித்து சித்தர் கண்ட முடிவு

என்றும், பொருள் கொள்ளப்படுகிறது.

சித்தர்கள், சிவம் என்னும் சொல்லுக்கு செம்மை இயல்பு கொண்ட பரம்பொருளை குறிக்கும் என்கின்றனர். பரம்பொருளைப் பற்றிச் சித்தர்கள் கண்ட முடிவே சைவ சித்தாந்தமாகக் காணப்படுகின்றது.

சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் கி.பி. 14, 15 ஆம் நூற்றாண்டில் தோன்றியன என்பதில் அறிஞர் யாவருக்கும் மறுப்பு இல்லை. சித்தர்கள் அனைவரும் சித்தாந்தமாகிய தத்துவத்தை தம் பாடல்களில் குறிப்பிட்டிருக்கின்றனர். பாம்பாட்டிச் சித்தர், தமது பாடலில்

''சமயத்தி லேறினபேர் சித்தம் மாறுமோ

சித்தர்சித் தாந்தந் தேர்ந்து ஆடு பாம்பே'' [125]

என்ற இப்பாடலில், அம்பலமாகிய பெருவெளியில் சித்தத்தை செலுத்திய பிறகு, அச்சித்தமானது மாற்றம் அடையாது. இத்தகைய சித்தாந்தம் தெரிந்து பாம்பே ஆகுவியாக! என்று சித்தாந்தத்தின் இறைநிலையை உணர்த்துகிறார்.

சித்தாந்தம் என்பது சித்தரோடு இணைந்த நிலையைக் குறிப்பிடுவதாகவே உள்ளது. எனவே சித்தர் கண்ட உண்மை முடிவே சித்தாந்தம் எனவாயிற்று.

| | | |
|---|---|---|
| "சைவர்க்கு | - | 36 தத்துவங்கள் |
| வேதாந்திக்கு | - | 28 தத்துவங்கள் |
| வைணவர்க்கு | - | 24 தத்துவங்கள் |
| மாயாவாதிக்கு | - | 25 தத்துவங்கள்"[126] |

என்றவாறு திருமந்திரத்தில் தத்துவங்கள் குறிப்பிடப்படுகின்றது.

**3.36 வேதாந்த தத்துவம்**

திருமூலர், வேதாந்த கருத்துக்களை பற்றியும் தமது திருமந்திரத்தில் விவரித்துள்ளார். வேதத்தின் அந்தமே வேதாந்தமாகும் என்கிறார். தேவங்கள் என்பது ரிக், யஜீர், சாம, அதர்வனம் என்பதாகும். இதில் ரிக் வேதத்தின் முடிவும், அதர்வ வேதத்தின் முடிவும், யசூர் வேதத்தின் முடிவில் அடங்க, யசுர் வேத் முடிவு சாமவேத முடிவில் அடங்கும். எனவே வேதாந்தம் என்பது வேத முடிவுகளை குறிப்பிடுவதாக உள்ளது.

"திருமந்திரத்தில் 61, 62, 63, 65, 79, 80, 537, 944, 994, 1134, 1156, 1397, 1403, 1409, 1422, 1559, 1576, 1637, 1674, 1862, 1863, 2133, 2343, 2344, 2346, 2347, 2348, 2353, 2354, 2356, 2358, 2361, 2362, 2363, 2365, 2399, 2516, 2528, 2533, 2745, 2746, 2754 என்றவாறு 42 இடங்களில் பாடல்களின் இடையில் வேதாந்தம், வேதம் சொற்களை பயன்படுத்தியுள்ளார்."[127]

"வேதம் உரைத்தானும் வேதிய னாகிலன்
வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட
வேதம் உரைத்தானும் வேதியர் வேள்விக்காய்
வேதம் உரைத்தானும் மெய்ப்பொருள் காட்டவே"[128]

“வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தங் கேட்டுந்தம் வேட்கை ஒழிந்திலர்
வேதாந்த மாவது வேட்கை ஒழிந்திடம்
வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே”[129]

**3.37 வேதாந்த சித்தாந்த தத்துவம்**

திருமூலரின் கருத்துப்படி, ஆன்மீகத் துறையில் வேதாந்தம் பொதுவும், சித்தாந்தம் சிறப்பும் ஆகும் என்கிறார். இவற்றில் வேதம் - மந்திரம் என்பதும், ஆகமம் - தந்திரம் என்பதும் குறிப்பிடப்படுகிறது. திருமூலர் தம் நூலுக்கு மந்திரம் எனவும், உட்பிரிவுக்கு தந்திரம் எனவும் பெயர் சூட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

“தானான வேதாந்தம் தானென்னும் சித்தாந்தம்”[130]

நான் அது ஆனேன் என்னும் வேதாந்தத்திற்கும், அது நான் ஆனேன் என்னும் சித்தாந்தத்திற்கும் இடையே மிக நுண்ணிய வேறுபாடு உள்ளதை அறிய முடிகின்றது.

**3.38 சித்தன் சிவபெருமான்**

சரியை, கிரியை, ோயகம், ஞானம் என்று நான்கு படிகளிலும் பயிற்சியுடன் சிறப்புற்றவர்களுக்குத் தன்னைக் காட்டும் சித்தன் சிவபெருமான் ஆவார். அவன் தூங்காமல் தூங்கலாகிய யோக நிலையில் தோன்றி அணுவாகவும், ஒளியாகவும், உருவம் கொள்பவன் என்ற தத்துவம் போற்றத்தக்கதாக உள்ளது. சத்துவம், ராஜஸம், தாமசம் என்று முக்குணங்களும் சஞ்சிதம், ஆகாமியம், கன்மம் என்னும் மும்மலங்களையும் உடைய உயிர்களுக்கு எல்லாக் குணமும் உடையவனாகத் தோன்றுபவன் என்ற தத்துவ நெறியும் கொள்ளத்தக்கது.

“அஞ்செழுத்தாய் எட்டெழுத்தாய் ஐம்பத்தோர் அட்சரமாய் கொஞ்சப்
பிஞ்செழுத்தாய் எங்கும் பிரணவமாய்
பொருளாய் மருளாய்ப் புரையாய் உரையாய் இருளாத
அருளாய்த் தனியிருந்த ஆனந்தன்”[131]

என்று எல்லாமாக விளங்கும் சிவனைப் போற்றுகின்றனர்.

### 3.39 மனித தத்துவம்

சித்தர்கள் தங்களுடைய உள்ளுணர்வில் ஏற்பட்ட அனுபவங்களையே நன்கு ஆழ்ந்து சிந்தித்து அச்சிந்தனையின் விளைவாகத் தோன்றிய உண்மைக் கருத்துகளை விளக்குவதால் உலகினையும், உயிரினையும், உடலினையும், மனத்தினையும் குறித்த சித்தர்களின் சிந்தனைகள் தத்துவக் கருத்துக்களாக வெளிப்படுகின்றன. மனிதனது உடல், உயிர், கருவி கரணாதிகள் முதலானவற்றைத் தத்துவக் கோணத்தில் விளக்கியமையால் சித்தர்கள் மனிதனையே தத்துவ அடிப்படையில் காண்கின்றனர்.

"தூரோ டசைந்து கழன்று வரும் தத்துவத்தை
வேரோ டறத்து விளங்குவது மெக்காலம்?"[132]

என்று உடலையே தத்துவமாக்கி உரைக்கிறார் பத்திரகிரியார்.

படையுடைய தத்துவமும் பாதகங்களல்லவோ?[133]

என்று வினைகளைத் தத்துவமாக்கி உரைக்கிறார் சிவவாக்கியர்.

"தத்துவத்தைப் பார்த்து மிகத்தன்னையறிந்தறிவால்
உய்த்து னைத்தான் பாராம லுய்வாரோ பூரணமே"[134]

என்று கருவி கரணாதிகளைத் தத்துவமாக்கி உரைக்கிறார் பட்டினத்தார்.

சித்தர்கள் எல்லாச் சமயங்களுக்கும் பொதுவான அடிப்படை நெறிகளையே எடுத்துக் கூறியுள்ளனர். இவர்கள் சீர்திருத்தக் கருத்துக்களை வலியுறுத்தி மக்களுக்கு நல்வழி காட்டியுள்ளனர்.

சித்தர் பாடல்கள் பொது மக்களுக்கு புரியும் வண்ணம் எளிமையான நடையில் அமைந்தவையாக உள்ளது. அரிய பல உண்மைகள், கருத்துகள் அடங்கியவை. கல்லாதவர், கற்றவர் இரு சாராருமே மகிழும் வகையில் அப்பாடல்கள் விளங்குகின்றன.

### 3.40 சூ.ஃபிஸம்

இஸ்லாம் மதத்தில் கிளைத்த பிரிவான சூ.ஃபிஸம் என்பது அன்பு வழியில், ஞானயோக மார்க்கமாக இறைவனை அடையும் வழியில் சென்ற ஒன்றாகும். சூ.ஃபிகளின் முக்கிய பணிகளில் ஒன்று சாதி சமய பூசல்களைச் சாடுவது ஆகும்.

“சூ.ஃபிகள் இஸ்லாம் சட்டப்படி விலக்குவன விலக்கியும், கொள்வன கொண்டும். அச்சமயத்தைக் கடுமையாகப் பின்பற்றினர். வளர்ச்சிப் பாதையின் முடிவாக, பிரபஞ்ச உணர்வு, பேரின்பக் காட்சி, மெய்ப்பொருளுடன் ஒன்றாகப் பேரின்பத்தில் திளைத்தல் முதலியவற்றைப் பெறுதலில் நிறைவு பெற்றனர்”[135]

சூ.ஃபி என்னும் சொல் ஸோபி என்ற கிரேக்க மொழிச் சொல்லிலிருந்து உருவானது. அரபியில் இதன் பொருள் ‘தத்துவம்’ எனப்படுகிறது.

### 3.40.1 சூ.ஃபி தத்துவம்:

- ❖ எல்லாவற்றையும் விட்டுவிட்டுக் கடவுளைத் தழுவியவர்கள்
- ❖ கடவுள் மீது வாழ்வையும் மரணத்தையும் வைத்திருப்பவர்
- ❖ எவராலும் விரும்பப்படாதவர்கள் எவரையும் விரும்புபவர்கள்
- ❖ தம்மைக் கடவுளின் கரங்களில் ஒப்படைத்து விட்டார்.
- ❖ புனித வாழ்வு தியாகம், நற்குணம் ஆகிய அனைத்தும் ஒருங்கே சேர்ந்திருப்பவர்கள்

“இந்துக்களுடைய தெய்வம் காசியிலும், இஸ்லாமியருடைய தெய்வம் மக்காவிலும் இருக்க, அனைவருக்கும் பொதுவாகிய தெய்வம் எல்லா உயிர்களின் இதயத்துள்ளேயே இருக்கிறது”[136]

தமிழகச் சித்தர்கள், மத வேறுபாட்டோடு ஜாதி வேறுபாட்டையும் எதிர்த்துச் சாடியவர்கள். இஸ்லாம் மதத்தில் சாதிகள் இல்லையாதலால், சாதி வேறுபாடு பற்றி பாடுகின்ற நிலை இல்லை. அந்தக் கால கட்டத்தின் கொந்தளிப்பான இந்து

முஸ்லீம் நிலைபாட்டில் ஒருமைப்பாடு காண – மத நல்லிணக்கம் காண போராடினார்கள்.

### 3.41 பிறப்பில் தொடர்புடைய நட்சத்திரங்கள்:

ஒருவர் பிறக்கின்ற அதே நேரத்தில் அவருடன் கூடவே சேர்ந்து ஒரு நட்சத்திரமும் ஆகாயத்தில் முளைக்கும், குழந்தை படிப்படியாக வளர்ந்து வாலிபப் பருவம், பின்பு முதுமை என பல நிலைகளை அடைந்து இறக்கும் பொழுது அந்த நட்சத்திரம் வானிலிருந்து கீழே விழுந்து மறைகிறது. பிறப்பு அவரவர் நல்வினை, தீவினைக்கேற்ப வாழ்க்கை அமைகின்றது என்றும் சிரஞ்சீவியாக இருக்கும். பிறப்புகளும் உண்டு. இப்படி வானில் உள்ள எண்ணற்ற நட்சத்திரங்களெல்லாம் மக்களின் நட்சத்திரமே என்கின்றனர். இவ்வாறாக மனிதப் பிறவியில் மறைந்திருக்கும் ரகசியத் தத்துவங்கள் ஒவ்வொரு விதமாக சித்தரிக்கப்பட்டு வருகின்றன.

### 3.42 ஆலய தத்துவம்

“ஆலயம் என்பது ‘ஆ’ ‘லயம்’ எனப் பிரியும். ‘ஆ’ என்பதற்கு ஆன்மா என்பது பொருள். லயம் என்பதற்கு விரும்புதல் என்பது பொருளாகிறது. கடவுளின் திருவடியில் ஆன்மா விரும்பி இருக்கும் இடம் எனவும் ஆ – ஆணவ மலம் லயம் அடங்கி இருத்தல், அதாவது ஆணவ மலம் அடங்கியிருக்கும் இடம் ஆலயம் எனவும் பொருள்படும்”[137]

கடவுள், நிலத்திலும் நிலத்தில் வாழும் எல்லாப் பொருள்களிலும் உயிர்களிலும் இருக்கின்றார்கள். பசுவின் உடல் எங்கும் பால் வியாபித்தாலும் அது தன் மடுவின் வழியாகவே பாலினை வழங்குகின்றது. அதுபோல் இறைவன் நீக்கமற உலகெங்கும் பரவி இருந்தாலும், சிறப்பாக ஆலயங்களில் நின்று அருள் பாலிப்பவராக உள்ளார்.

ஆகம விதிப்படி அமைக்கப்படும் ஆலயங்கள் மனித உடலின் புறச்சின்னமாகும். அண்டம் எங்கும் வியாபித்திருக்கும் இறைவன் மனித உடலில்

வீற்றிருக்கின்றார். உயிருக்கு இருப்பிடம் உடல். உடலைக் கொண்டே உயிரை அறிய வேண்டும். உயிர் அனைத்துக்கும் பொதுவாகவும், ஆதரமாகவும் இருப்பது எதுவோ அதுவே கடவுளாக அமைகின்றது. உடம்பின் பயனே இறைவனை அடைவது என்ற தத்துவத்தை உணர்த்துவது. உடம்பை மெய்யுணர்வு வழியில் பழக்கி திருவடி உணர்வினைப் பெறுதல் வேண்டும். நம் உடம்பில் சிவபிரான் உயிர்க்குயிராய் கோவில் கொண்டுள்ளான் என்னும் உண்மையை உணர்ந்து இவ்வுடம்பு அவன் உடைமை என்று எண்ணுதல் அவசியமாகின்றது என்பதனைத் திருமூலர்.

“உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்
கள்ளப் புலனைந்தூரங் காளா மணிவிளக்கே”[138]

கோயிலுக்கு முக்கியமான கோபுரம் மனித உடலமைப்புடன் பொருந்தியே அமைக்கப்பட்டுள்ளது. கோபுரத்தில் அமைக்கப்பட்ட பொம்மைகள் நம் மனித வாழ்வின் புறச்சின்னங்களை உணர்த்துவதாக உள்ளன. மூன்று சுற்றுகளை உடைய பிரகாரம் அன்னமயம், பிராணமயம், மனோமயம்,என்னும் மூன்று கோசங்களையும், ஐந்து பிரகாரங்கள் உள்ள கோயில்களில் இந்த மூன்றுடன் விஞ்ஞானமய, ஆனந்தமய கோசங்களைக் குறிக்கும். ஐம்புலன்களை அடக்கினால் உயர்நிலையை அடையலாம் என்பதை உணர்த்தவே ஐந்து பிரகாரங்களைப் பலமுறைச் சுற்றி வலம் வருவது கோசங்களைக் கடந்து இறைவன் விளங்குவதை உணர்த்துகிறது. சூட்சும நிலையில் இறைவனை நெருங்குவதே பிரகாரங்களை வந்து அடைவதன் நோக்கமாகும் என்பதாக உள்ளது.

கருவறையின் மேல்புறம் உள்ள விமானம் தூய்மை வாய்ந்த சிவகுறியாகும். பலிபீடம் நந்தி இவற்றையே சிவலிங்கம் என்று திருமூலர் உரைக்கின்றார்.

"தூய விமானமுந் தூல தாகுமால்

ஆய சதாசிவ மாகுநற் சூக்குமம்

பய பலிபீடம் பத்திர லிங்கமாம்

ஆய அறநிலை ஆய்ந்துகொள் வார்கட்கே"[139]

பரமாத்மா என்பதை நம் உடலாகிய ஆலய தத்துவங்கள் வாயிலாக அறிய முடிகின்றது.

மனித உடலுறுப்புகள் இறைவனை நுகர்வதில் பெரும் பங்கு வகிக்கின்றது. கண் இறைவனை காண, காதுகள் மந்திரங்கள் தேவார திருவாசகப் பாடல்களைக் கேட்பதன் மூலமும், கை இறைவனை வணங்குவதன் மூலமும், கால்கள் ஆலயத்தை நோக்கி செல்வதன் மூலமும், தலை தீர்த்தம் கொண்டு தூய்மை பெறுவதன் மூலமும் பயன் பெறுகின்றன. இவ்வாறாக உலகை அறிய அமைந்த இப்போர்களின் துணை கொண்டு உடலில் உள்ள இறைவனை அறிந்து மகிழலாம் என்பதைத் திருமூலர் விளக்கிக் கூறியுள்ளார்.

### 3.43 மானுட யாக்கையை மதித்தல்

பிறவி என்பது ஏழு வகை என்று முன்னோர்கள் குறிப்பிடுவர். அதில் உள்ள பல்வேறுப்பட்ட பிறவியில் மானுட யாக்கையை பெறுவது என்பது மிகவும் அரிதாகும்.

"எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான்

யாதினும் அறிதுகாண்

இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ

ஏதுவருமோ அறிகிலேன்"[140]

என்று தாயுமானவர் குறிப்பிடுகின்றார்.

### 3.44 தொகுப்புரை

உலக இன்பத்தை துறந்து, தான் தன்னுள் தேடி அறிந்ததைத் தனக்காக அன்றிப் பிறருக்காக உரைப்பதே தத்துவம் என்பது சித்தர்கள் வாழ்விலிருந்து

பெறப்படுகின்ற உண்மையாகும். தத்துவங்களின் வகைகளை வரையறுக்கும் அபிதான சிந்தாமணி நூல், சித்தர்களின் தத்துவங்கள், சித்தர்களின் உடல் தத்துவம், தத்துவம் தொகை வகை, திருமந்திரம் – வாழ்க்கைத் தத்துவம், நிலையாமை குறித்த செய்திகள், சிவவாக்கியரின் புரட்சிகரமான சிந்தனைகள், இறை நிலையை உணர்த்தும் தத்துவங்கள், மனிதனின் ஆயுள் தத்துவம், மற்றும் மருத்துவ தத்துவம், உணவே மருந்தாகும் தத்துவம், எட்டு என்ற எண் உணர்த்தும் தத்துவங்கள், சூ.ஃ.பி தத்துவம், மற்றும் சூ.ஃ.பிஸம் பற்றிய விளக்கங்கள், சித்தர்களின் சமநோக்குப் பார்வை,வேதாந்த, சித்தாந்த தத்துவங்கள், ஆலய தத்துவம் மானுட யாக்கையின் சிறப்பு போன்ற செய்திகள் இவிவ்யலில் இடம் பெற்றுள்ளன.

சித்தர்களின் தத்துவத்தை இறைத்தத்துவம், வாழ்க்கைத் தத்துவம் என இரு வேறாகப் பகுத்துக் கொள்ளலாம். இறை நம்பிக்கை உடைய தமிழ்ச் சித்தர்கள் இறைவன் ஒருவனே என்ற ஓரிறைக் கோட்பாட்டினை உடையவர்கள்.

சித்தர்களுக்கென்று சில மரபுவழி நம்பிக்கைகள் இருந்த போதிலும், அவர்கள் அனைவருமே சமுதாயம் உய்ய வேண்டுமென சிந்தனை கொண்டவர்களாகவே இருந்துள்ளனர். சமுதாய சிக்கல்களின் காரணிகளாக விளங்கும் கடவுள், சாதி, சமயம், சடங்கு, வேதம், போலித் துறவு முதலியன பற்றிய தம் கருத்துக்களைப் பாடல்களின் வழி வெளிப்படுத்தியுள்ளனர். பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் உண்டாவது மனித உடல். உயிர் தன் வினைக்கீடாக எடுத்த உடல் தொண்ணுற்றாறு தத்துவங்களை உடையது. முப்பத்தாறு தத்துவங்களைப் பட்டினத்தார்,

மூன்று வகைக்கினையும் முப்பத்தரு வரையும்

கின்று விழச் சுட்டுக் கருவே றறுத்தாண்டி

என்றவாறு குறிப்பிடுகிறார். உலக இயக்கத்திற்கு காரணமாக அமைகின்ற உயிரத்தத்துவத்தைக் குறித்துச் சித்தர்கள் விரிவாக விளக்கியுள்ளனர். உடலை நிலைக்களனாகக் கொண்ட பண்பே உயிர் என்கின்றனர்.

பண்டைய இந்தியத் தத்துவ மரபுகளில் உடல், உயிர் பற்றிய கருத்துகள் உடல் வேறு, உயிர் வேறு என்று தனித்தனியாக சித்தரிக்கப்பட்டது. ஆனால் சித்தர்கள் இத்தத்துவத்தை மறுக்கின்றனர். உடலும் உயிரும் ஒன்றே, அதைத் தனித்தனியாக பிரித்து பார்த்தல் கூடாது, இரண்டும் ஒன்றே என்று சித்தர்கள் மொழிந்துள்ளனர்.

# இயல் 3

## அடிக்குறிப்புகள்

1. திரு.அடிகளாசிரியர்., மகா வாக்கிய ஆராய்ச்சி., ப.86
2. ஆ.சிங்கார வேலு முதலியார்., அபிதான சிந்தாமணி., ப.775
3. வே.கட்டளை கைலாசம்., சித்தர் தத்துவமும் வேதாத்திரியமும்., ப.1
4. மேலது., ப.23
5. திருமூலர், திருமந்திரம்., பா.154
6. மானோஸ்., சித்தர் பாடல்கள்., ப.41
7. திருமூலர், திருமந்திரம்., பா.2190
8. திருவதிகை மனவாசகம் கடந்தார்., உண்மை விளக்கம்., பா.20
9. திருமூலர், திருமந்திரம்., பா.2172
10. சுப்புரெட்டியார்., சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்., ப.246
11. திருமூலர், திருமந்திரம்., பா.2178
12. மேலது., பா.725
13. மேலது., பா.724
14. மேலது., பா.1823
15. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, மணிமேகலை, ப.355
16. திருமந்திரம்., பா.145
17. சிவவாக். பா.170
18. மேலது., பா.107
19. மேலது., பா.28
20. மேலது., பா.83
21. மேலது., பா.29
22. மேலது., பா.49
23. மேலது., பா.34
24. மேலது., பா.489
25. மேலது., பா.230
26. மேலது., பா.504
27. மேலது., பா.310
28. மேலது., பா.464
29. மேலது., பா.477
30. மேலது., பா.183

31. மேலது., பா.123
32. மேலது., பா.22
33. மேலது., பா.21
34. மேலது., பா.212
35. மேலது., பா.61
36. மேலது., பா.5
37. மேலது., பா.501
38. மேலது., பா.191
39. மேலது., பா.73
40. மேலது., பா.11
41. மேலது., பா.72
42. மேலது., பா.15
43. மேலது., பா.248
44. மேலது., பா.281
45. மேலது., பா.43
46. மேலது., பா.45
47. மேலது., பா.25
48. மேலது., பா.10
49. மேலது., பா.398
50. மேலது., பா.517
51. மேலது., பா.454
52. மேலது., பா.410
53. மேலது., பா.16
54. மேலது., பா.496
55. மேலது., பா.299
56. மேலது., பா.37
57. மேலது., பா.33
58. மேலது., பா.181
59. மேலது., பா.39
60. மேலது., பா.141
61. மேலது., பா.451
62. மேலது., பா.471
63. மேலது., பா.33
64. மேலது., பா.312
65. மேலது., பா.121

66. மேலது., பா.223
67. மேலது., பா.503
68. மேலது., பா.515
69. மேலது., பா.32-அ
70. மேலது., பா.219
71. மேலது., பா.122
72. மேலது., பா.416
73. மேலது., பா.472
74. மேலது., பா.323
75. மேலது., பா.487
76. மேலது., பா.213
77. மேலது., பா.511
78. மேலது., பா.510
79. மேலது., பா.200
80. மேலது., பா.175
81. மேலது., பா.498
82. மேலது., பா.505
83. மேலது., பா.518
84. மேலது., பா.228
85. மேலது., பா.130
86. சி.எஸ்.முருகேசன்., சித்தர் பாடல்கள்., ப.193
87. மேலது., ப.298
88. மேலது., ப.192., பா.40
89. மேலது., ப.216., பா.23
90. திருமந்திரம்., பா.225
91. தமிழிலக்கிய வகைமைகளும் வாழ்வியல் சிந்தனைகளும்., ப.11
92. சி.எஸ்.முருகேசன்.,சித்தர் பாடல்கள்., ப.196., பா.64
93. மேலது., ப..187, பா.3
94. மேலது.,., ப.260., பா.69
95. மேலது.,., ப.187., பா.3
96. மேலது., ப.268., பா.139
97. திருமந்திரம்., பா.257
98. மேலது., பா.85

99. மேலது., பா.2066
100. மேலது., பா.252
101. மேலது., பா.242
102. திருமந்திரம்., பா.157
103. மேலது., பா.158
104. மேலது., பா.153
105. மேலது., பா.197
106. மேலது., பா.164
107. மேலது., பா.321
108. மேலது., பா.1965, 447
109. சி.எஸ்.முருகேசன்., சித்தர் பாடல்கள்., ப..248, பா.87
110. மேலது., ப.23
111. மேலது., ப.58
112. சித்தர் இலக்கியங்களில் வாழ்வியல்., கோவை 8, ப.101
113. கடுவெளிச் சித்தர்., பா.20
114. சி.எஸ்.முருகேசன்., சித்தர் பாடல்கள்., ப.196., பா.69
115. மேலது., ப.205., பா.123
116. திருமந்திரம் பா.153
117. திருமூலம். 8000
118. சித். நெறி. தொகுதி-2. ப.932
119. திருக்குறள்., 942
120. சித். நெறி. தொகுதி-2., ப.1024
121. சித். நெறி. தொகுதி-2., ப.834
122. சித். நெறி. தொகுதி-2., ப.859
123. கவிஞர் பத்மதேவன்., பதினெண் சித்தர் பாடல்கள்., ப.105, பா.1
124. சி.எஸ்.முருகேசன்., சித்தர் பாடல்கள்., ப.200., பா.99
125. மாணிக்கவாசகம்., திருமந்திர ஆராய்ச்சி., ப.288
126. திரு. மந். ஆரா.மாணிக்கவாசகம், ப.307
127. திருமந்திரம்., பா.62
128. திருமந்திரம்., பா.79
129. திருமந்திரம்., பா.2331

130. சித்தர் இலக்கியங்களில் வாழ்வியல்., கோவை5., ப.42
131. சி.எஸ்.முருகேசன்.,சித்தர் பாடல்கள்., ப.338., பா.132
132. சித்தர் இலக்கியங்களில் வாழ்வியல்., கோவை.6, ப.107
133. மேலது., ப.109
134. இ.எஸ்.டி.செ.ஞானன், தத்துவ தரிசனங்கள., ப.345
135. மேலது., ப.348
136. சித்தர் இலக்கியங்களில் வாழ்வியல்., கோவை.2, ப.148
137. மேலது., ப.147
138. திருமந்திரம் பா.1821
139. திருமந்திரம் பா.1689
140. சித்தர் கணம் பா.4

# இயல் 4

# விஞ்ஞானம் மெய்ஞ்ஞானம்

உலகம் என்பது இறைவனால் படைக்கப்பட்டது. அதில் வாழும் மக்கள் ஆதிகாலத்தில் உண்டு உறங்கி குறிக்கோள் இல்லாது வாழ்க்கையை நடத்தினர். மனிதன் படிப்படியாக வளர்ச்சி அடைந்தது என்பது அறிவியல் வளர்ச்சி என்றால் மிகையாகாது. அறிவியலின் படிநிலை விண்ணை வலம் வருமளவில் இருந்தாலும் இறைவனை வணங்கும் நிலை காணப்பட்டது. அறிவியல் வளர்ச்சியானது விஞ்ஞானமென்றால் மக்கள் இறை நிலையில் திளைத்திருப்பது மெய்ஞ்ஞானம் எனப்படும். சித்தர்களின் பாடல்களில் காணப்படும் விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம் குறித்த செய்திகளை விளக்குவதாக இவ்வியல் அமைந்துள்ளது.

### 4.1 சித்தர்களும் அறிவியலும்:

சித்தர்களின் சிந்தனைக் கோட்பாடுகள் பல ஆண்டுகளுக்கு முன்பே மக்களிடம் பரவ ஆரம்பித்து விட்டது. அகம் என்றும் மனம் என்றும் பேசப்படுகின்ற மனித இயக்க முதல் பொருள் அறிவே ஆகும். அந்த அறிவின் இயல்பை திருவள்ளுவர்,

> “எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு”[1]

என்ற குறள் மூலம் அறிவியலையும் அதன் ஆயவுத்திறத்தையும் விளக்கி உண்மையை ஆய்வின் வழியே வெளிக்கொணர வேண்டும் என்றும் கூறுகிறார்.

விஞ்ஞானம் அறிவியல் என்பவை எல்லாம் அறிவின் வளர்ச்சியையே குறிக்கும். அறியாமை எல்லாவற்றிலும் நிரம்பி இருக்கின்றது. அறிவு விரியும் போது அது விஞ்ஞானம் ஆகிறது.

வானியல் ஆராய்ச்சி, புவி வெப்பமடைதல், காந்தத்தின் சுழற்சி, செவ்வாய் கிரகம், கோள்களின் மாற்றம், செயற்கைக்கோள் என்று உள்ள அனைத்தையும் விஞ்ஞானம் என்கிறோம். அத்தகு விஞ்ஞானம், சில நேரங்களில் மனிதக் கட்டுப்பாட்டை மீறி சில செயல்கள் நிகழ்ந்து விடுகின்றன. ஆனால் யோக தத்துவத்தில் தட்சிணாயனம் உத்தராயணம் என்று மூலதாரப் பக்கத்தை அன்றே பகர்ந்துள்ளது எனப்படுகிறது.

“வேரறியா விளைவறியும் விஞ்ஞா னந்தான்
வேரறிந்தே விளையாடும் மெய்ஞ்ஞா னந்தான்
சார்பறியுஞ் செயலறியும் விஞ்ஞா னந்தான்
சார்ப்புதஞ் சாரமதே மெய்ஞ் ஞானந்தான்…”[2]

என்ற பாடலில் விஞ்ஞானத்திற்கும் மெய்ஞ்ஞானத்திற்குமான வேறுபாடுகள் உரைக்கப்பட்டுள்ளன. வித்து, முளை,மின்னல்,வீச்சு,வெப்பம்,காந்தத்தின் சுழற்சி என பல வித்தைகளை விஞ்ஞானம் கூறினாலும், அவ்வளர்ச்சி என்பது பழத்தின் உட்சுவையை அறியாமல் தோலை உண்பதைப் போன்ற நிலையாகும். மெய்ஞ்ஞானம் என்பது உணர்வு நிலையை பிரதிபலிக்கக் கூடியதாக உள்ளது.

“மெய்ப்பொருள் கண்டு விளங்கு மெய்ஞ்ஞானி
முக்கோணந்தன்னில் முளைத்தெழுந்த ஞானி
வேகமடக்கு விளங்கு மெய்ஞ்ஞானி”[3]

சித்தர்கள் மக்களுக்கு வாழ்வியல் கருத்துக்களை கூறுவதோடு மட்டுமல்லாமல், இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்வுகளையும் தங்கள் பாடலில் கூறியுள்ளனர். இன்றைய காலத்தில் அறிவியலின் வளர்ச்சி மனிதனே வியக்கும் வண்ணம் உள்ளது. இத்தகு வளர்ச்சியை சித்தர்கள் தங்களது அறிவாலேயே கண்டு உரைத்துள்ளனர். ஆண், பெண் என்ற சேர்க்கை இல்லாமல் குளோனிங் முறையில் குழந்தை பிறக்கின்றன. இவை எல்லாம் அறிவியலின் அபரிமிதமான வளர்ச்சி எனலாம். இதை

"மாதா பிதாகூட இல்லாம லேவெளி

மண்ணும் விண்ணும் பண்ணவென்று

ஆணும் பெண்ணும் கூடி யானதனால் பிள்ளை

ஆச்சுதென்றே நீரும் பேசுகின்றீர்"[4]

என்ற பாடலில் ஆண், பெண் இல்லாமல் குழந்தை பெற முடியும் என்பதைக் கூறியுள்ளனர். அறிவியல் வளர்ச்சி பெறாத அக்காலத்திலேயே இச்சிந்தனையை கொங்கணச் சித்தர் கூறியிருப்பது வியக்கத்தக்கதாக உள்ளது.

### 4.2 மெய்ஞ்ஞானிகள்

மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும், வாழ்க்கையில் உள்ள அனைத்து இன்பங்களையும் அனுபவித்து வாழ்ந்து முடிக்க வேண்டும் என்பதே ஆகமம். அத்தகைய ஆசைகளையும் துறந்து, இன்பத்தை விடுத்து, இறைநிலையை அடைவதற்கு இல்லறத்தை விடுத்து, துறவறத்தை மேற்கொள்கின்றவர்கள் சித்தர்கள் என்பர். அவர்கள், தாங்கள் கண்ட இறைமையை மக்களுக்கு எடுத்துரைக்க தமது கருத்துகளைப் பாடல்களாக பாடியுள்ளார்கள். அவர்களே மெய்ஞ்ஞானிகள் என்று அழைக்கப்பட்டனர்.

உலக மக்களை நல்வழியில் அழைத்துச் செல்வதற்கு, மக்களின் மன இருளைப் போக்குவதற்கு பல சிந்தனைகளைச் சித்தர்கள் வாரி வழங்கினர். உடல் நோய்களைத் தீர்க்கும் மூலிகைகளைக் கண்டறிந்து மருந்து செய்யும் முறைகளைத் தெரிவித்து நூல்களை இயற்றினர். கால மாறுபாடு கோள்களின் நிலை, சுடர்களின் இயக்கம் ஆகியவற்றை விளக்கி சோதிட நூல்களை எழுதினர். நிறைமொழி மாந்தர்களாக விளங்கிய அவர்கள் மறை மொழிகளை மந்திரம் என்ற பெயரால் வழங்கினர்.

சித்தர்கள் காடுகள், மலைகள், குகை போன்ற இடங்களில் வாழ்ந்தனர். மலைப்பகுதியில் உள்ள மூலிகைகளை எடுத்து ஆராய்ந்து எத்தகைய நோய்களை அவை குணப்படுத்தும் என்பதைக் கண்டறிந்தனர்.

இத்தகைய மூலிகைகளை உரிய தட்ப வெப்பநிலைகளில் வைத்து உகந்த முறையில் பயன்படுத்துவதற்குப் பருவங்கள் பற்றிய அறிவு தேவையாகி இருந்தது, எனவே வான சாஸ்திரத்தை அறிந்து மக்களுக்குத் தொண்டு செய்துள்ளனர். இரசவாதத்தினால் இரும்பு முதலான உலோகங்களைக் கூட பொன்னாக மாற்றலாம் என்பதைப் பல சித்தர்கள் செய்து காட்டியுள்ளனர். காயகல்பத்தினாலும், இரசவாதத்தினாலும் மனித உடலை அழியாமல் நிலைக்கச் செய்யலாம் என்று நம்பினர். உடலைப் பாதுகாத்த அவர்கள் உடற்கூறு சரித்திரத்தையும் வளர்த்தனர்.

சித்தர்கள், மெய்ஞானத்தில் வல்லவர்களாகவும், அரிய மருந்துகளை அறிந்தவர்களாகவும், இறப்பை வென்று கூடுவிட்டு கூடு பாயும் வல்லமை உடையவர்களாகவும் ' விளங்கியிருக்கின்றனர். இவர்களை

"செத்தவர் தம்மை எழுப்பித் தருகின்ற
சித்தர் பிறந்த தமிழ்நாடு"[5]

எனப் பாரதியாரும் பாராட்டுகின்றார். சித்தர்கள் இறவா நிலையைப் பெற்றவர்கள், பல்வேறு விதமான அற்புதங்களை நிகழ்த்தும் ஆற்றல் பெற்றவர்கள் இவர்கள் தனக்கென்று வாழாமல், மக்களுக்குத் தொண்டு செய்வதற்காகவே வாழ்ந்துள்ளனர் என்றால் மிகையாகாது.

சித்தர்கள் பல்துறை அறிவினர். மொழியியல், மருத்துவம், புவியியல், கணிதம், வானநூல், தாவரவியல், மந்திரம், தந்திரம் போன்ற பல்துறை தொடர்பான பாடல்களைப் பாடியுள்ளனார். மனித சமுதாயத்தை உய்விக்க வந்த சித்தர்களின் அவதார நோக்கத்தைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கிறது.

"அகத்தே கறுத்துப் புறத்துப் புறத்து வெளுத்திருந்த
உலகோர் அனைவரையும்
சகத்தே திருத்தி சன்மார்க்க சங்கத்து
அடைவித்திட அவரும்

இகத்தே பித்தை பெற்று மகிழ்ந்திருந்தற்கு

என்றே எனை இந்த

யுகத்தே இறைவன் வருவிக்க

உற்றேன் அருளைப் பெற்றேனே''[6]

என்றவாறு சித்தர்கள், மனிதர்களுடைய தீய நெறிகளை நீக்கி அவர்களை நல்வழிப்படுத்த வேண்டும் என்ற நோக்கில் நல்ல அறங்களை தம் பாடல்கள் மூலம் வெளிப்படுத்தினர்.

**4.3 விஞ்ஞானம் - மெய்ஞ்ஞானம்:**

''பிரபஞ்ச ஆற்றலைக் கருவிகள் மூலமாகக் கிரகித்துப் பயன்படுத்த முயல்வது விஞ்ஞானம். அப்படிபட்ட மேலான ஆற்றலைத் தெய்வீக அணுகுமுறையில் மானுடம் பயனுற முயன்றது மெய்ஞ்ஞானம்''[7]

அறிவியல் முன்னேற்றத்தைப் பலவகையில் ஏற்றுக் கொண்டாலும் அத்தகைய அறிவியலால் சில தீமைகளும் நடைப்பெற்றுக் கொண்டுதான் இருக்கின்றன. மன அழிவிற்கும், உயிரழிவிற்கும், உலக அழிவிற்கும் விஞ்ஞானம் மூலமாக உள்ளது என்பதையும் ஏற்காமல் இருக்க முடியாது. விஞ்ஞானத்தில் ஏற்படும் பேரழிவைத் தடுக்க சித்தர்கள் கூறும் சித்தாந்தத்தை ஏற்பது சரியான வழியாகும்.

அணுவை விளக்க முடியும் என்பதை 1939 ஆம் ஆண்டில் விஞ்ஞானம் கண்டு பிடித்ததது. அத்தகைய அணுவைப் பற்றிய அறிவை 2000 வருடங்களுக்கு முன்பே திருக்குறளின் சிறப்பை அணுவுடன் ஒப்பிட்டு ஔவையார் தன்னுடைய தூய தமிழில்,

''அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்

குறுகத் தரித்த குறள்''[8]

என்றார். அணு என்பது மிக சிறியது. அதனையே துளைத்து ஏழ் கடலைப் புகட்டி விடலாம். அத்தகைய சிறப்பு உடையது திருக்குறள் என்கிறார். அணுவைப் பிளந்து ஆராய்ச்சி நடத்துவது விஞ்ஞானம் ஆகின்றது. ஔவையார் மொழிந்த மொழியே மெய்ஞ்ஞானம் ஆகின்றது.

அணு என்ற மூலக்கூறு பற்றி திருமூலரின் அணுகுமுறையில் இன்றைய விஞ்ஞானம் அன்றைய மெய்ஞ்ஞான ஆய்வாக இருப்பதைக் காணலாம்.

‘‘அணுவில் அணுவினை ஆதிப்பிரானை
அணுவில் அணுவினை ஆயிரம் கூறிட்டு
அணுவில் அணுவினை அணுகவல்லார்கட்கு
அணுவில் அணுவை அணுகலும் ஆமே’’[9]

நுண்ணிய சக்தியின் ரூபமாக இருக்கும் சிவமானது, குணம் மாறாமல் இருக்கும் மிக மிகச் சிறிய துணுக்காக இருக்கும். ஓரணுவை பத்துக்கோடி பாகங்களாகப் பிரித்து எடுக்கும் கருவில், கருவைவிட இலட்சம் மடங்குப் பெரிதாக இருக்கும்.

‘‘விஞ்ஞானம் - மெய்ஞ்ஞானத்தின் மூலம் ஒன்று தான்’’

‘‘விஞ்ஞானம் மானுடத்தின் தேவையை வெளியிலிருந்து பெறுகிறது. சித்த மெய்ஞ்ஞானம் மானுடத்தின் உள் தேவையை பூர்த்தி செய்கிறது’’[10]

‘‘விஞ்ஞானம் வளர வளர அதன் முதிர்ச்சியில் மெய்ஞானம் தோன்றும். மெய்ஞானம் என்றதும் துறவு நிலையும், விஞ்ஞானம் என்றால் மேனாட்டு நாகரிக நிலையுமே மனதில் தோன்றும். இன்றைய விஞ்ஞானிகள் பொருளைக் கொண்டு தான் தெளிகிறார்கள். மெய்ஞானிகள் ஒவ்வொரு பொருளின் தத்துவார்த்தத்தை நுகர்ந்து தெளிவார்கள்.’’[11]

### 4.4 விஞ்ஞானி-மெய்ஞானி

விஞ்ஞானி, மெய்ஞானி என்ற இருவருமே மனிதர்கள் தான். அவரவர் தம் செயல்களின் மூலம் மாறுபடுகின்றனர். விஞ்ஞானியின் கண்டுபிடிப்பு என்பது மனிதனின் ஆக்க சக்திக்கும், அழிவு சக்திக்கும் பயன்படுகிறது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். ஆனால் மெய்ஞானி என்பவர் உண்மையை அறிந்தவர் என்பதால் மக்களின் மன இருளாகிய அறியாமையை போக்குகின்றவார் என்றே கூற வேண்டும்.

“விஞ்ஞானி ஐம்புலன்களையும் பயன்படுத்தி கருவிகளின் துணையால் அவற்றின் ஆற்றலைப் பெருக்கிக் கொண்டு பிரபஞ்ச உண்மைகளை அறிய முயல்கிறார். மெய்ஞானியின் நிலை முற்றிலும் வேறுபட்டதாகும். மெய்ஞானி தன் ஐம்புலன்களை ஒடுக்க பிரபஞ்ச உண்மைகளை மட்டுமின்றி அப்பிரபஞ்சத்தைப் படைத்த சக்தியையும் அறிய முயல்கிறார்.”[12]

எரிமலை என்பது, தீக்குழம்பினை வெளியிட்டுக் கொண்டிருப்பது, அத்தகைய இடங்களில் அழிவுண்டு. புதையுண்ட இடங்களில் அகப்பட்ட மனித உடல்கள் வாடாமல் இருந்ததாக புதைப் பொருள் நிபுணர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். கந்தகத்தின் புகை உடலில் புகுந்தால் உடல்கள் வாடாமல் இருக்கும் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

பழந்தமிழ் விஞ்ஞானிகளாகிய சித்தர்கள் உடலைக் காக்கத் தயாரிக்கும் மருந்துகளில் கந்தகம் அவசியம் எனக் கூறியுள்ளனர். இறைவனின் அடியையும் முடியையும் கண்டறிந்த பிறகும் அது பற்றிய வீண் வாதமும், தர்க்கமும் எதற்கு? குதம்பை எனும் காதணி அணிந்த பெண்ணே! என்று தம் பாடலில் உரைக்கிறார்.

“மெய்ப்பொருள் கண்டு விளங்கும் மெய்ஞ்ஞானிக்குக்
கற்பங்கள் ஏதுக்கடி - குதம்பாய்
கற்பங்கள் ஏதுக்கடி?[13]

என்கிறார். மேலும் உண்மையான பொருள் சிவனேயென்று கண்டறிந்த மெய்ஞானிகளுக்கு வாழ்நாளை நீடிக்கச் செய்யும் ஆவலும் மருந்தும் எதற்கு? என்று விளம்புகிறார்.

**4.5 சித்தர்களின் அறிவியல்:**

கி.பி.20ஆம் நூற்றாண்டில் 'லூயில் லெனார்மாண்ட் என்பவரால் பாராசூட் உலகிற்கு அறிமுகப்படுத்துவதற்கு முன்பே கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த போகர் என்னும் சித்தர், போகர் ஏழாயிரம் என்ற நூலில், பாராசூட்டைச் செய்யும் விதத்தினைப் பற்றியும், வானில் பறக்கும் பராசூட்டிலிருந்து குதிக்கும் முறை பற்றியும், விண்ணில் பறக்கும் பாரசூட்டினைப் பழக்கும் முறையைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

"பார்க்கவே வாகன பர்வம் தன்னில்
பரிவுடனே குதிப்பதற்கு கண்டு சொல்வேன்
பார்க்கவே வட்டமாய் குடைதான் ஒன்று
பாங்கான குடைநீசளம் அகலம் கேளீர்"[14]

என்று பாராசூட் பற்றிய விவரத்தை இப்பாடலில் விளக்கியுள்ளார்.

உலகில் வேதியியல் தோன்றி வளர அடிப்படையாக அமைந்தது ரசவாதம் என்பதே ஆகும். சித்தர்கள் இதில் ஈடுபாடு கொண்டிருந்தனர். இரும்பையும், செம்பையும் பொன்னாக்கவும், நரை, திரை, மூப்பு வராமல் உடம்பை என்றும் இளமையுடனிருக்கச் செய்யவல்ல மருந்துகளைக் கண்டுபிடிக்கவும் அவர்கள் பெருமுயற்சி மேற்கொண்டனர்.

"மெய்ஞானத்தின் வழியாக கண்டு உணர்ந்த பல உண்மைகளை விஞ்ஞானம் கண்டறிந்துள்ளது. பூமி உருண்டை என்பதை கலிலீயோவுக்கு முன்பே மாணிக்கவாசகர் உணர்ந்து கூறினார். 'அண்டைப் பகுதியின் 'உண்டைப் பிறக்கம்'

என்பதில் உண்டை என்பது உருண்டை என்ற பொருள். ஐன்ஸ்டீனுக்கு முன்பே மாணிக்கவாசகர் அணுவின் நுண்மை பற்றி திருவாசகத்தில் குறிப்பிட்டுள்ளார்.”15

சித்தர்களின் மெய்ஞானத்தில் அறிவியலும், வேதியலும் அடங்கிக் கிடக்கிறது. அவர்கள் உலகிற்கு உரைத்த வாதம், வைத்தியம், யோக, ஞானம் இவையெல்லாம் வேதியலை குறிப்பிடுகிறது. உகங்களையும், பா‘ாணங்களையும் வேதியல் செய்து ஒன்றை மற்றொன்றாக மாற்றினார்கள்.

**4.5.1 திருமூலரின் அறிவியல் நெறி:**

சித்தர்களில் தலைசிறந்தவராக கருதப்படுவர் திருமூலர் ஆவார். இவர் மனித வாழ்க்கைக்குரிய பல கருத்துக்களைத் தம் பாடல்கள் வழி எடுத்தியம்பியுள்ளார். மேலும் இவர் பாடலில் அறிவியல் நெறியும் உள்ளன.

“சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவாம்
சூரீய காந்தமோ சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிர்சூடு மாறுபோல்
சூரியன் தோற்றமும் அற்ற மலங்களே”16

என்கிறார். சூரியகாந்தம் என்பதை லென்ஸ் என்கிற பூதக்கண்ணாடியைக் கொண்டு திருமூலர் விளக்குகிறார். பூதக் கண்ணாடியும் பஞ்சு ஒன்றாக இருப்பதனால் பஞ்சு தீப்பிடிப்பதில்லை. ஆனால் வெயில் கதிர்கள் பூதக் கண்ணாடி வழியாக குவிந்து பஞ்சு மீது படுமாறு வைத்தால் பஞ்சு தீப்பற்றிக் கொள்கிறது. நமது உடம்பில் மலங்களாகிய, அழுக்குகள், பாவ மூட்டைகள் இணைந்து வாழ்கின்றன. நமது உள்ளமாகிய சூரியக் காந்தத்தை இறைவன் என்னும் சூரியன் முன்னிலையில் பிடித்தால் இறைவன் திருவருள் என்னும் கதிர்கள், பாவ மூட்டை என்னும் ‘பஞ்சுப் பொதியினை எரித்து சாம்பலாக்கின்றன என்று ஒரு பெரிய அறிவியல் ஞான நீதி நெறியினை உணர்த்துவதால் அறிவியலாகின்றது.

**4.6 ஞானத்தின் நான்கு நிலை :**

“ஞானிகளுக்குரிய ஞான நிலைகளை நான்கு வகையாக திருமூலர் எடுத்துக் காட்டியுள்ளார்.

- ஞானத்தின் ஞானம்
- ஞானத்தில் யோகம்
- ஞானத்தில் கிரியை
- ஞானத்தில் சரியை”[17]

**4.6.1 ஞானத்துள் ஞானம்**

நான் என்ற அகப்பற்று புறப்பற்றை நீங்கிய நிலையை குறிப்பது.

**4.6.2 ஞானத்தில் யோகம்**

மனதில் பேரொளியாக இறைவனைக் காண்பது

ஞானத்தில் கிரியை சிவபூசையைத் தவறாமல் செய்து வீடு பேற்றை விரும்புதல்

**4.6.3 ஞானத்தில் கிரியை**

கிரியை, சரியை வழி இறைவனை வழிபட்டு நான் என்ற அகந்தையை அகற்றும் போது இறைவனைக் காண முடியும் என்ற மெய்ஞானத் தத்துவத்தை நான்கு நிலைகளில் மிக எளிதாகச் சித்தர்கள் காட்டியுள்ளனர். யோகி நிலையை அடைந்தவர்கள் மெய்ஞானம் உணர்ந்தவர்கள் ஆவர்.

**4.6.4 ஞானத்தில் சரியை**

இறைவனின் அருளைப் பெறுவதற்காக அவன் எழுந்தருளியிருக்கும் பகுதிகளுக்கெல்லாம் சென்று வழிபடும் நிலை.

### 4.7 மெய்ஞ்ஞானம்

“சித்தர்கள் மெய்ஞ்ஞானம் (சித்தி) பெற்றவர்கள் அதனால் சித்தர்கள் என்று அழைக்கப்பட்டனர். தாங்கள் பெற்ற மெய்ஞ்ஞானத்தின் பயனாய் நன்மை, தீமைகளை பகுத்தறிந்தராயும் ஆற்றலாளர்களாக இருந்துள்ளனர்.”[18]

சித்தர்களின் மெய்யறிவு மற்றும் மெய்ஞானம் நாம் சொல்லும் விவேக ஞானம் (ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்தி அறியும் அறிவு) அல்ல. அது தன்னையும் (ஆன்மா) தன்னைப் படைத்தவனையும் (கடவுள்) தெளிவாக அறிந்துணரும் மெய்ஞான அறிவாகும்.

“சீவன் எனச் சிவன் என்ன வேறில்லை
சீவனார் சிவனாரை அறிகிலர்”[19]

### 4.8 இடைக்காடரின் வானியல் திறன்

இடைக்காடர் சோதிடக் கலையில் சிறந்தது விளங்கினார் என்பதை

“நாதனே இடைக்காடன் மதியே தேய
நாள்சொல்லும் நாளறிந்தேன் கணிதவித்தே
பூதனே ராகுவரும் நாளே சொன்னான்”[20]

காகபுசுண்டர் பெருநூல் காவியம் 1000 என்ற நூலில் அமைந்த இவ்வரிகள். இவரின் வானியல் திறனை விளம்புகிறது. இடைக்காடர் தமது வானியல் ஆராய்ச்சி அறிவால் எதிர்காலத்தில் கொடிய பஞ்சம் ஏற்படப் போவதை அறிந்து முன் ஏற்பாடாக தமது ஆடுகளுக்கு எருக்கிலையை உணவாக அளித்தார். மேலும் இடைக்காடர் மாறுபட்டு நின்ற நவகிரகங்களை மழை பெய்வதற்கு ஏற்ற கிரக அமைப்பில் வைத்தார்., மறுகணமே நல்ல மழை பெய்து உலகம் செழிப்புற்றது. நவகிரகங்கள் இடைக்காடரின் அறிவு நுட்பத்தை வியந்துப் பாராட்டியது. இந்நிகழ்ச்சி அவருடைய வானியல் திறனைச் சுட்டுகின்றது.

### 4.9 பஞ்ச கோசங்கள்

1. அன்னமயகோசம் 2. பிராணமயகோசம் 3. மனோமயகோசம், 4. விஞ்ஞானமயகோசம், 5. ஆனந்தமயகோசம்

“உலகில் சிலவற்றின் அடிப்படை எண்கள் ஐந்தாக உள்ளது. அவை.

1. பஞ்சபூதங்கள்
2. கன்மேந்திரியங்கள்
3. பஞ்சகோசங்கள்
4. பஞ்ச அவத்தைகள்

இதில் பஞ்சகோசத்தில் ஒன்றான விஞ்ஞானமய கோசம் என்பது விஞ்ஞான நிலையை உணர்த்துகிறது.”[21]

### 4.9.1 விஞ்ஞானமய கோசம்

ஆறறிவாகிய புத்தியினால் ஆன அறிவுடம்பே விஞ்ஞானமயகோசம் எனப்படும். இதுவே ஐம்பொறி புலன்களுடன் கூடி பல புதிய கண்டுபிடிப்புகளை உலகில் கொண்டு வருவதாக உள்ளது. இது இயல்பாகவே அகங்காரம் உடையது. ஒரு பொருளை அறிவதும் செயல்புரிவதும், இதற்கு நான்தான் கர்த்தா என்று சொல்லிக்கொள்ள வைப்பதும் இந்த விஞ்ஞானமய கோசம். இது முற்பிறவி வாசனையால் உந்தப்பட்டு நல்வினை தீவினைகளை செய்யத்தூண்டும். அவற்றால் வரும் இன்ப துன்பங்களை அனுபவிப்பது இதுவே ஆகும். அவஸ்தைப்படும் சுகதுக்கம் எனும் அனுபவங்களை உணர்வது, மேலும் அறிவையும் அணுவையும் ஆராய்ச்சி பண்ணுவது விஞ்ஞானமய கோசமாகும்

“உண்மையாக என்றுமே உள்ள பொருள்களின் தத்துவத்தை ஆராய்வது மெய்ஞானம் என்றும், அறியும் (அ) மறையும் (அ) பகுதிகளாகப் பிரியும் பொருள்களை அறிவது விஞ்ஞானம் என்றும் கூறுவர்”.[22]

## 4.10 சித்தர்களின் தொலைநோக்குப் பார்வை

ஆதிகாலத்தில் முன்னோர்கள் வருடங்களைக் கணக்கிட யுகங்கள் நான்கு என்று வகுத்துள்ளனர். அவை கிரேதா யுகம், திரேதா யுகம், துவாபர யுகம், கலியுகம் தற்போது நடப்பது கலியுகமாக உள்ளது. கி.பி. 2006க்கு கலி. 5106 ஆகும்.

கலியுகத்தின் தோற்றத்தைக் கோரக்கர் தம் பாடலில்,

"அழிந்து இந்தக் கலி உதிப்புப் பிரமாதி
ஆண்டு ஆன சித்திரை வெள்ளி நவமி மூலம்
யோகி பரமானந்த கலியின் தோற்றம்
உண்மை நிற சாதி மதபேதம் மெத்த
பாகிதமாய்ப் பிரபலங்கள் பெண்பால் விருத்திப்
பாருலகில் ஆண்மக்கள் குறைவுண்டாகும்
மோகித்தே முன்பின்னும் முறைமை கெட்ட
மூதரிய தாயினையே சேய்தான் சேர்ந்து
போகிதமாய் மதனையது பயில்வார் பாங்கில்
பூவுலகில் கலியினுடை பான்மை கேளே
சூளேமெய்க் சும்பல பட்டன் வைணவ தத்தன்
கொல்லை புன்னை மரத்தின் கீழ் கலிசெனிப்பே"[23]

"மதங்களையும், சமயங்களையும் கடந்தவர்களாக சித்தர்கள் வாழ்ந்திருக்கிறார்கள். மெய்ப்பொருளைக் கண்டறிவதே அவர்களின் நோக்கமாக இருந்திருக்கிறது. பிரபஞ்ச ரகசியத்தை, சித்தர்கள் விளக்கி உள்ளதைப் போல வேறு எவரும் விளக்கிச் சொன்னதில்லை"[24] ஐன்ஸ்டீன் போன்ற மிகப்பெரிய விஞ்ஞானிகள் கண்டுபிடித்துச் சொன்ன உண்மைகளுக்கும், ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த சித்தர்கள் கூறிய கருத்துகளுக்குமிடையே நெருக்கமான ஒற்றுமை இருப்பதைக் காணமுடிகிறது. விஞ்ஞானிகள் ஆய்ந்து சொன்னார்கள். சித்தர்கள் அறிந்து சொன்னார்கள்.

இத்தகு நிலையைக் காணும் போது, சித்தர்கள் விஞ்ஞானத்தையும் கடந்த மிகப்பெரிய சிந்தனையாளர்களாக விளங்கியிருக்க வேண்டும் என்பதை உணர முடிகிறது.

கோரக்க சித்தர் தமது நூலில், கலிகாலம் பற்றியும், கலிகாலத்தில் நடைபெறும் பிரச்சினைகள், நிலைகள், மக்களின் செயல்பாடுகள், அரசியல், பருவநிலை மாற்றங்கள் என்பன போன்ற செய்திகளை விரிவாகவும், விளக்கமாகவும் அக்காலத்திலேயே எடுத்துரைத்துள்ளார்.

கலிகாலம் முற்றி முடியும் அந்த நாட்களில் அநேக விதமான பஞ்சங்களும், துன்பங்களும் பெருகும். ஆகாயத்தில் பற்பல கலகங்கங்கள் உண்டாகும் மற்றும் அதிசயமான வால் நட்சத்திரம் தோன்றி வெட்ட வெளியில் பிரகாசிக்கும். சூரியனின் வெப்பம் மிக அதிகமாகி பல புதுப்புது நோய்கள் உண்டாகி மனிதர்கள் கூட்டங் கூட்டமாக மரணம் அடைவார்கள்.

சூரியனிலிருந்து மிகக் கடுமையான கோடை வெப்பமும் இரவில் கொட்டும் பனியும் கொட்டி மக்கள் அனைவரும் கொடுந்துன்பங்களுக்கு ஆளாவார்கள். சந்திரன் பூமிக்கு மிக அருகில் தாழ்ந்து. இருக்கும். கால நேரங்கள் யாவும் மாற்றம் கொண்டு ஒரு நாள் பொழுது மூன்று மாத்திரை அளவே ஆகி எப்போதும் இருள் சூழ்ந்து இருக்கும். வடக்கே உள்ள தேசங்களில் கடல் பொங்கி ஆழிப்பேரலைகள் ஏற்பட்டு அழிவுகள் பல நிகழும் என்கின்றார்.

யோகியானவன் பரம்பொருளை தியானித்து தவம் புரிந்து எந்த யுகங்களாயினும் பரமானந்த நிலையில் இருப்பான். பெண் மக்களே அதிகம் பிறப்பார்கள். பெண்ணாசையில் மோகித்து காமத்தினால் முறைமை கெட்டு யாருடனும் யார் வேண்டுமானாலும் சேர்ந்து போகம் புரிவார்கள்.

### 4.11 கலிகாலம்

“கேளே நன்மனுக்கள் நூற்றுக் கொன்று
கெடியாகப் பிறந்திருத்தல் அரிதே யாகும்

நாளேமுன் கலியவனும் வளர்ந்து ஓங்க
நடுங்கிடுவர் மனிதர்களும் உயரங்கட்டை
வாளேமுன் பின் வயது அண்டு நூறு
வயங்கிடுவேன் கலியுதிக்குமிடத்தைத் தென்பா
சூளே மெயச் சும்பலப் பட்டன் வைணவ தத்தன்
கொல்லன் புன்னை மரத்தின் கீழ் கலி செனிப்பே”[25]

பூமியில் நன் மக்கள் நூற்றுக்கு ஒன்று பிறப்பதே மிகவும் அரிதாக காணப்படும். கலியின் கொடுமைகள் வளர்ந்து ஓங்கி அதிகரிக்க மனிதர்களும் சராசரி உயரமும் குறைந்து கட்டையாக ஆவார்கள். மனிதர்கள் ஆயுளும் குறைந்து நூறு ஆண்டாக மாறிடும். கலி உதிக்கும் இடமென்பது, தென்பால் கலி சூள்கொண்டு சும்பலபட்டம் எனும் ஊரில் வைணவ தத்தன் எனும் அந்தணருக்கு அவர் வீட்டின் கொல்லையில் உள்ள புன்னை மரத்தின் கீழே கலி புரு‘ன் பிறப்பான் என்று பல ஆண்டுகளுக்கு முன்னே குறிப்பிட்டுள்ளார்.

கலிகாலம் ஐயாயிரம் ஆண்டுகளுக்குப்பின் நல்ல எண்ணங்கள் உண்டாகி சாதி மதங்கள் எல்லாம் ஒழிந்து மனிதகுலம் யாவும் ஒன்றே என்ற நிலை உருவாகும். சந்திரன் தேய்வதோ, வளர்வதோ அன்றி முழு நிலவாகவே ஒளி வீசும். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு அப்பால் சூரியன் வெப்பம் அதிகமாகி பகல் பொழுதும் அதிகரித்து பூலோகம் முழுவதும் சூரிய ஒளி பொலிவாகத் திரண்டு நிற்கும். பொய்களை மெய்யாக்கும் அந்தணர்களின் அகங்காரக் கொட்டமெல்லாம் அடங்கிப் போகும். சத்தியமே என்றும் நிலையாக வலிமையுடன் வளர்ந்து ஓங்கி தர்மநெறி வழுவாத நன்மக்கள் தோன்றி சித்தனாகவும், ஞானியாகவும் விளங்குவார்கள்.

“கலியான ஆண்டு ஐயா யிரம்பின்
கருத்துடனே சாதி மத பேதம் ஒன்று
நலியாது சந்திரகலை ஐயாயிரம் மட்
டானதப்பால் ரவியோட்ட மதி மாகிப்

பொலிவாகப் பூலோகந் திரண்டே நிற்கும்
பொய்யான அந்தணரின் கொட்டம் போகும்
வலியுடனே சத்தியத்தான் நிலையே யோங்கி
வழுவாது மனுக்கள் ஞானி யாமே''[26]

உலகில் தான, தர்மங்களை சிறப்புடன் நடைபெற்று, தத்துவ ஞானங்களும், விஞ்ஞானங்களும் யோகமும் நிறைந்து விளங்கும். தரணியில் உள்ள மாந்தர்கள் பலவர்ணமாக இருப்பார்கள். உலகம் முழுமைக்கும் ஏக சக்கிராதி பத்தியம் ஏற்பட்டு குறைவின்றி எண்பத்திரண்டாயிரம் ஆண்டுகள் வரை நடக்கும். நாட்டில் எங்கனும் மகிழ்ச்சி பெருகி இனிய நவரத்தினங்கள் விளைந்து செல்வம் உண்டாகும். வாகனங்களை உற்பத்தி செய்து ஆகாயத்தில் பறந்து செல்வார்கள் என்றும் உரைக்கின்றார்.

கலிகாலத்தில், மனிதர்கள் கோபம் மிகக் கொள்வார்கள்
அறியாமையால் வீழ்ந்து பேதமை குணத்தால்
தெளிவின்றி மயக்கம் கொள்வார்கள்.
பிரபலமாய் விளங்கும் அரசர் முதல் அனைவருக்கும்
அனைத்து கேடுகளும் விளையும்
கலிகாலத்தில் நிகழும் கேடுகளை தவிர்க்க சூரிய
காயத்திரி மந்திரம் செபம் செய்தல், யோக ஞானங்களைப் பெறுதல்
மரணமில்லாப் பெருவாழ்வுக்கு போகர் கற்ப சூத்திரம்
பதினெட்டில் அதன் இயல்புடைய முறைகள் யாவையும்

மிகத்தெளிவாக கூறியுள்ளார்.

''யோக ஞான சாதனைகளால் அமிர்தம் உண்டு
காயகற்பமாக மாற்றிய உன் உடம்பை கொடிய வி'முடைய
பாம்பு தீண்டினாலும் கேடு நிகழாது''[27]

உலகில் நடக்கும் 2222ம் ஆண்டில் கலியுகம் முடிந்து புதுயுகம் தோன்றும். அப்போது எல்லா அரசுத் துறைகளும் தவறின்றி முறை பிசகாது அனைத்தும் சிறந்து இப்பூவுலகம் மேன்மையுடன் விளங்கும்.

பதினெண் சித்தர்கள் கூட்டத்திலிருந்து சித்தர் வழியில் ஆன்ம நலம் அறிந்த நெறியில் நாடி நரம்புடன் கூடிய ஒரு மகான் தோன்றி அகில சக்கரப் பார்வேந்தராய் அழியாவரம் பெற்று மிகுந்த அன்புடன் அரசாள்வார் என்று கோரக்க சித்தர் மட்டுமின்றி, சினேந்திரமாமுனியும் எடுத்துரைத்துள்ளார்.

### 4.12 திருமந்திரத்தில் விஞ்ஞானம்

விஞ்ஞானம் பலவிதமான ஆராய்ச்சிகளைச் செய்து குழந்தைப் பேறு எவ்வாறு வாய்க்கின்றது என்பதை எடுத்துரைக்கின்றது. ஆனால் திருமூலர் விஞ்ஞானத்தை விஞ்சும் அளவிற்கு பல்வேறு கருத்துக்களை எடுத்துரைத்துள்ளார். போகத்தை யோகமாகக் கூறும் ஒரே யோக நூல் திருமூலரின் திருமந்திரமாகும். திருமந்திரத்தில் இடம்பெறும் பரியங்கயோகம் ஆணும் பெண்ணும் சேரும் கூட்டுறவை யோகநெறிகளுள் ஒன்றாகக் கூறுகின்றது. இதனைக் கண்டு இன்றைய விஞ்ஞான உலகம் மிரட்சியுடன் வியப்புறுகின்றது. காட்டுக்குச் சென்று உடம்பை வருத்திக் கடுந்தவம் புரிந்து பெற வேண்டியதை வீட்டில் இருந்து போகத்தைத் துய்த்துப் பரியங்கயோகத்தின் மூலம் இன்பம் பெறலாம் என்பதைத் திருமூலர்,

"கண்டனுங் கணடியுங காதல்செய்
மண்டலங் கொண்டிரு பாலும் வெளிநிற்கும்
வண்டியை மேற்கொண்டு வானீர் உருட்டிடத்
தண்டொரு காலுந் தளராது அங்கமே"[28]

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் முதலிய இறையருள் பெற்ற நாயன்மார்களுக்குத் தூல உடம்பு கீழே விழுந்ததாக வரலாறு இல்லை. இந்நிலையை அடைந்தவரின் விருப்பம் சிவத்தை நோக்கிச் செல்வதால் உடலின் காரணம் கெட்டுச் சிவம் நிலைபெறும் உடலாக அவரது உடம்பு அமைகிறது. அழிகின்ற உடம்பு அளிக்கின்ற உடம்பாக ஆகின்றது. ஆகாயமயமான

சிதம்பரத்தை அறிந்தவரது உடல் பூமியில் விழுவதில்லை என்ற சித்த தரும உண்மையும் ''விழுகின்றதில்லை வெளியறிவாரிக்கே'' என்பதனால் புலப்படுகின்றது. திருமூலர் தமது அனுபத்தை,

''வெளியை அறிந்து வெளியி னடுவே
ஒளியை அறியின் உளிமுறி யாமே
தெளிவை அறிந்து செழுநந்தி யாலே
வெளியை அறிந்தனன் மேலறியேனே''[29]

என்று கூறுகிறார். சிரசின் மேல் ஆகாயத் தானத்தை அறிந்து அங்கு விளங்கும் பொன்னொளியை அறிந்து உள்ளம் வேறுபடாமல் தெளிவான ஞானத்தைப் பெற்றுச் சிவனருளால் பரமான ஆகாயத்தை அறிந்திருந்தேன் அதற்கு மேல் ஒன்றுமில்லை என்று இப்பாடலில் தனது யோக ஆகாயத்தைத் திருமூலர் தெளிவுறுத்திக்கிறார்.

பரியங்க யோகம் புரிந்து ஆகாயத்தின் நடுவே ஒளியைக் கண்டவர், இவ்வுலகைக் காணாது மாறாகச் சிவனையும் சக்தியும், அவர்களுடன் தன்னையும் காண்பர். இங்ஙனம் சிவசக்தியின் நடுவே தம்மைக் கண்டவர் பல்லாண்டுகாலம் வாழ்வர். மேலும் தனது ஆன்மாவை சிவத்திடம் ஆகுதியாகக் கொடுத்தவர் சக்தியின் அருள் பெற்று பாச ஞானம் நீங்கிப் பரஞானம் பெற்றிருப்பர். இதுவே பரியங்க யோகத்தின் பயனாகும்.

### 4.13 திருமூலர் குறிப்பிடும் மகப்பேறு குறித்த விஞ்ஞானம்

மனித உயிர், கருவில் தோன்றுகிறது. இதற்குக் குரோமோசோம்கள் காரணம் என்று இன்றைய அறிவியல் ஆய்வு கண்டுபிடித்துள்ளது. இந்தக் குரோமோசோம்கள் ஆணின் விந்திலும் உள்ளது. பெண்ணிடமும் உள்ளது. இவற்றில் ஒன்று இணையும்போது கரு தோன்றுகிறது. இந்த அறிவியல் நுட்பத்தைத் திருமூலர் உணர்ந்திருந்தார். அவர் குரோமோசோம் என்ற சொல்லைக் கூறவில்லை. ஆனால், அவற்றின் செயற்பாட்டை

"திருவின் கருக்குழி தேடிப்புகுந்த

துருவம் இரண்டாக ஓடி விழுந்ததே"[30]

என்று குறிப்பாக திருமூலர் தெளிவுறுத்துகின்றார்.

மனித உள்ளமும் உடலும் நெருங்கிய தொடர்பு உடையவை. உள்ளம் சோர்ந்தால் உடல் வாடும். மனநலமே உடல் நலத்திற்கு அடிப்படை. மனநலம் இன்று மருத்துவத்தின் ஒரு கூறாக உள்ளது. "உள்ளம் உடைமை" என்று திருவள்ளுவரும் கூறியுள்ளார். இந்த நுட்பத்தைத் திருமூலர் மறைமுகமாக - உருவக நிலையில் உரைத்தார். "உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்" என்று இரண்டுக்கும் உள்ள தொடர்பைக் குறிப்பாகக் கூறியுள்ளார்.

உடல் நலமாக இருக்க வேண்டும். இதற்குச் சத்துணவும் உடற்பயிற்சியும் அடிப்படையாக இருக்கின்றன. உடல் நலமாக இருப்பதற்கு உயிர்ச்சத்து எனப்படும் விட்டமின்கள் தேவை. பால், கீரைகள் முதலிய ஊட்டம் தரும் உணவுப் பொருள்கள் தேவை. சிலர் இந்த உண்மையை உணர்வதில்லை. முறைப்படி தம் உடம்பைக் கவனித்து ஓம்புவதில்லை. அதன் விளைவாக அவர்களின் உடல்நலம் கெடுகிறது. பிணிகள் பற்றுகின்றன. அவர்களின் வாழ்நாளும் குறுகி விடுகிறது. இந்த உண்மையைத் திருமூலர் கூறியுள்ளார். "உடம்பார் அழியின் உயிரார் அழிவார்" என்ற பாடலில் சுட்டியுள்ளார்.

### 4.14 மாரடைப்பு

உடற்கூற்றியல் அண்மைக் காலத்திற்கு உரியது. இது மருத்துவத் துறையின் சிறந்த அறிவியல் பகுதி. திருமூலர் காலத்தில் இத்துறை இல்லை. ஆனால், திருமூலர் உடற்கூற்று அறிவியல் துறையை அறிந்திருக்கிறார். மனிதனின் இதயம் உடலின் இடப்பக்கத்தில் இருக்கிறது என்றும், அது பாதிப்புக்கு உள்ளாகும், அதனால் மரணமும் நேரும் என்ற விளைவையும் அவர் தெளிந்திருந்தார். அதனால், அன்றே இப்படிப் பாடியுள்ளார்.

"அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடும் மந்தணம் கொண்டார்
இடப்பக்கம் இறைநொந்தது என்றார்
கிடக்கப்படுத்தார் கிடங்தொழிந்தாரே"[31]

மாரடைப்பு எதிர்பாரா நிலையில் திடீரென்று வரும் என்ற கருத்தும் இப்பாட்டில் உள்ளது.

### 4.15 விஞ்ஞானத்தை விஞ்சும் மெய்ஞ்ஞானம்

பிறக்கப் போகும் குழந்தை ஆணா? பெண்ணா? அல்லது மாற்றுத்திறனாளியா? மூன்றாம் பாலினமா? என்பதை பல்வேறு சோதனைகளைச் செய்த பின்னரே விஞ்ஞானத்தால் உறுதியிட்டுக் கூறமுடிகிறது. அதோடு மட்டுமல்லாமல் விஞ்ஞானம் ஆய்வு செய்து கூறி பிறக்கின்ற குழந்தை ஆணைப் பொருத்தே, ஆணாகவோ பெண்ணாகவோ பிறக்கின்றது என்ற கருத்தைத் திருமூலர் திருமந்திரத்தில் எளிதாகவும் தெளிவாகவும் விளக்கமாகவும் இயம்பியுள்ளார். இது விஞ்ஞானத்தைவிட மெய்ஞ்ஞானம் சிறந்து விளங்குவதற்கு எடுத்துக்காட்டாக உள்ளது.

குழந்தை பெண்ணா? ஆணா? என்று நிர்ணயிப்பது ஆணேயாவான் என்பதை,

''மாண்பதுவாக வளர்கின்ற வன்னியும்
காண்பது ஆண் பெண் அலி எனும் கற்பனை
பூண்பது மாதா பிதா வழி போலவே
ஆம்பதி செய்தான் அச்சோதி தன் ஆண்மையே''[32]

என்று திருமூலர் எடுத்துரைக்கின்றார். பெண்குழந்தைகள் அதிகம் பிறப்பதற்கு பெண்ணைக் குற்றம் சாட்டுகின்ற சமுதாயத்திற்கு, மருத்துவர்கள் கூறும் கருத்துக்களை பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, திருமூலர் தெளிவுற எடுத்தியம்பியிருப்பது சிறப்பிற்குரியதாக அமைந்துள்ளது.

### 4.15.1 இறைவன் தாய் தந்தை வழி உடலைப் படைக்கின்றான் :

உயிர்க்கு ஆண், பெண், அலி என்ற வேறுபாடு இல்லை. பெருமையுடனே வளர்கின்ற ஒளியான உயிரை ஆண் என்றோ பெண் என்றோ அலி என்றோ காண்பது கற்பனையாகும். அப்படிப்பட்ட உயிருக்கு ஏற்ற உடலைத் தாய் தந்தையின் தன்மையைக் கொண்டு படைப்பது சிவபெருமானின் வல்லமையாம் என்பதனை,

“ஆண் மிகில் ஆண் ஆகும் பெண் மிகில் பெண் ஆகும்
பூண் இரண்டு ஒத்துப் பொருந்தில் அலியாகும்
தாண்மிகும் ஆகில் தரணி முழுது ஆளும்
பாணவம் மிக்கிடின் பாய்ந்ததும் இல்லையே”.[33]

என்ற திருமந்திரப் பாடல் மொழிகின்றது.

### 4.15.2 கருவில் ஆண் பெண் மாற்றம் அமையும் விதம்

ஆண் பெண் கூடும் போது, ஆண் பண்பு மிகுந்தால் அவ்வுயிர் ஆண் ஆகும். பெண் பண்பு மிகுந்தால் அவ்வுயிர் பெண்ணாகும். ஆண் பெண் பண்பு சமமானால் அவ்வுயிர் அலியாகும். ஆள் வினை முயற்சியில் கருத்து மிகுதியாய் இருந்தால் பிறக்கும் உயிர் சிறப்பாய்ப் பிறக்கும். அது உலகை ஆளும். கூட்டுறவின் போது தாழ்ச்சி மனப்பான்மை இருக்குமானால் சுக்கிலம் பாய்வது நின்று விடும். மனதை ஒருநிலைப்படுத்தி ஆள்வினை முயற்சியில் கருத்து மிகுதியாய் இருந்து ஆணோ பெண்ணோ ஆகிய குழந்தைகளைப் பெற்றெடுக்க வேண்டும் என்பதை,

‘‘பாய்ந்தபின் அஞ்சுஓடில் ஆயுளும் நூறு ஆகும்
பாய்ந்தபின் நாலோடில் பாரினில் எண்பதாம்
பாய்ந்திடும் வாயுப் பகுத்து அறிந்து இவ்வகை
பாய்ந்திடும் யோகிக்குப் பாய்ச்சலும் ஆமே’’ [34]

எனத் திருமந்திரம் புலப்படுத்துகின்றது.

### 4.15.3 குழந்தையின் ஆயுள்

பிறக்கின்ற குழந்தை எத்தனை ஆண்டுகள் உயிருடன் வாழும் என்பதை விஞ்ஞானத்தால் கணித்துக் கூற இயலாது. ஆனால் மெய்ஞ்ஞானியான திருமூலர் இதனைக் கணித்துக் கூறியுள்ளார். இதனைக் கண்டு விஞ்ஞானமே வியப்புறுகின்றது. ஆணின் சுக்கிலம் ஆணிடமிருந்து பிரிந்து ஐந்து விரற்கிடை ஓடி விழுமாயின் பிறக்கும் உயிரின் வாழ்வு நூறு ஆண்டு. அந்தச் சுக்கிலம் நான்கு விரற்கிடை ஓடி விழுந்தால் அந்த உயிரின் வாழ்வு எண்பதாண்டு. சுக்கிலத்தைச் செலுத்தும் வாயுவை இப்படி நன்றாய் உணர்ந்து பாய்ந்திடச் செய்யும் ஆற்றல் யோகிக்கு உண்டு. யோகி வேண்டியபடி சுக்கிலத்தைச் செலுத்தி விரும்பியபடி குழந்தை பெற முடியும் என்ற கருத்தை,

‘‘பாய்கின்ற வாயுக் குறையின் குறள் ஆகும்
பாய்கின்ற வாயு விளைக்கின் முடம் ஆகும்
பாய்கின்ற வாயு நடுப்படின் கூன் ஆகும்
பாய்கின்ற வாயு மாதர்க்கு இல்லை பார்க்கிலே’’ [35]

என்ற பாடல் வழி திருமூலர் மொழிகின்றார்.

### 4.15.4 குழந்தையின் அங்கம் அமைதலின் சிறப்பு

பிறக்கின்ற குழந்தையானது சில சமயங்களில் உறுப்புக் குறைபாட்டுடன் பிறக்கின்றது. இவ்வாறு உறுப்புக் குறைபாட்டுடன் பிறப்பதை மருத்துவர்கள் மருத்துவக்கருவிகளைக் கொண்டு சோதித்துப் பார்த்தே கூறுகின்றனர். ஆனால் எந்தவிதக் கருவியோ, சோதனையோ இல்லாது குழந்தைகள் ஊனமாகப் பிறப்பதற்குரிய காரணத்தைத் திருமூலர் தமது மெய்ஞ்ஞானத்தால் உணர்ந்து கூறியுள்ளார். சுக்கிலத்தைச் செலுத்தும் வாயு குறைந்திடின் குழந்தையானது குட்டையாய்ப் பிறக்கும். பாயும் வாயு மெலிந்திடின் முடமாகும். அவ்வாயு தடைப்பட்டால் குழந்தை கூனாய்ப் பிறக்கும். ஆனால், ஆராய்ந்து பார்த்தால், பெண்களுக்கு வாயு இல்லை. இதனை,

''மாதா உதரம் மலம் மிகின் மந்தன் ஆம்
மாதா உதரம் சலம் மிகின் மூங்கை ஆம்
மாதா உதரம் இரண்டு ஒக்கின் கண் இல்லை
மாதா உதரத்தில் வந்த குழவிக்கே''[36]

என்ற திருமந்திரப் பாடல் நவில்கின்றது. இது விஞ்ஞானத்தை விஞ்சும் மெய்ஞ்ஞானத்தின் சிறப்பை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

### 4.15.5 கரு வளரும் காலத்தில் தாயின் வயிறு இருக்க வேண்டிய நிலை

குழந்தைகள் ஊனமாகவோ பிறகுறைபாட்டுடனோ இல்லாமல் இருப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதையும் தனது மெய்ஞ்ஞானத்தால் திருமூலர் எடுத்துரைக்கின்றார். குழந்தை அறிவுள்ளதாகவும் அறிவற்றதாகவும் இருப்பது கருவைச் சுமக்கும் அன்னையின் கையிலேயே உள்ளது என்பதை,

"குழவியும் ஆணாம் வலத்தது வாகில்
குழவியும் பெண்ணாம் இடத்தது வாகில்
குழவியும் இரண்டாம் அபானன் எதிர்க்கில்
குழவி அலி ஆகும்கொண்ட கால் ஒக்கிலே."[37]

என்று திருமூலர் மொழிகின்றார். அன்னையின் வயிற்றில் கருவாக அமைந்த குழந்தைக்கு அந்த அன்னையின் வயிற்றில் மலம் மிகுமானால் அக்குழந்தை மந்த புத்தியுடையதாய் விளங்கும். அவள் வயிற்றில் நீர் மிகுமானால் அந்தக் குழந்தை ஊமையாய் விடும். மலமும் நீரும் மிகுந்து இருக்குமானால் அக்குழந்தை குருடாகிவிடும் என்பதைத் திருமூலர் விஞ்ஞானம் வியக்கின்ற அளவிற்குக் குறிப்பிட்டிருப்பது நோக்கத்தக்கது.

### 4.15.6 குழந்தையின் பால் வேறுபாடு அமையும் விதம்

பிறக்கப் போகும் குழந்தையை ஆணா? பெண்ணா? மூன்றாம் பாலினமா? என்று எவ்வாறு கணிப்பது? இதற்கும் திருமூலர் தெளிவாக விளக்கமாகவும் தனது திருமந்திரத்தில் கருத்துக்களை மொழிந்துள்ளார். ஆணா? பெண்ணா? என்பதை

மட்டுமே இன்றைய விஞ்ஞானத்தால் சோதனை செய்து கூற முடியும். ஆனால் எந்தவிதமான சோதனைகளும் இல்லாது, மிகவும் விளக்கமாகத் தன்னுடைய மெய்ஞ்ஞான உணர்வினால் திருமூலர் திருமந்திரத்தில் இதனை எடுத்தியம்புகின்றார்.

### 4.15.7 உயிர்ப்பின் இயக்கத்து ஏற்பக் கரு அமைதல்

ஆண் பெண் இருவருக்கும் உயிர்ப்பு ஒத்து இருக்குமானால் கருவில் உள்ள குழந்தை அழகாக விளங்கும். புணரும் அக்காலத்தில் அந்த இருவருக்கும் உயிர்ப்புத் தடுமாறினால் பெண்ணுக்குக் கரு உண்டாக வாய்ப்பு இல்லையாகும். இதனை,

‘‘கோள்வளை உந்தியில் கொண்ட குழவியும்
தால்வளை உள்ளே தயங்கிய சோதியாம்
பால்வளர்ந்து உள்ளே பகலவன் பொன் உருப்
போல் வளர்ந்து உள்ளே பொருந்து உரு ஆமே’’[38]

என்ற திருமந்திரப் பாடல் இயம்புகின்றது.

திருமூலரின் மெய்ஞ்ஞானத்தின் கூற்றிற்கு எடுத்துக்காட்டாக மகாபாரத நிகழ்ச்சி அமைந்துள்ளது. வெறுப்புடன் கண்களை மூடிக்கொண்டு அம்பிகை வியாசரோடு உறவுகொண்டதால் அவளுக்குத் திருதராட்டிரன் என்ற பார்வையற்ற குழந்தை பிறக்கின்றது. அதேபோன்று அம்பாலிகை பயத்துடன் விருப்பமின்றி உடல் வெளிற வியாசருடன் இணைந்ததால் வெளிறிய தோற்றத்துடன் பாண்டு பிறக்கின்றான். விருப்பத்துடனும், மன, உடல் தூய்மையுடனும் அம்பிகையின் பணிப்பெண் வியாசருடன் இணைந்ததால் அவளுக்கு அறிவு சான்ற வீரனான விதுரன் பிறந்தான். இது விஞ்ஞானத்தை மெய்ஞ்ஞானம் மிஞ்சும் என்பதை திருமூலரின் திருமந்திரம் எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது நோக்கத்தக்கது.

### 4.16 ஆழிப்பேரலை

ஆழிப்பேரலையைப் பற்றி,

"அலைகடல் ஊடறுத்து அண்டத்து வானோர்
தலைவன் எனும்பெயர் தான்தலை மேற்கொண்டு
உலகார் அழற்கண்டு உள்விழாது ஓடி
அலைவாயில் விழாமல் அஞ்சல் என்றானே"[39]

தற்காலத்தில் சுனாமி என்பது அனைவரும் அஞ்சுகின்ற பேராபத்து தரக்கூடிய இயற்கை சீற்றம் ஆகும். சுனாமி வருவதை தற்பொழுது அறிந்துக் கொள்ள இயலாத நிலையில் அக்காலத்திலேயே தனது பாடலில் இதனைத் திருமூலர் குறிப்பிட்டுள்ளார் என்பது வியக்கத்தக்கது.

### 4.17 சித்தர்களின் விஞ்ஞான ஆராய்ச்சி

"தென் இந்தியாவில், மூலிகைகள், ரசவர்க்கங்களைச் கையாளும் அகத்திய வைத்தியம் காணப்படுகிறது. உலோக வகைகள், ரச வகைகளால் செய்யும் மருந்துமுறைகள், தமிழ் நாட்டாருடைய தனி முறைகளாகவே காணப்படுகின்றன.

வடமொழியில் உள்ள ஆயுர்வேத நூல்களில் கூறியப்படி அப்பிரேகத்தை நூற்றுக்கணக்கான புடங்களில் எரித்தால் அன்றி அதில் உள்ள மினுமினுப்பு போகிறதில்லை. ஆனால் தமிழ் முறைப்படி, பத்து புடத்தில் மினுமினுப்பு மறைந்து பஸ்பமாய் விடுகிறது. அப்பஸ்பத்துக்கு வீரியமும் மிகுதியாகிறது.

நாடிகளைப் பிடித்துப் பார்த்து நோய் இன்னது என்று அறியும் முறை சித்த வைத்தியத்துக்கே உண்டு. ஆயுர்வேத முறையில் நோயாளியைத் தொடுதல், பார்த்தல், விசாரித்தல் இவைகளின் மூலந்தான் நோயைத் தெரிந்து கொள்ள முடியும்.

'உலோக வகைகளை மருந்தாக மாற்றும் இரசாயன முறை தமிழ்ச் சித்த வைத்தியத்திற்கே உரிய உயர்ந்த முறையாகும்"[40]

### 4.17.1 ரசவாத வித்தை

ரசவாதம் என்றால் இரும்பு முதலிய உலோகங்களைத் தங்கமாக்குவது என்று நம்புகின்றனர். சித்தர்கள் இவ்வித்தையிலே தேர்ந்தவர்கள் என்று சொல்கின்றனர். சித்தர் நூல்களிலும் உலோகங்களைத் தங்கமாக்கும் முறைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. செம்பு. இரும்பு முதலியவைகளை மூலிகைச் சாறுகளுடன், வேறு உப்புகளுடன், சரக்குகளுடன் கலந்து புடம் வைத்துத் தங்கமாக்கலாம் என்று கூறப்பட்டிருக்கின்றது.

வாத வித்தையைப் பற்றி வழங்கும் பழமொழிகளும் கூறப்படுகின்றன. ‘‘வாத வாக்கியம்’’, வாதம் சுட்டு வைத்தியன் ஆனான். ‘‘வாதங் கெட்டால் வைத்தியம்’’ என்பன, அப்பழமொழிகள் ஆகும். தங்கத்தில் ஆசை வைத்து வாதம் சுடுவதிலே பழகிய பலர் சிறந்த வைத்தியர்களாகியிருக்கின்றனர்.

ரச வாதம் என்பது - ரசம் என்னும் இயற்கைப் பொருளின் தன்மைகளை ஆராய்ந்து அறிதலாகும். மருந்து வகைகளிலே ரசம் ஒரு முதன்மையான மருந்து என்பதை வைத்தியத்தைப் பற்றி தெரிந்தவர்கள் அறியக் கூடும். ரச பஸ்பம், ரச செந்தூரம், ரசக்கட்டு முதலியன ஒப்புயர்வற்ற மருந்துகளாகும். தீராத பல கொடிய நோய்களுக்கு ரசம் சம்பந்தமான மருந்துகள் கொடுக்கப்படுகின்றன. ஆகவே ரசவாதம் என்றால் ரசத்தின் மாறுதல்களை அறிவது என்பது பொருளாக உள்ளது. வாத-பண்டங்களின் மாறுதல்களைக் காண்பது ஆகும்.

இவ்வாறாக அக்காலத்தில் எந்தவித நவீன உபகரணங்கள், ஆயவுக்கூடங்கள் எதுவுமின்றி பல்வேறுப்பட்ட மருந்துகளை சித்தர்கள் கண்டறிந்துள்ளனர். தங்களின் அனுபவங்கள் வாயிலாக கண்டறிந்த உண்மைகளை நூல்களின் வடிவில் மக்களுக்கு தந்துள்ளனர்.

### 4.18 சித்தர்கள் சீனர்களின் தொடர்பு

நம் நாட்டுச் சித்தர்களுக்கும், சீன நாட்டு மருத்துவர்களுக்கும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே தொடர்பு உண்டு என்பது

அறியப்படுகின்றது. போகர், தமிழ்நாட்டுச் சித்தர்களில் ஒருவராகக் கருதப்பட்டாலும், இவர் சீன தேசத்தை சார்ந்தவர். தமிழ்நாட்டில் பல இடங்களிலும் சுற்றுப் பிரயாணம் செய்தவர். பழனி மலையிலே தங்கி தவம் புரிந்தவர். இவர் சீன மருத்துவ முறைகளை தமிழர்களுக்கு கூறியிருக்கலாம் என்பது உணரப்படுகிறது. இவர் பழனியிலே சமாதியானவர் என்று கூறப்படுகிறது. இவருடைய வைத்திய முறைகள் அடங்கிய நூல்கள் 'போகர் எழுநூறு','போகர் இரத்தின வைப்பு' முதலிய நூல்கள் இவர் பெயரால் வழங்குகின்றன. சீன நாட்டு வைத்தியம் நமது நாட்டுச் சித்த வைத்தியம் போலவே சிறந்து விளங்குகின்றது.

சித்த வைத்தியத்தால் தீராத நோயே இல்லை எனலாம். கர்ம வியாதி தீர்க்க முடியாத நோய் என்று சொல்லப்படும். குட்டம் போன்ற பெருநோய்களுக்கெல்லாம் சித்த வைத்தியத்தில் மருந்துகள் உள்ளன. ஒடிந்த எலும்பை ஒட்ட வைக்கும் பச்சிலைகள், முறிந்த எலும்பை வளர வைக்கும் பச்சிலைகளும் சித்த வைத்தியத்தில் காணப்பட்டன. இத்தகு முறையை சீன நாட்டு வைத்தியர்களும் கையாளுகின்றனர். இவைகள் அனைத்தும் சீன நாட்டு வைத்தியத்துக்கும் தமிழ் நாட்டு வைத்தியத்துக்கும் தொடர்புண்டு என்பதை காட்டுகின்றது.

சித்த வைத்திய நூல்கள் ஏராளமாக இருக்கின்றன. அவற்றுள் அச்சில் வெளி வந்தவை பல் அச்சாகாமல் இன்னும் ஏட்டுச் சுவடிகளாகவே கிடப்பன பல. காப்பாற்றட்டால் அழிந்து போனவை பல நூல்கள் ஆகும். திருமூலர், அகத்தியர், தேரையர் முதலியோர் நோய்களின் குணங்களைப் பற்றியெல்லாம் தங்களது நூலில் குறிப்பிட்டுள்ளனர். தேரையர் அருளிய தைலவர்க்கச் சுருக்கம், தேரையர் வைத்திய காவியம், தேரையர் வைத்தியம் ஆயிரத்தொன்று, நீர் நிறக்குறி சாத்திரம் முதலிய நூல்கள் தேரையர் பெயரால் வழங்குகின்றன. நீர் நிறக்குறி சாத்திரத்தில், சிறுநீரின் நிறத்தைக் கொண்டு நோய்களை கண்டறியும் வழி சொல்லப்படுகின்றது.

சித்தர்களின் வைத்திய நூல்களை ஆராய்ந்தால் பல்வேறுபட்ட உண்மைகளை கண்டறிய முடியும். மேலைநாட்டு வைத்திய முறைகளில் தீராத நோய்களையும், சித்த வைத்தியத்தின் மூலம் குணப்படுத்தியுள்ளனர். இதற்கு வைத்திய நூல்களின் மூலம் சித்தர்களின் விஞ்ஞான ஆராய்ச்சித் தன்மை புலனாகின்றது.

### 4.19 வசிஷ்டர் செய்த பிரசவ அறுவை சிகிச்சை

அகத்தியரின் உடன்பிறப்பு என்பதால் சித்தர்களால் அறியப்படாத ரிரீகளின் வரிசையில் முதலிடத்தை பெறுபவர் வசி'டர் ஆவார்.

சூரிய வம்சத்தைச் சேர்ந்த மன்னன் சவுதாசன் என்பவனின் மனைவி மதியுந்துகி என்பவள் கருத்தரித்து ஏழு ஆண்டுகள் ஆகியும் குழந்தை பிறக்காமல் இருந்ததால், வசிஷ்டர் அவள் வயிற்றை கருங்கல்லின் கூரிய முனையால் கிழித்துக் குழந்தையை வெளிப்படுத்தினார். பிறகு மூலிகைகளால் அவளையும் உயிர் பிழைக்கச் செய்தார்.

### 4.20 சிதம்பர ரகசியம்

அருள்மிகு நடராஜர் வீற்றிருக்கும் சிதம்பரம் கோவிலானது பல்வேறுப்பட்ட அதிசயங்களை உள்ளடக்கியதாக காணப்படுகின்றது. சித்தர்களின் மந்திர சாஸ்திரப்படி பிரதான மாந்திரிக சக்கரம் சிதம்பர சக்கரமாக உள்ளது. அக்காலத்தில் ரோமாபுரி முதல் சீனம் வரை உள்ள பழைய உலகம் மட்டுமே அறியப்பட்டிருந்த காலத்தில் சிதம்பரமே உலகத்தின் மையமாகக் கருதப்பட்டிருந்தது.

‘‘சுழிமுனை பூர்வ பூகோள நூற்படி அண்டத்தின் வடக்கு எல்லைக்கும் தெற்கெல்லைக்கும் நடுவாக சிதம்பரம் அமைந்துள்ளது. அதுபோலவே பிண்டத்திலுள்ள இடகலைக்கும் பிங்கலைக்கும் நடுவாக உள்ளது. சுழிமுனை என்பதால் இதற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.’’[41] இவ்வாறாக டி.வி.

சாம்பவசிவம் பிள்ளை அகராதியில் கூறப்பட்டிருக்கின்றது. பாண்டிய மன்னன் ஆணைப்படி சிதம்பரம் கோவிலை அமைத்த கருவூரார், திருமூலர் வழித்தோன்றலாகையால் மூலகுருவின் பெருமை நிலைக்கும்படியாக சித்தர்கள் கூறும் உடல் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டே கோவிலை அமைத்துள்ளார்.

- கோவிலின் கனக சபையின் மேல் 21,000 தங்க ஓடுகள் பொறுத்தப்பட்டு இருக்கின்றது. இவை மனிதன் நாள் ஒன்றுக்கு 21,600 மூச்சு விடுகின்ற நிலையை உணர்த்துவதாக உள்ளது.
- தங்க ஓடுகளைப் பொருத்த 72,000 ஆணிகள் அடிக்கப்பட்டுள்ளது. இவை மனித உடலில் உள்ள 72,000 நாடிகளை குறிக்கின்றது.
- கனகசபையின் முன் உள்ள ஐந்து படிகள் பஞ்சபூதங்களாகவும், தொண்ணூற்றாறு வெள்ளிப் பலகணிகள், உடலின் தொண்ணூற்றாறு தத்துவத்தை குறிக்கின்றது.

மனித உடலில் இருதயம் இடது பக்கம் சற்றுத் தள்ளி இருப்பது போல் நடராஜர் சன்னதி சற்று இடப்புறமாக ஒதுங்கியுள்ளது. இருதயம் துடித்துக் கொண்டே இருப்பது போல் நடராஜரும் ஆடிக்கொண்டே இருக்கின்ற தத்துவத்தை உணர்த்துகின்றது. இருதயத்திற்குப் பக்கவாட்டில் கபாடங்கள் இருப்பது போல் சிதம்பரத்திலும் கருவைறயின் பக்கவாட்டில் இரண்டு பக்கங்களிலும் வழிகள் உள்ளன.

கோவிலின் ஐந்து சபைகளும் மனித உடலில் உள்ள அன்னமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞான மய கோசம், ஆனந்த மய கோசம், பிராணமய கோசம் என்று பஞ்ச கோசங்களாகவே வர்ணிக்கப்படுகின்றன.

கருவூரார் அமைத்த சிதம்பரம் கோவிலானது தற்காலத்தின் விஞ்ஞான நிலையை விட உயர்ந்ததாக அதிசயிக்கதக்கதாக உள்ளது. விஞ்ஞான பார்வையில் வியப்படைய வைத்த நிலையானது, மனித உடலின் தத்துவத்தை

உணர்த்தும் வகையில் அமைக்கப்பட்டிருப்பது மெய்ஞ்ஞானத்தை எடுத்துரைப்பதாக உள்ளது.

"சித்தான கருவூரார் என்ற சித்து
சின்மயத்தில் பேரின்பம் கொண்ட சித்து
முத்தான வயததுவும் முந்நூறாண்டு
மூதுலகில் பாண்டியனுக்கு உகந்த சித்து
பக்தியுடன் சிதம்பரமாம் தேவஸ்தானம்
பட்சமுடன் நிர்மித்த ஞானசித்து."[42]

என்று இப்பாடலை போகர் கூறுவதால் கருவூராரே சிதம்பரம் கோவிலை அமைத்தவர் என்பது விளங்குகிறது.

### 4.21 வேம்பின் மகத்துவம்

வேம்பு எனப்படும் வேப்ப மரமானது பல்வேறுப்பட்ட அறிவியல் குணங்களை தன்னகத்தே கொண்டுள்ளது. தற்காலத்தில் வேம்பின் மகத்துவத்தை அறிய பல விஞ்ஞான ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டு, அதன் முக்கியதுவத்தை மக்களுக்கு அறிவித்து வருகின்றனர். ஒவ்வொருவரும் தமது வீட்டின் முன்புறத்தில் நிற்கும் வேம்பின் மருத்துவ குணத்தை அறியாமல், வெளிநாட்டாரின் மருந்துகளை வாங்கி உட்கொண்டிருக்கும் மக்களின் அறியாமையை எண்ணி வருந்த வேண்டிய நிலையே உள்ளது.

கார்த்திகை திங்கள் மிருகசீரிடம் அல்லது பூச நாள் முதல், வேம்பின் கொழுந்தை கிள்ளி இருபத்தேழு நாட்கள் தின்றால் அவ்வாறு தின்றவரைப் பாம்பு கடித்தாலும் வி'ம் ஏறாமல் இருக்கும் என்றும், மேலும் ஒரு மாதம் தின்றால் கு'ட நோய்கள் பறந்து போய்விடும் என்கிறார். கொழுந்தை நிழலில் உலர்த்திப்பொடி செய்து வெருகடி (மூன்று விரல்களால் எடுக்கும் அளவு) வீதம் தேனில் குழைத்துத் தின்று வந்தால் நரை திரைகள் மாறிவிடும். குன்றாத இளமையடன் முந்நூறு வயது வரை இருக்கலாம் என்கிற செய்தி வியப்பிற்குரியதாக உள்ளது.

“வேப்பமரத்தைத் துளைக்கும் படித் திருகாணியை செலுத்தி அதில் ஒரு சிலாகையை அடித்துக் கீழே ஒரு பழகிய மண்பாண்டம் வைத்து பால் அதில் விழும்படியாக வைத்து மூடிவிட வேண்டும். நாற்பத்தெட்டு நாள் சென்றபின் மட்பாண்டத்தில் இறங்கியிருக்கும் தைலத்தை எடுத்து மூன்று களஞ்சு தைலம் மூன்று களஞ்சு தேன் சேர்த்துக் குழப்பிக் கொண்டு ஒரு மண்டலம் உட்கொண்டால் முதுமை வராது” [43]

“தானவனாம் வேம்பினுட கற்பந்தன்னை
தாரணியில் சித்தர்களே சாற்றக் கேளும்
ஆனதொரு கார்த்திகையாம் மாதந் தன்னில்
வாழ் மிருக சீரிசமும் பூசந் தன்னில்
ஏன முதற் ஜலமிக்க கொழுந்தைக் கிள்ளி
இன்பமுடன் தின்றுவா இருபத் தேழ்நாள்
ஆனதொரு சர்ப்பங்கள் தீண்டினாலும்
அது பட்டுப் போகுமப்பா அறிந்து கொள்ளே” [44]

என்றவாறு கருவூரார் தன்னுடைய வைத்திய நூல்களில் பல்வேறான செய்திகளை கூறியுள்ளனர். கடலிலிருந்து சிறுதுளி எடுத்தாற் போன்று கருவூராரின் வாத காவியத்திலிருந்து வேம்பின் முக்கியத்துவத்தை விளக்கமாக எடுத்துரைத்துள்ளார். இன்றைய நவீனகாலத்தில் பரிசோதனை கூடத்தில் கண்டறிந்த மற்றும் கண்டறியாத வி'யங்களை கருவூரார் அக்காலத்திலேயே கூறியுள்ளார். இதிலிருந்து சித்தர்களின் விஞ்ஞான அறிவு புலப்படுகின்றது.

### 4.22 கடுவெளிச் சித்தர்

கடுவெளிச் சித்தர், உலகத்தையே சுத்த வெளி என்று கருதியவர் போல் தம் பாடல்களை அமைத்திருப்பதால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என்று கூறப்படுகிறது. தாம் கண்ட ஆன்ம அனுபவத்தை உலகமும் அறிய வேண்டும் என்ற எண்ணத்தால் எளிய இனிய பாடல்களை பாடியுள்ளார்.

"மெய்ஞானப் பாதையிலேறு – சுத்த
வேதாந்த வெட்ட வெளியினைத் தேறு
அஞ்ஞான மார்க்கத்தைத் தூறு - உன்னை
அண்டினோர்க் கானந்தமாம் வழி கூறு" [45]

### 4.23 தன்வந்திரி

இந்திய மருத்துவ விஞ்ஞானத்தின் தந்தை என அழைக்கப்படுவர் தன்வந்திரி ஆவார். ஆயுர்வேத மருந்துகளின் அதிபதி எனப்படுபவர். இவர் பதினெண் சித்தர்களில் ஒருவராக கருதப்படுகிறார். உலகில் இறவாமைக்கு வழிகாண முடியும் என்ற உயரிய நோக்கம் கொண்ட மருத்துவமுறை சித்த மருத்துவம் ஆகும்.

### 4.24 விஞ்ஞானம் உணர்த்தும் மெய்ஞ்ஞானம்

காலத்தின் மாற்றத்தைப் பற்றிக் கூறும் போது கலியுகத்தில் யோக நிலைகள் மாறிவிட்டன. மக்கள் அனைவரும் பொருளாசைக்கு அடிமையாகி விட்டனர். காமம், கோபம், குரோதம், போன்ற தீய குணங்கள் மனிதனை ஆட்டிப் படைகின்றன. மனிதனுக்குரிய பூரணமான கடவுள் சக்திகள் மறைந்துப் போகின்றன என சித்தர்கள் வருத்தம் கொண்டனர். ஆயிரமாயிரம் ஆண்டில் வெடிகளால் வானத்தைப் பிளப்பார். வர்ணாசிரம தருமம் சிதையும், வரன்முறைகள் மாறும், கோபதாபங்கள் பெருகும். தீர்க்க் முடியாத புயல்கள் உண்டாகும். திசைகள் கலங்கிப் பூகம்பம் உண்டாகும். கொடிய நோய்கள் பரவும், போர்களால் இரத்தம் சிந்திப் பெருகும். பூமியின் வளம் புதைந்துப் போகும். தெய்வங்கள் விண்ணை நாடித் திரும்பும். தீமைகள் கூத்தாடும். உண்மைகள் ஓடிப் போகும். விஞ்ஞானம் மிகும். உலகமெல்லாம் கள்ளமே வடிவெடுத்தாற் போல் இருக்கும் என்று கூறி, அதனை மாற்ற சித்தர் கூறிய மார்க்கத்தைக் கடைப்பிடித்தால் உலகம் உய்யும் என்று முன்னோர்கள் அறிவுறுத்துகின்றனர்.

"வெதத்தறிவான் கனியறிவான் மேல்தோல் உண்பான்
விஞ்ஞானி யவனறிவைப் பழிக்கவில்லை
சித்தரிவான் ஆத்தரிவான் சித்தன் சித்தன்
சித்தத் ததிலேசிருட்டிச் சித்தன் காண்பான்" [46]

**4.25 சித்தர்களின் ரசவாதக் கலை**

சித்தர்களின் நூல்களில் ரசவாதம், வாதம் என்பதற்கு பொருள் கண்டறியும் போது, அவர்களின் விஞ்ஞான அறிவு புலப்படுகின்றது. வேதித்தல் என்ற சொல்லே வாதம் என்று திரிந்ததாகவும், வாதம் என்பதன் பொருள் மாறுபடுதல் என்பதைக் குறிப்பதாக உள்ளது. உலகில் உள்ள ஒவ்வொரு பொருளும் மாற்றத்திற்கு உட்பட்டுக் கொண்டிருக்கின்றது. இத்தகைய மாற்றத்தைக் கண்டறிவதே வாதம் எனப்படுகின்றது. வாத வித்தையைப் பற்றி பழமொழிகளும் வழங்கப்பட்டு உள்ளன. "வாதம் சுட்டு வைத்தியன் ஆனான்",'வாதங் கெட்டால் வைத்தியம்' என்பன போன்றவைகள் மூலம் வாதத்தின் முக்கிய நிலையை அறிய முடிகின்றது.

ரசவாதம் என்பது ரசம் **என்னும்** இயற்கைப் பொருளின் தன்மைகளை ஆராய்ந்து அறிகின்ற தன்மையைக் குறிப்பதாக உள்ளது. ரச பஸ்பம், ரசசெந்தூரம், ரசக்கட்டு முதலியன அக்காலத்தில் வழங்கப்பட்ட உயர்வான மருந்து வகைகளாக காணப்பட்டன.

சித்தர்கள் கண்டறிந்த வாத வித்தை என்பது சிறந்த விஞ்ஞான ஆராய்ச்சிகளாகும். தற்காலத்தில் பல்வேறு விதமான ஆராய்ச்சிப் படிப்புகளை படித்துக் கண்டறியும் அற்புதமான செய்திகளை அக்காலத்தில் சித்தர்கள் தங்களது பாடல்களின் மூலம் வெளிப்படுத்துகின்றனர். அவ்வாறாக கண்டறியும் தங்கம் போன்ற விலையுயர்ந்த பொருட்களைக் கண்டு அவர்கள் அதில் ஆசைப்பட்டது இல்லை.

## 4.26 தொகுப்புரை

சித்தர்கள் உலகிற்குத் தந்த சாகாக் கலை என்னும் மரணமில்லாப் பெரு வாழ்வு வாழ்வதற்கு பல்வேறு வகையான நெறி முறைகளை வழங்கியுள்ளனர். ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் நடைபெறும் நிகழ்வுகளை தங்களுடைய நூல்களின் மூலம் அக்காலத்திலேயே உலகுக்கு அறிவுறுத்தியுள்ளனர். கலிகாலம் என்பதில் விஞ்ஞானம் என்பது பெரும் பங்கு வகிக்கும் என்ற நிலையை அப்போதே குறிப்பிட்டுச் சென்றுள்ளனர். மேலும் தற்காலத்தில் அதாவது கலிகாலத்தில் பல சோதனைக் கூடங்களை நிறுவி அதன் மூலம் பல புதுமைகளைக் கண்டுபிடித்து வருகின்றனர். ஆனால் அக்காலத்தில் எவ்வித வசதியுமின்றி இரும்பைப் பொன்னாக்குவது, இரசவாத முறை, செம்பை பொன்னக்குவது, பெரிய மலையை பொன்னாக்குவது, அறுவை சிகிச்சை, எலும்புகளை ஒட்ட வைப்பது, இறந்தவர்களை உயிர் பிழைக்க வைப்பது, மரணமின்றி வாழ மருந்துகள், யோகக் கலையின் அற்புதங்கள், கோயிலின் அற்புதங்கள், இயற்கையின் அதிசயங்கள் மறும் சித்தர்களின் அறிவியல் பார்வை, சித்தர்களின் தொலைநோக்குப் பார்வை, வானியல் திறன், சோதிடம் என்பன போன்ற அனைத்திலும் சிறந்து விளங்கியவர்கள் சித்தர்கள் ஆவார்கள்.

கரு உண்டாதல், குழந்தை ஆணா, பெண்ணா, மூன்றாம் பாலினமா, அல்லது மாற்றுத் திறனாளியா என்பதை எல்லாம் சித்தர்கள் தங்களது மெய்ஞ்ஞானத்தால் உணர்ந்து அதனை உலகிற்குக் கொடையாக வழங்கியுள்ளனர். திருமூலர் இதுதொடர்பாகக் கூறும் கருத்துக்கள் இன்றைய விஞ்ஞானத்தை விஞ்சும் அளவிற்கு அமைந்துள்ளன. மெய்ஞ்ஞானம் விஞ்ஞானத்தை வெல்லக் கூடியது என்பதற்குத் திருமந்திரம் சான்றாக உள்ளது.

விஞ்ஞானம் மட்டுமின்றி மெய்ஞ்ஞானத்தையும் மக்களுக்கு தங்களது பாடல்கள் மூலம் அறிவுறுத்தியுள்ளனர். பிரபஞ்ச ஆற்றலைக் கருவிகள் மூலமாகக் கிரகித்துப் பயன்படுத்த முயல்வது விஞ்ஞானம்., அப்படிப்பட்ட மேலான ஆற்றலைத் தெய்வீக அணுகுமுறையில் மானுடம் பயனுற முயன்றது

மெய்ஞ்ஞானம் என்பதை அழகாக உணர்த்தியுள்ளனர். மதங்களையும், சமயங்களையும் கடந்தவர்களாக சித்தர்கள் வாழ்ந்திருக்கிறார்கள், மெய்ப்பொருளை கண்டறிவதே அவர்களின் நோக்கமாக இருந்திருக்கின்றது.

# இயல் 4

## அடிக்குறிப்புகள்

1. திருக்குறள்., 355
2. கோவை-2, ப.38
3. பாம்பாட்டி சித்தர் : கோவை-2, ப.142
4. கொங்கணர் சித்தர், பா.77
5. கோவை-9, ப.124
6. கோவை-3. ப.108
7. யார் அந்த தமிழ்ச் சித்தர்கள், ப.31
8. யார் அந்த தமிழ் சித்தர்கள், .ப.35
9. திருமந்திரம், பா.2003
10. யார் அந்த தமிழ் சித்தர்கள், ப.41
11. சித்தர்கள் காட்டிய யோகநெறி, ப.19
12. சித்தர்கள் காட்டிய யோகநெறி, ப.23
13. சித்தர்கள் காட்டிய யோகநெறி, ரஸவாதக் கலை, ப.54
14. போகர் ஏழாயிரம்-2ஆம்காண்டம், பா.281-284
15. சித்தர் நெறிகளும் சித்தி முறைகளும், ப.14
16. கோவை-10, ப.43
17. கோவை -7, ப.70
18. சிவவாக்கியர் பாடல்களில் சமுதாயச் சிந்தனைகள், ப.20
19. திருமந்திரம், பா.107
20. சித்.நெறி.தொ.1, ப.249
21. சித். காட்டும் வாசியோகம், ப.99
22. சித்.நெறி.தொ.2, ப.757
23. கோரக்கர் சந்திரரேகை, பா.82, 83

24. சித்தர்கள் கண்ட தத்துவங்கள் - பி.சி.கணேசன், ப.52
25. கோரக்கர் சந்திரரேகை, பா.83
26. கோரக்கர் சந்திரரேகை, ப.148, பா.84
27. கோரக்கர் சந்திரரேகை, ப.192
28. திருமந்திரம்., பா.827
29. மேலது., பா.839
30. மேலது., பா.154
31. மேலது., பா.321
32. மேலது., பா.477
33. மேலது., பா.478
34. மேலது., பா.479
35. மேலது., பா.480
36. மேலது., பா.481
37. மேலது., பா.482
38. மேலது., பா.483
39. மேலது., பா.5:2
40. சித்தர்கள் கண்ட தத்துவங்கள் - பி.சி.கணேசன், ப.13.
41. எஸ்.பி. இராமச்சந்திரன், சித்தர்கள் வரலாறு, ப.32.
42. போகர்., பா.7000/5769
43. எஸ்.பி. இராமச்சந்திரன், சித்தர்கள் வரலாறு, ப.106
44. கருவூரார். வாதகாவியம், பா.695
45. எஸ்.பி. இராமச்சந்திரன், சித்தர்கள் வரலாறு, ப.146
46. சித்தர் இலக்கியங்களில் வாழ்வியல், கோவை., 2, ப.107

# இயல் 5

# சித்தர்களின் வாழ்வியல் சிந்தனைகள்

## 5.1 முன்னுரை

சித்தர்களின் வாழ்வியல் சிந்தனைகள் உலக மக்களின் நன்மையைப் பற்றியே அமைந்திருந்தது. வாழ்கின்ற போது உடலையும், பொருளையும் உரிமையாக வாழும் வாழ்வு வீணானது பிறருக்காக உடல், பொருள் ஆவி மூன்றையும் விடுபவராக வாழ்ந்தால் மனித வாழ்வு சிறந்ததாக கருதப்படும். அவருக்குச் சமுதாயத்தில் நிலைத்த பெயர் இருக்கும் என்பதாம். பன்னூறு ஆண்டுகள் ஆனாலும் அறமே பெரிதாய்க் கொண்டு வாழ்ந்தவர்களை மனித சமுதாயம் இன்றும் போற்றி வருகின்றது.

## 5.2 திருமூலரின் வாழ்வியல் நெறிகள்

மனிதன் தன்னுடைய வாழ்நாளில் இன்பத்தையும், துன்பத்தையும் கலந்தே அனுபவிக்கின்றான். உலக வாழ்வின் முப்பெரும் உண்மைகளான பதி (இறைவன்) பசு (உயிர்) பாசம் என்னும் முப்பொருள் உண்மைகளையும் திருமந்திரம் எடுத்துரைக்கிறது.

மனித உடலில் தூய்மை என்பதன் அவசியத்தை திருமூலர் மிகவும் வலியுறுத்தி கூறுகிறார். உடம்பினை இழுக்கு என்று எண்ணாமல், இறைவன் குடியிருக்கும் ஆலயம் என்று அறிந்து உடலை தூய்மையாக வைக்க வேண்டும் என்கிறார்.

> “உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தென்
> உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்

உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே"[1]

உடலை ஆலயம் என்று உரைத்ததோடு மட்டும் நில்லாது உள்ளத்தை பொருங்கோயில் என்றும், உயிரை சிவலிங்கம் என்றும், ஐம்புலன்களை ஒளி தரும் விளக்காகவும் எண்ணி, தன்னகத்தே உள்ள இறைவனை தெளிவுப்படுத்திக் காட்டியுள்ளார்.

**5.3 அறமே வாழ்க்கை**

வேதங்கள் எல்லாம், அறம், பொருள், இன்பம், வீடு போன்றவற்றை உணர்த்தி வீடுபேறு அடைவதற்கான வழியை உணர்த்துகின்றன. மனிதனாக பிறந்த ஒவ்வொருவரும் அறம் செய்வதை தன்னுடைய கடமையாகக் கொண்டு செயல்படுதல் வேண்டும். பொருளையும், உணவையும், பிறர்க்கு கொடுத்து வாழும் அறவாழ்வு மேலானது என்பதாகும். மனிதன் எளிமையாக செய்யும் அறங்களாக திருமூலர் எடுத்துரைப்பது.

உண்ணும் போது இறைவனுக்கு ஒரு பச்சிலை இடுவதும் பசுவிற்கு புல் அளித்தலும், தாம் உண்ணம் போது வறியவர்க்கு ஒரு பிடி உணவு அளித்தலும், பிறரிடம் இன்சொல்லால் உரையாடுவதும் அறங்களென தமது பாடலில்,

"யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுரை
யாவர்க்கு மாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர் கின்னுரை தானே"[2]

அறத்தைச் செய்யாமல் செல்வத்தை பாதுகாத்து வைப்பதால் எந்தப் பயனும் இல்லை என்பதை "செல்வத்துப் பயனே ஈதல் என்பதிலிருந்து அறிய முடியும். கூற்றுவன் வரும் காலத்தில் அவனை வராமல் தடுப்பது என்பது

எவராலும் இயலாத காரியமாகும். எனவே உயிர் இருக்கும் போதே அறங்களைச் செய்திட வேண்டும் என்பதை,

> "வன்மையில் வந்திடும் கூற்றம் வருமுன்னம்
> தன்மமும் நல்ல தவஞ்செய்யும் நீரே"[3]

என்ற பாடல் வரிகள் மூலம் விளக்குகின்றார்.

அறம் என்பது மனித உயிர்களை நன்னெறியில் அழைத்துச் செல்வது. மேலும் மனம், வாக்கு, காயம் ஆகியவற்றை ஒழுங்குபடுத்துவது என்பதாகும்.

மனித செயல்களில் அறங்கள் என வலியுறுத்துபவைகளில் கொல்லாமை, புலால் உண்ணாமை, கள் உண்ணாமை, பிறர்மனை நயவாமை போன்ற செயல்களை விவரிக்கிறார். ஓர் அறிவு முதல் ஆறறிவு வரையிலான உயிர்களை கொல்லும் உரிமை எவர்க்கும் இல்லை, மற்றொரு உயிரினைக் கொல்வதன் மூலம் உயிர் வாழ்வது என்பது விலங்குகளே ஆகும். எனவே உயிர்களை கொல்வது கடுமையான நரகத்திற்கு அழைத்துச் செல்வது ஆகும்.

புலால் உண்ணாமையே கொல்லாமைக்கு அடிப்படையாக உள்ளது. எவ்வுயிருக்கம் துன்பம் விளைவிக்கக் கூடாது எனப் புலால் உண்ணுதலை அறஇலக்கியங்கள் கண்டிக்கின்றன. அற இலக்கியங்கள் போலவே திருமந்திரமும் ஊண் உண்பவர்களைக் கடுமையாக சாடுகிறது.

> "பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
> எல்லாரும் காண இயமன்தன் தூதுவர்
> செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
> மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே"[4]

ஆண் பெண் இணைந்த திருமண வாழ்வை இல்லறம் என அழைத்தனர். அத்தகைய இல்லற வாழ்வில் ஒழுக்கம் என்பது இருவருக்கும் பொதுவாக

கருதப்பட்டது. குறிப்பாக தலைவனின் ஒழுக்கம் முக்கியமாகக் கொள்ளப்பட்டது. பிறன்மனை மனத்துள் கொள்ளாத பேராண்மை உடையோரின் சிறப்பினை,

"பிறர்ன்மனை நோக்கா பேராண்மை சானறோர்க்கு
அறனொன்றே ஆன்ற ஒழுக்கு"[5]

என்று வள்ளுவர் கூறுகிறார். அது போன்றே திருமந்திரமும், பிறர் மனைவியை நாடுவது அறியாமை என்கிறது. திருமூலரின் திருமந்திரம் ஒன்பது தந்திரங்களைக் கொண்டது. முதல் தந்திரத்தில் (உட்பிரிவுகுள்) அறக்கருத்துகள் மிகையாகக் காணப்படுகின்றன. யாக்கை, செல்வம், உடல், உயிர் என்பன யாவும் நிலையற்றவை என்பதையும் குறிப்பிடுகின்றார்.

### 5.4 நிலையாமை

உலக வாழ்க்கையில் மனிதன் சேர்த்து வைக்கும் செல்வம், புகழ், ஆடம்பர வாழ்வு, மனித உடல் என்ற அனைத்தும் நிலையில்லாதது என உணர்த்த திருமூலர் பல பாடல்களைப் பாடியுள்ளார். வணிகம் செய்து பொருளைக் கொண்டு வந்த கணவன் மனைவியிடம் அவற்றை தந்து சிறந்த முறையில் உணவு செய்து தருமாறு கேட்க மனைவியும் அவ்வாறே சுவையாக உணவு சமைத்து இருவரும் மனமகிழ்ச்சியோடு உணவினை உண்டனர். பிறகு கணவனுக்கு வெற்றிலை மடித்துச் சுவைக்க கொடுத்தாள். இத்தகு மகிழ்ச்சியான தருணத்தில் திடீரென்று கணவன் தன் இடப்பக்க மார்பு சிறிது வலிக்கிறது என்றான். சற்று நேரத்திலேயே அவன் உயிர் உடற்கூட்டை விட்டு பறந்து சென்றது என்பதை,

"அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேஇரைநொந் ததுஎன்றார்"
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே"[6]
"ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்

பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்

சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு

நீரினில் மூழ்கி நினைப் பொழிந்தார்களே”[7]

என்ற இப்பாடலில் இறைவன் படைத்த மனித உடல் என்பது நிலையில்லாதது என்பதையும் மனித வாழ்க்கை என்பது கானல் நீர் போன்றது என்பதை மக்கள் உணர வேண்டும் என்றே திருமூலர் இப்பாடல்கள் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

“வடிவுகண்டு கொண்ட பெண்ணை மற்றொருவன்

விடுவனோ அவனை முன்னர் வெட்டவேண்டும் என்பனே

நடுவன் வந்து அழைத்த போது நாறும் இந்த நல்லுடல்

சுடலை மட்டும் போய்த் தோட்டி கைக்கொடுப்பரே”[8]

அழகிய பெண்ணை மணம் முடித்த ஆடவன், அப்பெண்ணை பாதுகாத்து வைக்கும் போது, இடையில் அந்தப் பெண் இறந்து போனால், அந்தப் பெண்ணின் உடலை அழகு என்று வைத்திருக்காமல் எரிக்கவோ, புதைக்கவோ தோட்டியின் கையில் கொடுப்பான், எனவே உலகில், உடல் என்பது நிலையில்லாதது என்று சிவவாக்கியர் தம் பாடலில் எடுத்துக் காட்டியுள்ளார்.

“நந்தவனத்தில் ஓர் ஆண்டி – அவன்

நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி

கொண்டு வந்தான் ஒரு தோண்டி – மெத்தக்

கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி”[9]

என்ற கடுவெளி சித்தரின் பாடலும் உடல் நிலையாமையை வலியுறுத்துவதாகவே உள்ளது.

திருமூலரின் முதல் தந்திரம் - திருமூலர் எழுதிய முதல் தந்திரத்தில் யாக்கை நிலையாமை செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை கொல்லாமை, புலால்

உண்ணாமை, காம அடக்கம், அந்தணர் ஒழுக்கம், அரசன் அறஞ்செயதலின் சிறப்பு, அன்பை வளர்த்தல், பிறர்க்கு உதவி செய்தல், கற்றோரிடமிருந்தும் நூல்களில் இருந்தும் அறிவை வளர்த்தல், மனத்தை விறுப்பு வெறுப்புகளில் செல்ல விடாமை போன்ற அறிவுரைகள் தரப்பட்டுள்ளன.

உலகம் நிலையானது. அதில் தோன்றும் உயிர்கள் அனைத்தும் அழியக்கூடியது. அதுபோலவே மனிதப் பிறவியும் பிறந்தால் இறப்பது என்பது உலகநியதி ஆகும். செல்வம், இளமை, யாக்கை இவை மூன்றும் நிலையில்லாதவை என்று சித்தர்களும் கூறியுள்ளனர்.

சித்தர்கள், உடல் என்பது இறைவன் குடியிருக்கும் ஆலயம் என்றும், அதனை தூய்மையாக வைத்திருக்க வேண்டுமென்றும் கூறியுள்ளனர். அத்தகைய உடல் நிலையில்லாதது என்றும் வலியுறுத்திக் கூறியுள்ளனர்.

“காதருந்த ஊசியும் கடைசிவரை வருவதில்லை”[100]

என்று நிலையாமை குறித்து பட்டினத்தார் கூறுகிறார்.

### 5.4 உருவ வழிபாட்டை எதிர்த்தல்

கடவுளுக்குச் சிலையமைத்து வணங்குவதை முற்றிலுமாக எதிர்த்தனர். அதை

“உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி?
உலகத்தின் மூடர்களுக்கு உண்டோ உணர்ச்சி
புளியிட்ட செம்பில்குற்றம் போமோ அஞ்ஞானம்
போகாது மூடர்க்கென்று ஆடாய் பாம்பே”[11]

இதே போன்று சிவவாக்கியரும் உருவ வழிபாட்டை வன்மையாக எதிர்த்துப் பாடல் பாடியுள்ளார்.

"நட்ட கல்லை தெய்வம் என்று நாலுபுட்பம் சாத்தியே
சுற்றிவந்து முணுமுணுவென்று சொல்லும் மந்திரம் ஏதடா
நட்டகல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?[12]

திருமூலர், உடலையே ஆலயம், உள்ளமே பெருங்கோயில் என்று கூறிய கருத்தைப் போல இறைவன் ஒவ்வொரு மனிதனின் உடலிலும் வீற்றிருக்கிறான் என்கிறார். இக்கருத்திலிருந்து சிறிது மாறுதலாக சிவவாக்கியரும், பாம்பாட்டி சித்தரும் கடவுளை சிலையாக **வணங்குவதை** எதிர்த்து, உருவ வழிபாட்டை மறுக்கின்றனர்.

### 5.5 சாதி, சமய பேதத்தை எதிர்த்தல்

இறைவன், மனிதனை படைத்தான். மனிதன் சாதி, சமயங்களைப் படைத்து ஒற்றுமையாக இல்லாமல் சண்டையிட்டுக் கொள்கிறான். எனவே தான் சித்தர்கள் இதனை எதிர்த்தனர்.

"சமயபேதம், பலவான சாதிபேதங்கள்
சமயத்தோர்க்கே யல்லாது கற்பிது களுக்கோ?[13]

என்று சாதி, சமய வேற்றுமைகளை ஏற்பவர்கள் சமயவெறி கொண்டவர்களாக காணப்படுவர். இப்பேதங்களை விட்டவர்களே சிறந்த மனிதத்தன்மை படைத்தவர்கள் என்று சித்தர்கள் விளம்புகின்றனர்.

சித்தர்கள் சாதி மதங்களைக் கடந்து, மனிதன் ஒற்றுமையாக வாழ அறிவுறுத்தும் சிவவாக்கியரும், பால் ஒன்றிலிருந்து உற்பத்தியாகும் தயிர், மோர், நெய் என்று பல பொருட்கள் போலத்தான் பல சாதிகள் தோன்றுகின்றன என கொங்கணச்சித்தரும் கூறுவதிலிருந்து சாதி, சமய வேறுபாடுகளை களைந்தால் மனிதன் இனிமையாக வாழலாம் என்கின்றனர்.

வேதாந்தம், சாத்திரம் என்பனவற்றில் கூறப்படும் சமயங்களைப் பொய்கள் எனத் தள்ளுங்கள் என்று சட்டைமுனி சித்தர் அறிவுறுத்துகிறார்.

பாரதியார் அவர்கள் இந்நாட்டு மக்களின் நிலையை வருணிக்கும் போது,

> "முப்பது கோடி ஜனங்களின் சங்கமம்
> முழுமைக்கும் பொது உடைமை
> ஒப்பில்லாத சமுதாயம் உலகத்துக்கு
> ஒரு புதுமை வாழ்க"[14]

என்பார். 'சாதிகள் இல்லையடி பாப்பா', என்றும் உரைக்கிறான் பாட்டுக்கொரு புலவன் பாரதி, தீண்டாமை ஒரு பாவச்செயல் என்றார் மகாத்மா இத்தகைய புரட்சிக் கவிஞர் போராடியதைப் போன்றே சித்தர்களும் முழங்கியுள்ளனர்.

தாமே எல்லா சக்தியும் படைத்தவர்கள் என்பதை உணர்ந்து நின்றவர்க்குச் சாதி பேதம் இருக்காது. அவர்கள் வேத, வேதாந்தங்களை மிகுதியாகக் கற்றிருந்தாலும் தான் என்ற கர்வம் அவர்கள் உள்ளத்தில் வராது என்று சித்தர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

### 5.6 நிலையாமை

திரைகடல் ஓடித்தேடுகின்ற செல்வம், நன்கு மகிழ்ச்சியோடு அனுபவிக்கின்ற இளமை, பல்வேறு அணிகலன்கள், விதவிதமான ஆடைகள் என்று அழகுப்படுத்திய யாக்கை இம்மூன்றும் நிலையில்லாதவை என்கிறார். மேலும் மாடு, மனை, மக்கள், உறவினர், செல்வம் மணிகள், வெள்ளி, தங்கம், வெண்கலம், காடு, கரை,கல்நகைகள், யானை, குதிரை, தேடும்பல பண்டங்கள் என இவை யாவும் உலகில் நிலையற்றவை என்று குறிப்பிட்டு, இவற்றின்மீது பற்று வைத்து வாழ்வை வீணாகக் கழிப்பதைவிட நிலைத்த செல்வமாக விளங்கும் சிவகதியைச் சிந்தித்து வாழ்வதே சிறந்தாகும் என்று இடைக்காடர் உலகில் நிலையில்லாதது குறித்து விளக்கியுள்ளார்.

### 5.7 புலனடக்கம்

மனிதனின் ஐம்புலன்களான மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவகைள் மனிதனை ஆசை என்னும் கூண்டுக்குள் சிக்க வைத்து அலைகழிப்பவை ஆகும். மனிதனின் பலவிதமான துன்பங்களுக்கும் காரணம் ஐம்புலன்கள் என்பதை

"நீங்கும் ஐம்புலன்களும் நிறைந்தவரல் வினைகளும்
ஆங்காரமாம் ஆசையும் அருந்தடர்ந்த பாலமும்" [15]

எண் சாண் உடம்பினை ஆளுகின்ற ஐம்புலனது ஆணைக்கு அஞ்சி இவ்வுயிர்கள் இயங்கும் தன்மையை சிவவாக்கியர் தம் பாடலில் விளக்கிக் கூறியுள்ளனர்.

### 5.8 பட்டினத்தார்

"ஐந்து புலனும் அடங்கேனே என்குதே
சிந்தை தவிக்கிறதும் தேறேனே என்குதே" [16]

ஐம்புலன்களும் அடக்கமுடியாமல் ஆளும் நிலையைப் பற்றி பட்டினத்தார் புலம்புகிறார்.

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து" [17]

ஐம்புலனை அடக்கி ஆள கற்றுக்கொள்பவன், ஆமை தன்னை பாதுகாத்துக் கொள்ள ஓட்டுக்குள்ளாக மறைத்து கொள்வது போன்றதாகும். என்பதை வள்ளுவர் கூறியுள்ளார்.

இடைக்காடர், தான் உணர்ந்த அனுபவங்களைப் பொறி புலன்கள் வழி செல்லாது யோக நிலைக்குள் பயணிக்கவழிகாட்டுகிறார். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து ஆடுகள், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் மேய்தல் நிலமான காட்டில் மனம்போன போக்கில் மேயாமல் ஓட்டினேன்.

வாட்டினேன் ஏகவெளிக்குள்ளே என்று குறிப்பிடுவது, ஐம்புலன்களையும் அடக்கி யோக நெறியில் நின்று வாழ வேண்டுமென இடைக்காடர் அறிவுறுத்துகிறார். ‘‘பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு’’ என்னும் பாடலில் புலன்களை அடக்கி ஆண்டால் வாழ்வில் வெற்றி பெறலாம் என்னும் கருத்தை தெளிவுப்படுத்துகிறார்.

## 5.9 சமயம்

சமயம் என்பது மனிதனை நெறிப்படுத்துவது, முறைப்படுத்துவது என்றும் கூறலாம். சாதியைப் போன்று சமயமும் மனிதர்களுக்குள் பிரிவினையை ஏற்படுத்துவது என்பதாகும். சமயப்பாகுபாடுகளால் நிலவும் ஏற்றத் தாழ்வுகள் தேவையற்றன என்பது சித்தர்களின் கருத்தாக இருந்துள்ளது.

‘‘சமயமெல்லாம் சக்தியுண்டு சிவமுண்டு
சண்டாளர் பிரித்தல்லோ தள்ளி னார்கள்
சமயமெல்லாம் வேதாந்த சித்தாந்த முண்டு
சாதகத்தைப் பாராமற் றயங்கினார்கள்
“சமயமெல்லாம் நாதமுண்டு விந்துமுண்டு தோர்கள்
காக்கா மற்கெட்டார்க் களுலகத் தோர்கள்
சமயமெல்லாம் அப்பரமாம் ஞானமுண்டு
தாயைவிட்ட பாவத்தால் தவறிப் போச்சே’’[18]

சமுதாயத்தில் உள்ள பயனும் பொருளுமற்ற சாதி, சாத்திரம், சடங்கு, சமயம் போன்ற பாகுபாடுகளை அஞ்சாமல் சாடியவர்கள் சித்தர்கள்.

## 5.10 சமத்துவத்தை நிலைநாட்டும் சித்தர்கள்

சித்தர்கள் சமத்துவத்தை நிலைநாட்ட மக்களிடையே பல கருத்துகளைத் தங்கள் பாடல்கள் மூலம் கூறியுள்ளனர்.

### 5.10.1 அன்பு

மனித சமுதாயத்தின் அடிப்படை அன்பு. இது அனைவரையும் ஒரு கட்டுக்குள் அடக்கி வைப்பது கணவன்-மனைவி பெற்றோர் – பிள்ளைகள், சகோதரர் – சகோதரி என்று எந்நிலையும் இதற்கு விலக்காகாது.

அன்பினால் எதையும் சாதிக்க முடியும். ‘‘அன்புடையார் எல்லாம் உடையார்’’ என்கிறது குறள். மேலும் உடம்பில் உள்ள தசைகளை அறுத்து நெருப்பிலிட்டு வறுத்துக்கொடுத்தாலும் அடைய முடியாத இறைவனை அன்பினால் அடையலாம் எனத் திருமூலர் கூறுகிறார்.

‘‘என்பே விறகா இறைச்சி அறுத்திட்டு….” [19]

என்று பாடியுள்ளார்.

உலகில் இரண்டு சாதிகள் உள்ளன. அவை ஆண் சாதியும், பெண் சாதியும் என்று குறிப்பிடுகின்றார். மற்றவையெல்லாம் வீண் சாதி என்று பழிக்கின்றார்.

‘‘ஆண்சாதி பெண்சாதி யாரும் இருசாதி
வீண்சாதி மற்றவெல்லாம் குதம்பாய்’’ [20]

### 5.10.2 சினம்

சினம் என்னும் கோபம் ஒருவனை முழுமையாக அழித்துவிடக் கூடியது. சினம் என்னும் நோய் சினப்படுபவனை மட்டுமல்லாது அவனைச் சார்ந்தவனையும் அழிக்கக்கூடியது. சினம் குடியைக் கெடுக்கக் கூடியது, அதனால்தான் வள்ளுவர்

‘‘சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி
இனம் என்னும் ஏமாப் புடைத்து’’ [21]

என்னும் குறளில் சினத்தை நெருப்பு என்கிறார்.

ஒருவன் தன்னுடைய கடுமையான சொல்லினால் மற்றவருக்குச் சாபம் என்னும் துன்பத்தைக் கொடுத்தல் கூடாது. பிறர் மீது கோபம் கொள்வதையும், விருப்பம் கொள்வதையும் திணிக்கக்கூடாது. கோபம் என்பது தனது வார்த்தைகளாலும், செயல்களாலும் சுற்றத்தாரை துன்புறுத்தக் கூடியது. அத்தகைய கொடிய கோபத்தை விட்டுவிடுதல் வேண்டும் என்று கடுவெளிச் சித்தர் வலியுறுத்தி உரைக்கிறார்.

கோபமென்னும் நெருப்பால் பாவங்கள் பல செய்து பிறவிகள் பலபெற்று துன்பத்தில் உழன்று கொண்டிருக்கின்றாய். எனவே அக்கோபத்தை விடுத்து மேன்மை பொருந்திய இறைவனை வணங்க வேண்டும் என்பதனை எரிகின்ற தீபத்தை மலரென்று நினைத்து விட்டில் பூச்சி அதன் அருகே சென்று, அந்நெருப்புப்பட்டு இறந்து போவது போல என்று கணபதிதாசர் என்ற சித்தர் அறிவுறுத்துகிறார்.

"தீபத்தை மலரென்றெண்ணிச் சென்றிடு விட்டில் போல"[22]

## 5.11 திருமந்திரம்

சித்தர்கள் மானுட வாழ்க்கைக்கு ஒரு வழிகாட்டியாய் நின்றார்கள். சித்தர்கள் கூறிய கருத்துக்கள் எண்ணற்றவை. ஒரு சில கருத்துக்கள் மட்டுமே எழுத்து வடிவம் பெற்றவை.

"மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்
மூலன் உரை செய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரை செய்த முப்பது உபதேசம்
மூலன் உரை செய்த மூன்றும் ஒன்றாமே" [23]

மனித வாழ்க்கையில் கோபம் என்ற மிருகமானது மனிதனை அழித்து விடும். எனவே, அத்தகைய கோபத்தை விடுதல் வேண்டுமென சித்தர்களும் வலியுறுத்தியுள்ளனர்.

### 5.12 கடுவெளிச் சித்தர் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள்:

மக்கள் வாழ்வில் பின்பற்றத் தக்க நெறிகள் எவை என்பதை சித்தர்கள் பட்டியலிட்டு தந்துள்ளனர்.

- ❖ உத்தமர்களாகிய பெரியோரின் உறவினை விடாது கைப்பற்ற வேண்டும்.
- ❖ தருமங்கள் முப்பத்திரண்டு ஒன்றைக் கூட தவறாது செய்ய வேண்டும்.
- ❖ முப்பத்திரண்டு தருமங்களாக குறிப்பிடுவதில் சில
- ❖ மருத்துவசாலை அமைத்தல்
- ❖ தண்ணீர்ப்பந்தல் அமைத்தல்
- ❖ குளம் வெட்டுதல்
- ❖ மகவு வளர்த்தல்
- ❖ சிறையில் உள்ளோர்க்கு உணவு கொடுத்தல்

என்பன போன்றவை ஆகும். இவ்வுலகம் முள்ளைப் போன்ற வேதனை உடையது. எனவே, இவ்வுலகத்தின் மீது ஆசை கொள்ளுதல் கூடாது என்கிறார். மேலும்,

> ‘‘நீர்மேல் குமிழிக் காயம்-இது
>
> நில்லாது போய்விடும் நீயறி மாயம’’ [24]

என்பதில், இந்த உடலானது தண்ணீரின் மேல் உள்ள நீர்க்குமிழி உண்டானவுடன் உடைந்து போவது போல் அழியும் தன்மையை உடையது.

### 5.13 வாழ்வில் பின்பற்றக்கூடாதவை

"சொல்லரும் சூதுபொய் மோசம் - செய்தால்
சுற்றத்தை முற்றாய்த் துடைத்திரும் நாசம்" [25]

என்ற பாடலடிகள் சூதாட்டம், பொய், மோசம் ஆகிய மூன்றும் மனித வாழ்வை முற்றிலும் சீர் குலைப்பனவாகும் என்பதை உணர்த்துகின்றது.

"சினம் என்னும் பாம்பிறந்தால்
தாண்டவக் கோனே ! – யாவும்
சித்தி என்றே நினையடா
தாண்டவக்கோனே!"[26]

கோபம், வெகுளி, ஆத்திரம் என்று சொல்லப்படும் நச்சுப் பாம்பை அடக்கி, அதை உள்ளத்திலிருந்து விரட்டியடித்து, வீழச் செய்தால் தான் நம்முடைய செயல்களை நிறைவேற்ற முடியுமென்ற சித்தியும் கைகூடும் என்று இடைக்காட்டுச் சித்தர் கோபத்தை விலக்க வேண்டுமென குறிப்பிடுகிறார்.

### 5.14 கொங்கணர் தவிர்க்க வேண்டுமென கூறுபவை:

மக்களிடம் காணப்படும் தேவையில்லாத செயல்களை நீக்கி, சிலவற்றை தவிர்க்க வேண்டுமென சித்தர் வலியுறுத்துகிறார்.

- கண்டதையும் கேட்டதையும் மற்றவர்களிடம் சொல்லக்கூடாது
- கண்களால் பார்க்காததைத் தீர்ப்பாகக் கூறக்கூடாது
- மனைவியிடத்தில் கூட எதை, எதைச் சொல்ல வேண்டுமோ அதனை மட்டுமே சொல்ல வேண்டும்.

- தான் பெற்றெடுத்த பிள்ளையைப் பெற்றவர்களே இழிவாகப் பேசக் கூடாது.

மேலும் பொய் சொல்வதை தவிர்க்க வேண்டுமென கொங்கணச் சித்தர் கூறுகிறார். பொய்யானது அந்த நேரத்தில் மட்டும் நம்மை காப்பாற்றும் ஆனால் அது தன் வாழ்வை முழுவதும் அழித்துவிடும். ஆகவே அத்தகைய பொய் சொல்லுதல் கூடாது என்றும், இது போன்று மக்களின் மனதை நல்வழிப்படுத்தும் விதத்தில் பாடல்கள் பாடியுள்ளனர்.

மனிதர்கள் வாழ்வதற்கு இன்றியமையாதவை என்பது உணவு, உடை, இருப்பிடம் ஆகும். அத்தகு வசதிகள் இருந்தாலும் உறவுகள் நிலைத்து இருப்பதற்கு அன்பு என்பது மிகவும் முக்கியமானது. அம்மா-அப்பா, கணவன்-மனைவி சகோதரன்-சகோதரி, தோழன்-தோழி, அண்டை வீட்டுக்காரர்கள் என்ற அனைவரின் உறவுகளுக்குள்ளும் பரஸ்பரம் நிலவ, உறவு வளர அன்பு என்பது மிகவும் அவசியம், அதனால் தான் திருவள்ளுவர் அன்புடைமை என்ற ஒரு அதிகாரத்தையே உருவாக்கியுள்ளார்.

> ‘‘அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
> என்புதோல் போர்த்த உடம்பு’’[27]

என்று கூறுவதைக் காணலாம். சைவர்கள் எல்லோரும் ஓதுகின்ற மொழி ‘‘அன்பே சிவம்’’ என்பதாகும். அன்பாகிய திருவருளும் இன்பமாகிய சிவனும், மணியும், ஒளியும் போல ஒன்றே ஆகும். அன்பே சிவம் என்ற உண்மையை அனைவரும் அறியவில்லை. அந்த உண்மையை அறிந்தால் அன்பு வழியே சிவனை அடையலாம் என்ற உண்மை புரியலாகும் என்பதை திருமூலர்,

> ‘‘அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
> அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
> அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்

அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே'' [28]

என்ற பாடல்வழியாக அறியமுடிகிறது. உடலினை வருத்தி பல விரதங்களும், வேள்விகளும் செய்வதனால் இறைவனை உணர முடியாது, அன்பில்லாதவர்கள் எக்காலத்திலும் இறைவனை அடைய முடியாது. எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்தும் அன்பர்கள், அகங்குழைந்து செய்யும் வழிபாட்டினையே சிவன் விரும்புவான் என்பர்.

எல்லா உயிர்களிடத்தும் அன்பு காட்டுதல் வேண்டுமென பாம்பாட்டிச்சித்தர் வலியுறுத்துகிறார். பாம்பை அடிக்க வரும் மனிதர்களைத் தடுத்து, அது தன் வழியே செல்லட்டும். துன்புறுத்தாதீர்கள் என அறிவு புகட்டுகிறார். இதன் மூலம் பிற உயிர்களைத் தேவையின்றி துன்புறுத்தக் கூடாது என்பதுடன், அன்பு காட்ட வேண்டும் என்பதையும் வலியுறுத்துகிறார். அன்பு இல்லாத மனத்தை உடையவர் முக்தி அடைவதற்கு வழியே இல்லை என்பதைத் தம் பாடலில்,

''எள்ளளவும் அன்பகத்தில் இல்லாதார் முத்தி

எய்துவது தொல்லுலகில் இல்லையெனவே'' [29]

என்று கூறியுள்ளார். மனித உயிர்களிடத்தில் அன்பு வேண்டுமென்று சித்தர்கள் அறிவுறுத்தியுள்ளனர்.

### 5.15 இறைவன் ஒருவனே

ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பதில் சித்தர்கள் உறுதியாக இருந்தனர். சித்தர்கள் குறிப்பிட்ட எந்த சமயத்தையம் சார்ந்தவர்கள் அல்லர். இறைவன், மனித உள்ளத்தில் குடிக்கொண்டிருக்கிறான் என்பதை தம் பாடல்களில் உணர்த்தியுள்ளனர். ஒரே பொருளான இறைவன் செயல்நிலை நோக்கிப் பல்வேறு பெயர்களைப் பெற்று,பலவாக தோன்றுகின்றான். ''ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' (திருமூலர் 2014) எனத் திருமூலரும்,''ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு'' (பட்டினத்தார் 105) எனப் பட்டினத்தாரும் ''தித்திக்கும்

தெள்ளமுதைச் சித்தாந்தத் துட்பொருளை, முத்திக்கும் வித்தை முதல் நினைப்ப தெக்காலம்'' (பத்திரகிரி 31) எனப் பத்திரகிரியாரும் கூறுவர்.

சமயங்கள் தோன்றி அவை தமக்குள்ளேயே பூசல்களையும் போராட்டங்களையும், உணர்வு தாழ்வுகளையும் கற்பித்தன. இதனால் அனைத்துச் சமயங்களும் பரம்பொருள் ஒன்றே பாகுபாடுகளை வளர்க்காதீர்கள் என சித்தர்கள் பாடினர்.

சிவவாக்கியர் சமுதாயத்தை நோக்கி சாதி எங்கே? இருக்கிறது என்றும், சாதிபேதம் கொள்வது மனித தன்மையா? என்றும் வினா எழுப்பியுள்ளார்.

''சாதி ஆவது ஏதடா? சலந்திரண்ட நீரெல்லாம்
பூதவசல் ஒன்றலோ, பூதம் ஐந்தும் ஒன்றலோ? [30]

என்னும் பாடலின் மூலம் விளம்புகிறார்.

## 5.16 மறுபிறப்பு நம்பிக்கையை எதிர்த்தல்

மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் இறப்பு என்பது மறுக்க முடியாத உண்மையாகும். அதில் அவரவர் கர்ம வினைப்பயனால் ஏழு பிறப்பு உண்டு என்றும் இறந்தவர் மீண்டும் பிறப்பர் என்ற மூடநம்பிக்கைகள் மக்களிடையே நிலவி வருகிறது. சிவவாக்கியர் மாண்டவர் மீண்டும் வருவதில்லை என்பதை

''கறந்த பால் முலைப்புகா் கடைந்த வெண்ணெய் மோர்புகா
உடைந்து போன சங்கினோசை உயிர்களும் உடற்புகா
விரிந்தபூ உதிர்ந்தகாயும் மீண்டும் போய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லை இல்லை இல்லையே'' [31]

## 5.17 சித்தர்களின் பார்வையில் பெண்கள

''மங்கையராயப் பிறப்பதற்கே நல்ல
மாதவம் செய்திட வேண்டும்மா! [32]

என்ற கவிமணியின் கூற்றுப்படி, பெண் என்பவள் போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டிய அரிய பொக்கிஷம். அத்தகைய பெண்ணாய்ப் பிறப்பு எடுப்பதற்கே, பெரிய தவம் செய்திட வேண்டும் என்கிறார். அவ்வை மூதாட்டி விநாயகப் பெருமானிடம் ஞானோபதேசம் பெற்றுப் பிறவாப் பெருநிலை எய்தியவர். அவ்வையைப் போன்றே அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவரான காரைக்காலம்மையாரும் சிறந்தப் பெண்ணாக திகழ்ந்துள்ளார் எனலாம். தேவலோகத்தில் உள்ள ஊர்வசி, திலோத்தமை என்ற இரு பெண்கள் சித்தர்களாகக் கருதப்பட்டனர். ஊர்வசி என்பவர் தேவதாசி வகுப்பைச் சேர்ந்தவர் என்றும், அவர் 120 ஆண்டுகள் வாழ்ந்து எண்ணற்ற சீடர்களுக்கு உபதேசம் செய்தவர் என்றும் 'போகர் ஏழாயிரம்' கூறுகின்றது.

கொங்கணர் தமது பாடலில் பெண்மையை உயர்த்தியே பேசுகிறார். ஆணைவிடப் பெண்ணே உயர்ந்தவர் என்கிறார். உலகத்தை இயக்குவது பெண்மை, உறவுகள் உண்டாவது பெண்மையால், ஆண்களுக்குப் பெண்கள் தரும் மகிழ்ச்சியை மற்ற எதுவும் தரமுடியாது என்பதை,

"மாதாவாய் வந்தே அமுதம் தந்தாள் மனை
யாட்டியாய் வந்து சுகம் கொடுத்தாய்
ஆதரவாகிய தங்கையானாள் நமக்கு
ஆசைக் கொழுந்தியும் மாமியும் ஆனாள்!" [33]

பெண், மனிதனை விலங்கிலிருந்து பிரித்து அவனுக்குப் புகழும் பெருமையும் சேர்க்கிறாள். பெண், தான் கற்புள்ளவள் என்று நிருபிக்கும் பொறுப்பு மனைவிக்குத்தான், கணவனுக்குக் கிடையாது என்கிறார்.

### 5.17.1 பெண்ணாசையை வெறுத்தல்

சித்தர்கள் பெண்ணாசையத்தான் வெறுத்தார்களேயொழிய பெண்ணினத்தையே வெறுத்துப் பாடவில்லை. பாம்பாட்டிச் சித்தர்

பெண்ணின்பத்தை வெறுத்துப் பாடியுள்ளார். இவருடைய 129 பாடல்களுள் 10 பாடல்கள் பெண்ணாசையை விலக்குவது பற்றிய பாடல்களாக உள்ளன.

பெண்களை அழகாக வருணித்துப் பேசுபவர்கள் தீய செயலுக்கே துணைபோவர்கள் என்கிறார், மேலும் அழுக்கு நாறும் கூந்தலைச் செழுமையான மேகமென்று சொல்வதோடு, மார்பை, செய்து வைத்த தங்கக் கட்டிக்கு ஒப்பானதாய் நினைத்து, நினைத்து அவர்களையே எண்ணி உருகி வாழ்பவர்கள் ஈசனை ஒருபோதும் நினைக்கமாட்டார்கள் என்பதை,

"சிக்கு நாறும் கூந்தலைச் செரு மேகமாய்
செப்புவார் கொங்கைதனைச் செப்புக் கொப்பதாய்
நெக்கு நெக்குருகிப் பெண்ணை நெஞ்சல் நினைப்பர்
நிமலனை நினையார் என்று ஆடு பாம்பே" [34]

என்று பெண்ணாசையை வெறுத்துப் பாடியுள்ளார்.

### 5.18 சித்தர்களின் சமநோக்குப் பார்வை

சித்தர்கள்' காடே திரிந்தென்ன, கந்தையே உடுத்தென்ன, ஓடே எடுத்தென்ன என்று ஓரிடத்திலும் தங்காமலும் எதனையும் சொந்தமெனக் கொள்ளாமலும், நாடோடி வாழ்க்கை வாழ்ந்தாலும் அவர்கள் சமுதாயத்தைப் பற்றிய கண்ணோட்டம் கொண்டவர்களாக இருந்தனர். மேலும் கோயில் வழிபாடு வேள்விகள், சாத்திரங்கள் ஓதுதல் போன்றவற்றைச் சாடியும் மூட நம்பிக்கைகள், பழக்க வழக்கங்களைக் கண்டித்து இருப்பதும், சமுதாயத்தின் மேல் இருந்த ஈடுபாட்டைக் குறிக்கிறது.

மனிதர்கள் அனைவரும் அகநாட்டம் கொண்டு, புறவழிபாட்டை வெறுத்து வாழ்ந்தால் சமுதாயம் ஏற்றத்தாழ்வு அற்றதாகிவிடும் என்பதை உணர்ந்தனர். என்னுள்ளே இருக்கும் ஆண்டவன்தான் பிற மனிதர்களிடமும் உறைகிறான் என்ற உணர்வு ஏற்படின் அனுபவ ரீதியாக அனைவரும் சமம் என்ற உண்மை புலப்படும்.

சினத்தால் உண்டாகும் தீய விளைவுகளை உணர்ந்த பாம்பாட்டிச் சித்தர்

"கோபம் எனும் மதயானைக் கொண்ட மதத்தை
கூர்கொள்புத்தி அங்குசத்தால் கொன்றழித்தோம் காண்" [35]

என்ற வரிகள் மூலம் கோபத்தை புத்தியினால் வெல்ல வேண்டும் என்கிறார்.

மனிதப் பிறவியின் முக்கிய நோக்கம் மீண்டும் பிறவாது இறைவனை அடைதல் ஆகும். அதற்கு எந்தப் பொருளிடத்தும் ஆசை கொள்ளாது இருத்தலே எளிய வழியாகும்.

ஆசை என்பது அடங்காது பசு அந்தப் பசுவின் அடங்காத்தன்மை அழிய வேண்டும்.ஆசையைக் கட்டுக்குள் அடக்கிவிட வேண்டும். அவ்வாறு இருந்தால், உலகில் உள்ள உண்மைகள் முழுவதையும் கண்டறிய முடியும். ஆசையை அறுத்துவிடு என்பதை தம் பாடலில் இடைக்காட்டுச் சித்தர்,

'ஆசை யென்னும் பசுமானின்
தாண்டவக்கோனே!
அண்டம் எல்லாம் கண்டறிவாய்
தாண்டவக்கோனே! [36]

என்ற பாடலில் அறிய முடிகின்றது.

உலகில் பெண்ணாசை என்பது மிகவும் ஆபத்தானது. பிற பெண்களின் மேல் ஒருவர் வைக்கும் ஆசையானது அவரைப் பெரிய துன்பத்தில் தள்ளிவிடும். இராமாயணக்கதை நமக்கு உணர்த்துவது பெண்ணாசை கூடாது என்பதாம். இத்தகு பெண்ணாசை அறிவை மயக்கி இறைவனைக் காண இயலாமல் செய்துவிடும். இதனால்தான் எண்ணற்ற ஞானிகள் காட்டுக்குச் சென்று கடுந்தவம் இயற்றியுள்ளனர்.

ஒருவனது மனமானது செம்மையானால் அவன் எந்த மந்திரங்களும் சொல்ல வேண்டியதில்லை.

‘‘மனமது செம்மை யானால் மந்திரஞ் செபிக்க வேண்டா
மனமது செம்மை யானால் வாயுவை உயர்த்த வேண்டா
மனமது செம்மை யானால் வாசியை நிறுத்த வேண்டா
மனமது செம்மை யானால் மந்திரஞ் செம்மை யாமே’’ [37]

என்ற இப்பாடல் வரிகள் மூலம் ஒருவன் தன் மனத்தை செம்மையாக, எந்த தீய எண்ணங்களுக்கும் இடம் கொடாமல், அதாவது நல்ல எண்ணங்களுடன் இருந்தால் அவனுக்கு எந்த மந்திரமும் வேண்டாம், கோவிலும் வேண்டாம் என்கிறார் அகத்தியர்.

இறைவன் ஒருவனே என்பதை, சித்தர்கள் பல்வேறு வழிகளில் வலியுறுத்திக் கூறியுள்ளனர்.

‘‘ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகும்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே’’ [38]

இறைவனை பல்வேறு உருவங்களில், பல்வேறு வடிவங்களில் வழிபட்டாலும் பரம்பொருள் என்பது ஒன்றேயாகும் என்பதைத் திருமூலர் தம் பாடலில் விளக்கியுள்ளார்.

உலகில் பிறந்த எல்லா உயிர்களுக்கும் இறப்பு என்பது மறுக்க முடியாதது. இறப்பு உடலுக்கா, உயிருக்கா, ஆன்மாவிற்கா என்ற நிலை வரும்போது,‘‘பிறவாமை எனும் பேரானந்தம் சுகம் என்று கருதலாம். ஆன்மா இறைநிலைமை உணர்ந்து, பிறவாமை எனும் நேர்கோட்டுப் பாதையில் சென்று இறைவன் திருவடி அடைந்து இன்பத்தில் திளைக்கின்றன,

“இக்காயம் நீங்கி இனியொரு காலத்தில்

புக்குப் பிறவாமல் போம் வழி நாடுமின்” [39]

என்று திருமூலர் விளக்குகிறார். “பிறவாமை வேண்டும். மீண்டும் பிறப்புண்டேல் உன்னை மறவாமை வேண்டும் என்று காரைக்கால் அம்மையார் விளம்புகிறார்.

### 5.19 சித்தர்களின் அறிவுரைகள்

மதச்சடங்கு, சாத்திரம், கடவுளின் கோபம் என்ற போர்வையில் சமயவாதிகள் அப்பாவி மக்களை அறியாமை இருளில் ஆழ்த்தினர். உயிர்பலியிடுதல் போன்ற கொடிய பழக்கங்களைச் சமூகத்தில் உண்டாக்கினர். சாத்திரத்தைச் சுட்டெரித்தால் அவனே சித்தன்’ என்று அகத்தியர் கூறியது போல சித்தர்கள், சமூகத்தில் தொடர்ந்த இழிநிலையைப் போக்கி மக்களுக்கு உண்மைகளை உணர்த்த விரும்பினர்.

### 5.20 சித்தர்களின் கருத்துச் செறிவு

சித்தர்கள் மிக ஆழமான கருத்துக்களைப் பாமரர்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் எளிய தமிழில் கூறியுள்ளனர். தாம் உணர்ந்தவற்றை மக்களுக்கும் உணர்த்தினார்கள். பாடலைப் படிக்கும்போது மேலோட்டமாக ஒரு பொருளும், உள்ளார்ந்த வேறு ஒரு பொருளும் அமையப் பாடி வைத்துள்ளனர். சித்தர் இலக்கியங்களில், மற்ற இலக்கியங்களைப் போலவே சொல், பொருள், நயம் மிகுதியாகக் காணப்படுகின்றன. சிவவாக்கியர் பாடலில் சான்றாக,

“அஞ்செழுத்திலே பிறந்து அஞ்செழுத்திலே வளர்ந்து

அஞ்செழுத்தை ஓதுகின்ற பஞ்சபூத பாவிகாள்

அஞ்செழுத்தில் ஓர் எழுத்து அறிந்து கூற வல்லீரேல்

அஞ்சல் அஞ்சல் என்ற நாதன் அம்பலத்தில் ஆகுமே” [40]

இப்பாடலில் வரும் அஞ்செழுத்து பஞ்சபூதத்தின் கூட்டாகிய இவ்வுலகம் தோன்றுவதற்கு காரணம். ஐந்து என்னும் சொல் பஞ்சாட்சரத்தைக் குறிக்கிறது.

**5.21 இளமை நிலையாமை**

"கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டும் தேறார் விழி இலா மாந்தர்
குழக்கனறு மூத்து ஒருதாய்ச் சிலநாளில்
விழக்கணமும் தேறார் வியன் உலகோரே" [41]

கிழக்கில் தோன்றிய சூரியன் மேற்கே மறைவதைக் கண்டும் காணாதவர்களாய், இளமை நிலையாமையை உணர்கிலர். இளைய பசுக்கன்று தாயாகி பின் அது இறந்தும் போகிறது. இளமை நிலையில்லை என்பதை இப்பாடல் மூலம் திருமூலர் உணர்ததுகிறார்.

"இளமையும் நிலையாவால், இன்பமும் நின்ற அல்ல
வளவையும் அ∴தே போல், வைகலும் துன்ப வெள்ளம்" (வளையாபதி)

"இளமையும் செல்வமும்யாக்கையும் நிலையா
உளநாள் வரையாது ஒல்லவது ஒழியாது
செல்லும் தேஎத்துக்கு உறுதுணை தேடுமின்"[42]
"பனிபடு சோலைப் பயன்மர மெல்லாம்
கனி யுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை நனிபெரிதும்"[43]

இளமை என்பது நிலையில்லாதது என்று இலக்கியங்கள் மற்றும் சித்தர்களும் தங்களது பாடலில் வலியுறுத்தியுள்ளனர்.

சித்தர்கள் சாதி சமய வேறுபாட்டைக் கடந்தவராகவும் இருக்கின்றனர். சடங்குகள், மூட நம்பிக்கைகள், பொருளற்ற செயல்களை வெறுத்தனர். மனித வாழ்வே உன்னதமானது என்ற கருத்துடையவர். மனத்தூய்மை இல்லாமல்

செய்யும் இறை வழிபாடுகள் பொருளற்றவை என்றனர். இறைவன் குடியிருக்கும் ஆலயமான உடலைப் பேணிக் காக்க வேண்டும். சிற்றின்பமாக உள்ள பொய், களவு, கொலை, கோபம் கள், காமம் ஆகியன மனித சமூகத்தை அழித்துவிடும் என்கின்றனர். யாக்கை, செல்வம், இளமை நிலையில்லாதது என்று எச்சரிக்கை விடுக்கின்றனர். எங்கும் நிறைந்துள்ள இறைவனை மனம், மொழி, மெய்களால் வணங்கிப் போற்ற வேண்டும் என வலியுறுத்துகின்றனர்.

இறைவன் உறையும் உடல் மரணத்தினால் அழிவதற்கு முன் இறைவனை அகத்தில் காண இயலாமைக்குச் சித்தர்கள் பல தடைகளைக் கூறுகின்றனர். அவற்றை அகற்றி மனதைச் செந்நெறிப்படுத்துவதே சித்தர் நெறியாகும். மருத்துவர்களாகவும், ஞானிகளாகவும், துறவிகளாகவும் விளங்கிய சித்தர்கள் சமூகச் சிந்தனையாளர்களாகவும். சீர்திருத்தவாதிகளாகவும் விளங்கினார்.

“பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்
பார்ப்பான் பசு ஐந்தும் பாலாச் சொரியுமே”[44]

ஐம்பொறிகளை கட்டுப்படுத்தும் ஆற்றலை இறைவன் வழங்கியுள்ளான். ஐந்து பசுக்களாகிய இந்த ஐம்பொறிகளை இறைச் சிந்தனையில் செலுத்தினால் ஐந்து பசுக்களும் பேரின்பப்பாலை (மோட்சம்) சொரியும். ஐம்புலனையும் நல்வழியில் செலுத்த வேண்டும் என்கிறார்.

“இறந்தவர் ஐவரவர் இட்டமானவர் எய்துவர்
இறந்தாரென்று எல்லாவர்க்கும் சொல்
மறந்தவர் ஒருவரென்றே மண்ணிலுள்ளோர்
வகையறிந்திடவே நின்றாடு பாம்பே” [45]

ஐம்பொறிகளின் வழித் தோன்றும் ஐம்புல இன்பங்களை விட்டாரே வாழ்பவர். ஐம்புலன்களை நுகர்பவர் உயிருடனிருப்பினும் இறந்தவர் ஆவார்.

### 5.22 சித்த மருத்துவம்

சித்தர்கள், மனிதன் முறையாக வாழ்வதற்கு உரிய வாழ்க்கை ஒழுக்க நெறிகளை தம் பாடல்கள் வழியே கூறியுள்ளனர். அதே போன்று உடல் அரோக்கியத்துடன், நோயில்லாமல் நீண்ட ஆயுளுடன் வாழ்வதற்கான மருத்துவச் செய்திகளையும் குறிப்பிட்டுள்ளனர். சித்த மருத்துவத்தை தமிழ் மருத்துவம் என்கிறோம். பலநூறு ஆண்டுகள் பழமை வாய்ந்தது சித்த மருத்துவம்,

மனிதனுக்கு ஏற்படும் நோயின் தன்மையை அறிந்து மருத்துவம் மேற்கொள்ளுதல் வேண்டும் என்பதை திருவள்ளுவர்,

''நோய்நாடி நோய் முதல் நாடிஅது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்'' [46]

என்கிறார். நோய் வராமலிருக்க சரியான உணவு முறையும் மனநிம்மதியும், உடற்பயிற்சியும் முக்கிய பங்கு வகிக்கின்றன.

''நாடி யொருபது நன்கா யறிந்திடில்
ஓடிவிடும் பிணியே
ஓடிவிடும் பிணியே'' [47]

நாடிகள் பத்தினையும் நன்றாக அறிந்து கொண்டால் பிணி அகலும் என்பது குதம்பைச் சித்தர் மொழியாகும்.

#### 5.22.1 இளமையுடன் வாழ மருத்துவம்

''காலை இஞ்சி கடும்பகல் சுக்கு
மாலை கடுக்காய்
மண்டலம் தின்றால்

கோலை யெறிந்து

குலாவி நடப்பர்'' [48]

இஞ்சி, சுக்கு, கடுக்காய் போன்றவற்றை முறையுடன் உண்டால் முதுமை எய்தும் காலத்திலும் கோல் ஊன்றாமல் இளமையுடன் நடக்கலாம் என்கிறார்.

சித்தர்கள், உடலைப்பாதுகாக்க, நோய் வராமல் தடுக்க நோய்வந்த பின்னே மருந்தையும், பத்தியத்தையும் அறிந்து ஏற்க அறிவுரையை பகர்ந்துள்ளனர்.

''உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே

உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன்''[49]

என்று திருமூலர் உரைத்துள்ளார்.

**5.23 போகரின் பார்வையில் சமயம்**

பதிணென் சித்தர்களில் ஒருவராகத் திகழ்பவர் போகர். இவர் பழனி தண்டாயுதபாணி சுவாமியை வழிபாடு செய்தவர். காலாங்கி நாதருக்கு முதல் மாணவராக விளங்கிய இவர், சதுரகிரி மலையிலுள்ள காய கற்ப மூலிகைகளால் தேகசித்திப் பெற்று விளங்கினார் என்பார்கள். இவர் பிறநாட்டு மொழிகளும் நன்கு தெரிந்து, வைத்திய வாதயோக ஞானங்களைப் பல நாட்டிலும் பரப்பி பல நாட்டு மொழிகளையும் திரட்டி தமிழில் ஆயிரத்து எழுநூறு (1700) பாடல்களால் ஒரு நிகண்டு செய்தவர்.

வேதாந்தம், சாத்திரங்கள் கொண்டுள்ள சமயமே உண்மை சமயம் எனவும், பொய்யான மற்ற சமயங்களைப் புறம் தள்ளிவிட வேண்டும் என்றும் கண்டிக்கின்றார். இதனை,

''கேளப்பா வேதாந்த சாத்திரமே செம்மை

கேள்வியற்ற சமயமெல்லாம் பொய் என்று தள்ளி'' [50]

என்ற பாடலடிகளால் குறிப்பிடுகிறார். காவி உடை அணிந்தவனே ஞானி என்ற நிலையை மறுத்து, உள்ளத்தில் உண்மை கொண்டு அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் போன்றவற்றை நீக்கியவனே முற்றுந்துறந்த முழுதுறவி என்கிறார்.

ஒன்றே தெய்வம், ஒருவனே தேவன் என்ற கொள்கையின் வாயிலாக மார்க்கங்கள் பலவாயினும் தேடும் பரம்பொருள் ஒன்றே எனத் தெளிந்தவர் போகர் எனலாம்.

### 5.24 சடங்குகளை மறுத்தல்

சமயச் சடங்குகள் செய்பவர்கள் பாழும் நகரத்திலே விழுந்து நொந்து போவர், அவர்கள் மனிதர்கள் அல்ல பாவிகள் என்கிறார் சிவவாக்கியர்

"எத்திசை எங்கும் ஓடி எண்ணிலாத நதிகளில்
சுற்றியும் தலைமுழுகச் சுத்தஞானி ஆவரோ?
பத்தியொடு அரன்பதம் பணிந்திடாத பாவிகாள்
முத்தியின்றிப் பாழ்நரகில் மூழ்க நொந்து அலைவரே" [51]

என்ற பாடலின் மூலம், சமயச் சடங்குகள் பொய்யுடைய மனத்தாரால் பொய்யாகக் கற்பிக்கப்பட்டவை என்பது பெறப்படுகின்றது.

"திரிவார்கள் திருடரப்பா கோடானுகோடி
தேசத்தில் கள்ளரப்பா கோடானுகோடி
வருவார்கள் அப்பனே அனேகம் கோடி
வார்த்தையினால் பசப்புவார்கள் திருடத்தானே" [52]

என்றும்

"வாழாமல் உலகம் விட்டு வேடம் பூண்டு
வயிற்றுக்கோ வாய்ஞானம் பேசிப்பேசி
தாழ்வான குடிதோறும் இரப்பான் மட்டை

தமையறியாச் சண்டாளன் முழுமாடு அப்பா'' [53]

என்று அகத்தியர், சடங்கு செய்து வேடம் புனைவோரை திருடர், கள்ளவர், பசப்புக்காரர், சண்டாளர், மாடு என்று பற்பல சொற்களால் கண்டிக்கின்றார். இத்தகையவற்றை பார்க்கும் போது சித்தர்கள் சடங்குகளை எதிர்த்தவர்களாகவே காணப்படுகின்றனர்.

## 5.25 ஆசைகளை வேரறுத்தல்

மனிதர்களுக்கு ஏற்படும் அனைத்து துன்பத்திற்கு முக்கிய காரணம் ஆசை என்பதாகும். எனவே தான் புத்தர் 'ஆசையே துன்பத்திற்கு அடிப்படை' என்கிறார். சித்தர்கள், முற்றிலும் ஆசையைத் துறந்தவர்கள்.

ஆசை மனிதர்களுக்கு எண்ணிலடங்கா பிறவிகளைக் கொடுக்கும். எனவே, மனிதர்கள் ஆசையைத் தவிர்த்தல் வேண்டும் என்கிறார் குதம்பைச் சித்தர்.

மனிதன் வாழ்வில் மேன்மை அடைய வேண்டுமென்றால், அவனுடைய அக அழுக்கை நீக்க வேண்டும். மனிதன் மேம்படி ஆசையை விட வேண்டும். ஆசை அழிவைத் தரும் என்பது நாம் அறிந்தது, ஆசையை துறந்தால் ஆனந்தம் அடையலாம் என்கிறார் திருமூலர்.

''ஆசையறு மின்கள் ஆசையறு மின்கள்
ஈசனோ டாயினும் ஆசையறு மின்கள்
ஆசைப்படபட ஆய்வரும் துன்பங்கள்
ஆசைவிடவிட ஆனந்தமாமே'' [54]

என்கிறார் சிவவாக்கியர். தனது பாடலில் ஆசைப்படுவதினால் அடையக்கூடிய துன்பத்தினைக் குறிப்பிட்டுள்ளார்.

மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை ஆகியவை மனிதர்களின் நிம்மதியினை அழிக்கும் என்பதை,

"மண்ணாசை பட்டேனை மண்ணுண்டு போட்டதடா

பொன்னாசை பெண்ணாசை போகேனேன் என்குதே" [55]

என்கிறார் பட்டினத்தார்.

## 5.26 சித்தர் பாடல்களில் பழமொழிகள்

சித்தர்கள் தங்களுடைய பாடல்கள் மூலம் பல்வேறுப்பட்ட கருத்துகளை மக்களுக்கு உணர்த்தியுள்ளனர். இவர்கள் மருத்துவம், மந்திரம், இரசவாதம்,யோகம், ஞானம் பற்றியெல்லாம் பாடியுள்ளனர். உலக வழக்குச் சொற்களைக் கொண்டு நாட்டுப்புறப்பாடல் மரபில் பாடுவது இவர்கள் மரபாகும். அவ்வகையில் சித்தர்கள் தம் பாடல்களில் பாமர மக்களிடையே நிலவும் பழமொழிகளைக் கையாண்டு உலக நிலையாமை பற்றியும், இறைவனைப் பற்றியும், ஐம்புலன்களையும் அடக்கி ஆளும் விதம் பற்றியும் பாடியுள்ளனர்.

### 5.26.1 பட்டினத்தார்

வாழ்க்கை நிலையாமை குறித்துப் பட்டினத்தார் திருப்பாடல் திரட்டில் கூறப்பட்ட பழமொழி,

"செத்துக் கிடக்கும் பிணத்தருகே இனி

சாகும்பிணங்கள் கத்துங் கணக்கென்ன? [56]

இறந்து போன பிணத்தின் அருகே உட்கார்ந்து அழுதுக் கொண்டிருக்கும் மனிதர்களைப் பார்த்து, உடல் நிலையாமை குறித்து வலியுறுத்துகிறார்.

### 5.26.2 சிவாக்கியர்

கறந்த பால் ஆவின் மடியில் போய் மீண்டும் சேராது. கடந்த வெண்ணெய் மோரில் மீண்டும் போய் சேர்வதில்லை. உடைந்து போன சங்கில் மீண்டும் ஒசை வராது. பூ உதிர்ந்து விட்டால் அவை மீண்டும் அம்மரத்தில் சென்று ஒட்டிக்

கொள்வதில்லை. அதுபோல இறந்த உயிர் மீண்டும் பிறப்பிதில்லை என்கிறார் சிவவாக்கியர்.

"கறந்த பால் மடி புகாது"

"கடைந்த வெண்ணெய் மோர் புகா"

"விரிந்த பூ உதிர்ந்த காய் மரம் புகா"

என்னும் பழமொழிகளைத் தம் பாடல் மூலமும் விளக்குகிறார்.

"கறந்தபால் முலைப்புகா கடைந்த வெண்ணெய் மோர் புகா
உடைந்து போன சங்கின் ஒசை உயிர்களும் உடற்புகா
விரிந்த பூ உதிர்ந்த காயும் மீண்டும் போய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லை இல்லை இல்லைஇல்லையே" [57]

இப்பாடலில் உலக வாழ்வின் நிலையாமையை உணர்த்துவதாக உள்ளது.

### 5.26.3 கொங்கண நாயனார்

"கையில்லாக் குட்டையன் கட்டிக்கிட்டான்"

"காலில்லா நெட்டையன் முட்டிக்கிட்டான்" [58]

ஞானம் நிறைந்தவர்களும், அஞ்ஞானம் நிறைந்தவர்களும் போட்டியிட்டால் அதில் தோல்வியைத் தழுவியவர்களுக்கு இப்பழமொழிகள் வழங்கப்படுகின்றன.

"தன்வீடிருக்க அசல் வீடு போகாதே"

என்னும் பழமொழியானது, பெண்கள் அடுத்த வீட்டைப் பற்றி புறணி பேசுவார்கள். அதே வேளையில் அவர்களும் நம் வீட்டு விஷயங்களை அலசுவார்கள் என்பதை மறந்து விடுகின்றனர்.

"தன் வீடிருக்கு அசல் வீடு போகாதே
தாயார் தகப்பனை வையாதே
உன்வீட்டுச் குள்ளேயே யுக மிருக்கையில்

ஓடித் திரிகிறாய் வாலைப் பெண்ணே! [59]

என்று பெண்கள் புறம்பேசுவதை குறிப்பால் வெளிக்காட்டுகிறார் கொங்கணர்

**5.26.4 பாம்பாட்டிச் சித்தர்**

''சூரியனைக் கண்ட பனிதூர ஓடல் போல''

இறைவனாகிய சிவனைத் தரிசித்தால் சூரியனைக் கண்ட பனிபோல் அறியாமை விலகி ஒடிவிடும்.

''காந்தம் வலி இரும்பு போல்''

செல்வத்துடன் உண்டான சம்பந்தமானது இரும்பைக் காந்தம் பற்றுதல் போல செல்வத்தை மனித மனம் பற்றிக் கொள்ளும் என்கிறார்.

''காந்தம்வலி யிரும்புபோல் காசில் மனத்தைக்

காட்சியான வஸ்துவுடன் கலக்கச் சேர்த்து…''

என்னும் பாடலடியில் பழமொழி பயின்றுள்ளது.

ஆசையே துன்பத்திற்குக் காரணம். அந்த முட்காட்டை முற்றிலும் அறவே ஒழிக்க வேண்டும் என்பதை

''ஆசையென்னுஞ் செருப்பின்மேல் அடிவைத்தே

ஆங்கார முட்கட்டை அறவே மிதித்தோ'' [60]

என்கிறார்.

பஞ்சசீலங்கள் எனப்படும் ஐந்து வகையான ஒழுக்க நெறியில், கொல்லாமை என்பது முக்கிய இடத்தை வகிக்கிறது. புல்லைக் கொண்டுதான் பூச்சியும், புழுக்களும் வளரும் புழுக்களை அழித்துத்தான் வண்டினங்கள் வாழும். வண்டினங்களை அழித்துத்தான் பறவைகள் வாழும். பறவைகளின் உடல்கள்தான் விலங்களுக்கு உணவாகும். விலங்குகளின் மரணம் தான் மனிதனின் பிரதான

விருந்தாகும். மனிதனின் உடல்தான் புழுக்கள் பிறக்கும் கருவறையாகும் ஒன்றை அழித்து மற்றொன்று வாழ்தல் என்பதே இயற்கையின் நியதியாகிவிட்டது. இதனை உணவுச் சங்கிலி என்று அழைக்கின்றார்கள். ஆனால் திருமந்திரம் கொல்லாமை, புலால் உண்ணாமையை கடுமையாகக் கண்டிக்கிறது.

"கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லிடிக்காரர் வலிக்கயிற்றாற் கட்டிச்
செல்லிடு நில் என்று தீவாய் நரகிடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே" [61]

என்று கொலை செய்பவர்களை திருமூலர் கண்டித்துப் பாடியுள்ளார்.

"பொல்லாப் புலாலை நுகரும் புலயரை
எல்லாரும் காண இமயன் தன் தூதுவர்
செல்லாக பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி முறித்து வைப்பாரே" [62]

புலால் உண்பவர்களை புலையர் என்கிறது திருமந்திரம். புலால் உண்ணுவதன் மூலம் மனிதர்களின் குணமும் மாறிவிடுகின்றது என்ற கருத்தும் நிலவுகிறது. கோபம், பொறாமை, வெறித்தனமாக நடந்து கொள்ளுதல், பொறுமையின்மை, பிறரை வெறுத்தல் என்பன போன்ற தீயகுணங்கள் வந்து விடுகின்றன.

### 5.26.5 இடைக்காட்டுச் சித்தர்

பக்தியில்லாதவர் ஒரு போதும் மேலான கதியாம் சிவகதியை அடையமாட்டார் என்கிறார். அதைக் கூறும்போது,

"அவித்தவித்து முளையாதே தாண்டவக்கோனே"[63]

என்ற பழமொழி மூலம் சிவகதியின் நிலையைப் பற்றி குறிப்பிட்டுள்ளார்.

‘கைவிளக்குக் கொண்டு கடலில்வீழ் வார்போல்’[64]

வாழ வழி இருந்தும் கெடுவார் நிலையைக் குறிக்க, விளக்கைப் பிடித்துக் கொண்டு கிணற்றில் வீழும் செய்தியினை, உவமையாகக் கூறுவர். உடலில் இரண்டற கலந்திருக்கம் இறைவனை வெளியில் தேடுவோர் பற்றி கூறுவதையும் குறிப்பதாக இப்பழமொழி அமைந்துள்ளது.

### 5.27 சடங்குகள், மந்திரங்களைப் பழித்தல்

மக்களை அறியாமை என்னும் இருளில் ஆழ்த்தவே சடங்குகள் தோற்றம் பெற்றன என்பது சித்தர்கள் கருத்தாக உள்ளது. அதனோடு தொடர்புடைய மந்திரங்களையும் சித்தர் இலக்கியம் கண்டிக்கிறது. அதனை,

“பார்ப்பார் சடங்கு பலனின்று பாரிலே
தீர்ப்பாக எண்ணிடுவாய” [65]

குதம்மைபச் சித்தர் பாடலில் பாடியுள்ளார்.

சடங்குகளுக்குத் துணையாகப் பயன்படும் மந்திரங்களால் பயன் ஏதும் இல்லை என்பது சித்தர்கள் கருத்தாக உள்ளது. எனவே மந்திரங்களை பயன்படுத்தி ஏமாற்றுபவர்களை சிவவாக்கியர் தம் பாடலில்,

“மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே
மந்திரங்கள் கற்றுநீர் மரித்தபோது சொல்வீரோ”[66]

என்று மந்திரத்தைக் கண்டித்துப் பாடுகின்றார்.

### 5.28 மக்கள் தொண்டே மகேசன் தொண்டு

“யாவர்க்குமாம் இறைவற்கு ஒருபச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும்போது ஒருகைப்பிடி

யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே'' [67]

உதவி செய்யும் எண்ணம் அனைவருக்கும் இருத்தல் வேண்டும். தன்னுள் குடிகொண்ட இறைவனை ஒவ்வொரு உயிரினுள்ளும் கண்டால் மற்றவர்களைத் துன்பப்படுத்தும் செயலைச் செய்ய மாட்டார்கள். மனமிருந்தால் மார்க்கமுண்டு என்றும் பிறர் மனதைப் புண்படுத்தாமல் பேசுவது கூட ஒருவகையில் தொண்டுதான் என்கிறார். இறைவனுக்குச் செய்யப்படும் படையலைவிட, அவரின் தொண்டர்களுக்குச் செய்யும் உதவிதான் இறைவனைச் சென்றடையும் வழி என்பதையே 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்கிறார்.

தானம் தருமம் எல்லாம் இல்லாதவர்க்கு அளிக்க வேண்டும். இதனைத் தவிர்த்து, சில செல்வந்தவர்கள் கோவிலுக்கு அள்ளிக் கொடுக்கின்றனர். இறைவனுக்கு கொடுக்கும் பொருள் மனிதர்களைச் சென்றடைவதில்லை. ஆனால் மனிதனுக்குக் கொடுக்கும் பொருள் இறைவனைச் சென்றடைகிறது என்கிறார் திருமூலர்.

சித்தர்கள், உணவு கடைப்பிடிக்கும் முறையிலும் தங்கள் உடலைக் காக்கும் வழியையும் உணர்ந்திருந்தனர். யோகியர், சித்தர்கள் ஒரு வேளை உணவை மட்டுமே உண்டனர். அதனால் நீடித்த வாழ்க்கையைப் பெற்றனர்.

''ஒரு பொழு துண்பானே லுகியொரு நாளில்
இரு பொழு துண்பான்நன் றாகி-வருபொழுது
முப்பொழுது துண்பானேல் ரோகியாம் நாற்பொழுது
உண்பவன் சாகி கடிது'' [68]

### 5.29 சித்தர்களின் மறைமொழி

சித்தர்கள் தாங்கள் கூற வேண்டிய கருத்துகளை மறைமொழிகள் மூலமும் உணர்த்தியுள்ளனர். அத்தகைய மறைமொழிகளை சித்த மருத்துவத்தில்

பயன்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். சித்த மருத்துவத்தில் காணப்படும் மறை மொழிக் கூற்று இரு வகையில் அமைந்துள்ளது.

அ. ஆக்கச் சொற்களால் உருவானவை.

ஆ. குழூஉக் குறிச் சொற்களால் உருவானவை.

ஆக்கச் சொற்கள்

''தாம் கருதிய பொருளை மறைத்து அப்பொருளைப் பிற வகையால் உணர்த்துவது ஆக்கச் சொற்களால் அமையும் மறைமொழியாகும்.''

'முசுமுசுக்கையை', இரு குரங்கின் கை என்பது.

இது பிறிது பொருள் பற்றி வந்த ஆக்கச் சொல் மறைமொழி.

''தீ நாற்றமுடன் பரவும் இறுகிய சளியைப் போக்க, இரு குரங்கின் கையை அரைத்து உண்க" என்று குறிப்பிடும் சித்த மருத்துவப் பாடலில் மேற்போக்கான பொருளுக்கேற்ப இரண்டு குரங்குகளைக் கொன்று அதன் கைகளைச் சமைத்து உண்ண முயற்சி செய்தால், அது கடுவினையாகத்தான் முடியும். மருத்துவம் பயில வந்தவர் முயற்சியும், ஆர்வமும், உழைப்பும் உடையவராயிருப்பின், ''இருகுரங்கின் கை'' என்னும் தொடருக்குரிய பொருளை அறிய முற்படுவார். அவ்வாறு முற்பட்டால் மறைந்திருக்கும் மூலிகையின் பெயர் புலனாகும்.

தமிழில் ''குரங்கை'' ''முசு'' என்று சொல்லால் குறிப்பிடுவர். ''இரு குரங்கு'' என்பது ''முசு முசு'' எனவரும். இரு குரங்கின் கை ''முசுமுசுக்கை'' எனத் தெளிவுறும்.

''முசுமுசுக்கை'' எனும் பச்சிலையை அரைத்து உண்ண, இறுகிய சளி வெளியேறும் என்பது இதன் கருத்தாகும். நேரடியாக உண்மையை கூறாமல்

மறைமுகமாக கூறுவதால் தான் மக்கள் அந்த உண்மையை மனதில் நிலைநிறுத்திக் கொள்வார்கள் என்று சித்தர்கள் அவ்வாறு மறைமொழியை பின்பற்றியுள்ளனர். அவர்கள் அவ்வாறு கூறுவதற்கு தமிழ் மொழியில் நூற்றுக்கணாக்கன தமிழ்ச் சொற்கள் காணப்பட்டதே சிறப்பாகும். எனவே தான் சித்தர்கள் மறைமொழியை கையாண்டுள்ளனர். இவையே பிற்காலத்தவரல் பரிபாஷை என்று குறிக்கப்படலாயிற்று.

‘வாழை’யைத் ‘தாயை’க் கொன்றான்’ எனக் குறிப்பது – இது பண்பு வகையால் வந்த ஆக்கச் சொல் மறைமொழி.

‘உத்தாமணியை’ ‘வேலிப்பருத்தி’ எனல் – இது இயல்பு பற்றி வந்தது. (உத்தாமணியின் காய் பருத்திப் பஞ்சுபோல் வெடித்துக் காற்றில் பறக்கும். வேலியோரங்களில் படர்வது இயல்பு.)

கள்ளியைத் திருடி எனல் – பிறபொருள் வகையால் வந்த ஆக்கச் சொல் மறைமொழியாயிற்று.

‘மிளகு’ என்பதை ‘குளமி’ என்பதும் – இது எழுத்துக்களை மாற்றி அமைத்தலால் வந்தது. இவ்வாறு எழுத்துமாறி அமையும் ஆக்கச் சொல் மறைமொழிகளை, முகம் பார்க்கும் கண்ணாடியால் காட்டிப் படித்தும் பொருள் கொள்ளும் அளவில் உள்ளது.

“ஆணைக் கன்றில் ஒரு பிடியும் அரையன் விரோதி இளம்பிஞ்சும்
கானக்குதிரை புறத்தோலும் காளிற்பொடியை மாற்றினது
தாயைக் கொன்றான் சாறிட்டு தயவாயறைத்து கொள்ளீரேல்
மானைப் பொறுதும் விழியளே! வடுகும் தமிழும் குணமாமே!”(தேரையர்.)

எனவரும் தேரையர் பாடலில் வயிற்றில் ஏற்படும் பேதம் காரணமாக வரும் பேதியைக் குணப்படுத்தும் மருத்துவ முறை அடங்கியுள்ளது.

ஆனை – அத்தி மரத்தின் மற்றொரு பெயர். கன்று – பிஞ்சு

ஆணைக் கன்றின் ஒருபிடி என்பது, அத்திப்பிஞ்சின் ஒரு பிடி எனவரும்

அரையன் – அரசன் என்பதன் போலி ‘கோ’

விரோதி – வைரி என்னும் சொல்லின் சுருக்கம் ‘வை’ என வரும்.

அரையன் விரோதி – இளம்பிஞ்சு – கோவை, கோவைக் கொடியின் இளம்பிஞ்சு

கானக்குதிரை – மாமரத்தை குறிக்கும் குழூஉக்குறி

காலில் பொடியை மாற்றினது – செருப்படை என்னும் மூலிகை

தாயைக் கொன்றான் சாறு – வாழைப் பட்டையின் சாறு

வடுகு – வடுகர் என்பது தெலுங்கு மொழி பேசுபவரைக் குறிக்கும்.

வடுகும் – தமிழும், தெலுங்கும் பேதம் உடையன

வடுகும் தமிழும் குணமாமே என்பது வயிற்றில் பேதம் காரணமாக வரும் பேதி குணமாகும் என்று பொருள்படும். இம்மொழி விளக்கங்களைக் கொண்டு அப்பாடலை மீண்டும் படித்தால்,

அத்திப்பிஞ்சு – ஒருபிடி

கோவைப் பிஞ்சு ஒருபிடி

மாமரப்பட்டை, செருப்படை ஆகியன ஒருபிடி எடுத்துப் போடி செய்து வாழைப்பட்டைச் சாறிட்டு அரைத்து அளவுடன் உட்புகட்ட, பேதமுற்ற வயிற்றில் ஏற்பட்ட பேதி குணமாகும் என்று பொருள் கொள்ளலாம். இவ்வாறாக ஆக்கச் சொற்களாலும், குழூஉக் குறிகளாலும் அமையும். எண்ணற்ற மருத்துவ

பாடல்களை பொருள் கொண்டுப் பார்த்தால் மறைமொழி மறைந்து மருத்துவப் பொருள் தெளிவுறும் என்பதாம்.

## 5.30 மருத்துவக் கோட்பாடு

அறிவாராய்ச்சிகள் பெருகி அதன் காரணமாக நோய், மருந்து பற்றிய செய்திகள் மறுமலர்ச்சி அடைந்து வரும் இக்காலத்தில் நோய் பற்றிய கோட்பாடுகள் முற்றிலும் பகுத்தறிவிற்கு உடன்பட்டே காணப்படுகின்றது. நெடுங்காலமாக நோய் பற்றிய கோட்பாடுகள் பல்வேறு மருத்துவ முறைகளிலும் பெரும்பாலும் குழப்பமாகவே கூறப்பட்டுள்ளன. உணவு மற்றும் பழக்கவழக்கங்களில் ஏற்படும் மாறுதல்களே நோய்கள் தோன்றுவதற்கு காரணமாகின்றன. அண்மையில், கொடிய நோயான புற்றுநோய் தோன்றுதற்குத் தவறான உணவு முறையே காரணம் என்று அமெரிக்க மருத்துவ வல்லுநர் ஒருவர் குறிப்பிட்டுள்ளார். திருவள்ளுவர், நோய் தோன்றுவதற்குரிய மூலகாரணமாக 'உணவுநெறி' யைக் குறிப்பிடுகின்றார்.

சித்த மருத்துவக் கோட்பாட்டின்படி

வாதம்

பித்தம்

சிலேத்துமம்

என்பவை முப்பெரும் உயிர்த் தாதுக்களாகும். இம்மூன்றும் உடலின் வளர் சிதை மாற்றங்களை இயக்குபவையாகும். மூன்று உயிர்த் தாதுக்களும் அளவோடு தொழிற்படும் போது கண்ணறைகளும் பிற தாதுக்களும் பழுதின்றி இயங்கும். பழுதின்றி இவை இயங்கினால் தான் உடல் நன்னிலையில் இருக்கும். மாறாக மூன்று தாதுக்களும் தம்மளவில் மாறிச் செயல்படும் போது பிற தாதுக்களின் செயலும் பாதிக்கப்படும். உடலை இயக்கும் இவற்றின் உட் சூழல் மாறுகின்றது.

பழுதடைந்த இச்சூழ்நிலையே 'நோய்' எனப்படும். இந்நிலையை மீண்டும் சமநிலைக்குக் கொண்டு வருவதே, 'மருந்து' எனப்படும். மூன்று தாதுக்களில் ஏற்படும் மாறுதலே நோய்க்குக் காரணம் எனும் கோட்பாட்டினை 2000 ஆண்டுகட்கு முன்னரே தமிழக மருத்துவர்கள் அறிந்திருந்தனர் என்பதைத் திருவள்ளுவரின்,

"மிகினும் குறையினும் நோய்செயும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று"[69]

என்னும் குறட்பா மூலம் அறியலாம்.

சித்த மருத்துவத்தின் இந்தக் கோட்பாட்டினை இன்றைய மேனாட்டு மருத்துவ முறையிலும் காணலாம். தற்கால மருத்துவர்கள் உடலின் தாதுப் பொருட்களைப் பல்வேறு வகைகளாகப் பிரித்துள்ளனர். இவைகள் இருக்க வேண்டிய அளவினின்று குறைந்தாலும், மிகுந்தாலும், (நுஒஉநளள ழச னுநகஉைநைஉெல) நோய் தோன்றும் என்று கருதுகின்றார்கள்.

**5.31 இறப்பை வெல்லுதல்**

"சாவா திருநத்திடப் பால்கற - சிரம்
தன்னில் இருந்திடும் பால்கற
வேவாது இருந்திடும் பால்கற – வேறு
வெட்ட வெளிக்குள்ளே பால்கற நீசாகாதிருக்க" [69]

இறப்பு என்பது இறைவனால் அனுமதிக்கப்பட்ட ஒன்றாகும். அதனை வெல்லுவதற்குரிய வழியை தம் பாடல் வழி எடுத்துரைக்கிறார். சாகாக் கல்வியை கற்றுக் கொண்டு நாத விந்தாகிய பாலை நெற்றிக்கு நேரே கொண்டு வந்தால் ஜோதியைக் காணலாம். இதனால் இறப்பு என்பது வராது என்று உரைக்கிறார். பால்கற என்பதன் பொருள் தவம் செய் என்பதாகும்.

### 5.32 மண்ணின் பொக்கிஷங்கள்

மண்ணுக்குள்ளே தங்கம் புதைந்து கிடக்கிறது. சிப்பிக்குள்ளே முத்து உள்ளது. மலைகளில் வைரங்கள் மறைந்து கிடக்கின்றன. ஆனால் நம் கண்களின் பார்வைக்கு தங்கம் இருக்கும் இடம் மண்தரையைப் போல் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது. முத்துக்களைத் தன்னிடம் அடக்கியுள்ள சிப்பி சாதாரண ஓர் ஓடு போல் காட்சியளிக்கிறது.

வைரங்களைத் தன்னகத்தே கொண்ட மலைகள் வெறும் கற்களும், மரங்களும் உடையனவாகத் தோன்றுகின்றன. மண்ணைத் தோண்டி உள்ளே சென்றால் தான் தங்கத்தைப் பெற முடியும், கடுமையான ஆராய்ச்சி கலந்த முயற்சியின் மூலமே மலைகளில் மறைந்து கிடக்கும் வைரங்களைப் பெற முடியும். அதே போல் சித்தர்கள் அருளியுள்ள பாடல்களின் உட்கருத்தை மிக எளிமையாக புரிந்து கொண்டால்தான் அதன் பயனை நாம் அடைய முடியும்.

‘‘சித்தர்களுக்கென்று சில மரபுவழி நம்பிக்கைகள் இருந்தபோதிலும், அவர்கள் அனைவருமே சமுதாயம் உய்ய வேண்டும் என்ற சிந்தனை கொண்டவர்களாகவே இருந்துள்ளனர். அதன் பொருட்டுத் தான் சமுதாய சிக்கல்களின் காரணிகளாக விளங்கும் கடவுள், சாதி, சமயம், சடங்கு, வேதம், போலித்துறவு முதலியன பற்றிய தம் கருத்துகளைப் பாடல்களின் வழிவெளிப்படுத்தியுள்ளனர்.

‘‘சாதி பேதமில்லை
தானாகி நின்றவாக்கே’’[70]

என்று சாதியை மறுக்கும் இச்சித்தர், மந்திரம், தந்திரம், பூசை, சமயம் ஆகியவற்றையும் மறுத்தவராகவே காணப்படுகிறார்.

‘‘காணப்பா சாதிகுலம் எங்கட்கில்லை
கருத்துடனே என்குலஞ்சுக் கிலந்தன் மைந்தா

தோணப்பா தோணாமற் சாதி பேதஞ்

சொல்லுவான் சுருக்கமாகச் சுருண்டு போவான்''[71]

என்று காகபுசுண்டர் என்ற சித்தரும் சாதி மறுப்பாளராகவே காணப்படுகின்றார்.

**5.33 சிவவாக்கியர்**

பதினென் சித்தர்கள் பட்டியலில் எவற்றிலுமே இவர் பெயர் இடம் பெறவில்லை. திருமூலரின் பெயர் தொடங்கி மிகவும் பிற்காலத்தவரான 'யாக்கோபு' வரை சித்தர்கள் பட்டியலில் இடம் பெற்றிருக்கையில் சிவவாக்கியரின் பெயர் இடம் பெறாதது விந்தையாக உள்ளது. இவருடைய பாடல்களில் வைதீக சமய நெறிகளை மிகக் கடுமையாக கண்டித்துள்ளதின் பொருட்டும், இவர் இல்லறத்தில் ஈடுபட்டவராய் இருந்ததாலும் இவர் பெயர் பதினென் சித்தர் கூட்டத்தில் இடம் பெறாமல் விடுபட்டதோ என்றும் கருதிடத் தோன்றுகிறது.

சிவவாக்கியர் தன் காலத்தில் மட்டுமின்றி இக்காலத்திற்கும் பொருந்தும் பல புதுமைக் கருத்துகளை, புரட்சிக் கருத்துகளைப் பாடியவராகவே இச்சித்தர் காட்சியளிக்கின்றார்.

ஒன்பது தந்திரங்களையும் அவை உள்ளிட்ட மூவாயிரம் பாடல்களையும் சுந்தரன் ஆகமமாக மொழிந்தான் என்பது இப்பாடலின் பொருளாக உள்ளது. இவ்வடிகளைக் கொண்டு திருமூலரின் இயற்பெயர் சுந்தரநாதன் என்று குறிப்பிடப்படுகிறது.

**5.34 மனிதனின் வாழ்நாட்கள்**

''ஒப்பில் எழுகோடி யுகம் இருந்தேனே''

''இருந்தேன் இக் காயத்தே எண்ணிலிகோடி''[72]

மனிதனின் சராசரி ஆயுட்காலம் என்பது 60 ஆண்டுகளை மட்டும் தான் குறிப்பதாக உள்ளது. ஆனால் திருமூலரோ, தான் எழு கோடி யுகம் வாழ்ந்ததாக

குறிப்பிடுகின்றார். ‘உடம்பை வளர்த்தேன் உயிரை வளர்த்தேனே’ என்ற கருத்தினை வலியுறுத்தவே, யுகம் பல வாழ்ந்த நிலையை உணர்த்துகிறார். உடம்பை குறிப்பிட்ட முறையில் வரையறையோடு பேணி பாதுகாத்தால் நீண்ட ஆயுளைப் பெறலாம் என்பதனை உணர்த்துகிறார்.

“திருமூலர் ‘எண்ணிலிகோடி’ எனவும் ‘ஏழு கோடி யுகம்’ எனவும் ‘பல ஊழி’ எனவும் கூறியதை, அவ்வாறு குறிப்பது மிகையாகும் எனக் கருதி சேக்கிழார் மூவாயிரம் பாடல் காணப்படுதலின் ஆண்டுக்கு ஒன்று எனக் கருதி மூவாயிரம் ஆண்டுகள் எனக் குறிப்பிட்டிருக்கலாம்.

“சுந்தர ஆகமம் சொன்மொழிந் தானே”[73]

“மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்”[74]

என்று திருமூலர் மூவாயிரம் பாடல்கள் பாடியுள்ளார்.

### 5.35 திருமூலரின் தமிழ்ப் புலமை

“யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவது எங்கும் காணோம்” என்று பாரதியார் முதல் பல புலவர்கள், கவிஞர்கள் என எல்லோரும் போற்றியுள்ளனர். அவ்வாறான செம்மை நிறைந்த தமிழ்மொழியை திருமூலரும் போற்றிப் பாடியுள்ளார்.

“என்னை நன்றாக இறைவன் படைத்தனன்

தன்னை நன்றாக தமிழ்செய்யு மாறே”[75]

என்று தமிழ் மொழியைப் பாடும் அருள் கிட்டியதன் தன்மையை உணர்த்துவதாக இப்பாடல் அமைகின்றது. இறைவன் தன்னை படைத்தது என்பது தமிழ் மொழியின் பெருமையை உலகிற்கு பறைசாற்ற தனக்கு கிடைத்த வாய்ப்பை எண்ணி பெருமையடைகின்றார்.

### 5.35.1 திருமூலரின் மருத்துவத் தொண்டு

சித்தர்கள் மருத்துவத் துறைக்கு ஆற்றிய தொண்டுகள் என்பது மிகவும் அற்புதமானது. இதில் திருமூலரது தொண்டும் குறிப்பிடத்தக்க வகையில் அமைந்துள்ளது என்றே கூறலாம். நோய் என்பது உணவு, வெப்பம், காலமாற்றம், மன இறுக்கம், தூக்கமின்மை, கடுமையான உழைப்பு என்பன போன்ற பல்வேறு காரணங்களைக் குறிப்பிடலாம். ஆனால் திருமூலர், அறம் செய்யாமல் இருந்தாலும் நோய் ஏற்படும் என்று தனது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

“இருமலும் சோகையும் ஈளையும் வெப்பும்
தருமஞ்செய் யாதவர் தம்பால தாகும்
உருமிடி நாக முரோணி கழலை
தருமஞ்செய் வார்பக்கல் தாழகி லாவே”[76]

அறம் செய்யாதவர்களுக்கு இருமல், சோகை, கோழை, கபம் முதலிய நோய்கள் வரும் என்கிறார். அறம் செய்பவருக்கு இத்தகைய நோய்கள் எதுவும் அணுகாது என்று வலியுறுத்துகிறார். மேலும் கொடிய நோய்கள் என்று சொல்லக்கூடிய அனைத்தும் அறம் செய்பவரை தீண்டாது என்று உறுதியளிக்கிறார்.

குழந்தையானது கருத்தரிக்கும் அத்தகு நொடியிலேயே அக்குழந்தையின் ஆயுளானது தீர்மானிக்கப்படுகிறது என்று திருமூலர் தனது திருமந்திரத்தில் குறிப்பிட்டிருப்பது வியப்பை ஏற்படுத்தக்கூடியதாக உள்ளது. தாயின் கருப்பைக்குள் உயிர்த்துளியானது சேர்ந்த அந்நேரத்தில் தாய்தந்தையர்களுக்கு 5 மாத்திரை அளவு பிராண வாயு ஓடினால் பிறக்கிற குழந்தைக்கு ஆயுள் 100 என்றும், 4 மாத்திரை அளவு ஓடினால் குழந்தைக்கு ஆயுள் 80 என்றும் குறிப்பிட்டுள்ளார். ஒரு யோகியால் மட்டுமே இத்தகு நிலையை செயல்படுத்த முடியும் என்கிறார். பிராணன் எனப்படும் மூச்சு காற்றானது. 4 மாத்திரை அளவுக்கும் குறைந்து

காணப்பட்டால் குழந்தை குட்டையாகும் எனவும், பிராணன் இளைத்தால் முடமாகும் எனவும், வாயு ஒடும்போது இடையூறு தடைப்பட்டால் கூனாக பிறக்கும் என்று கணித்துள்ளார்.

மேலும் கருத்தரிக்கும் காலத்தில் பெண்ணின் வயிற்றில் மலம் மிகுதியாக இருக்குமானால் குழந்தை மந்தமாகும், மேலும் ஜலம் மிகுமானால் ஊமையாகும் என்று குறிப்பிட்டுள்ளார். இவை இரண்டும் சமமாக இருந்தால் குருடனாகும் என்பது நிர்ணயிக்கப்பட்ட ஒன்றாக உள்ளது என்று தனது திருமந்திரத்தின் இரண்டாம் தந்திரத்தில் கருவுற்பத்தி என்ற பகுதியில் குறிப்பிட்டுள்ளார். தற்காலத்தில் உள்ள பல்வேறு வகையான தொழில்நுட்ப மற்றும் அறிவியல் வளர்ச்சியின் மூலம் கண்டறிந்த உண்மையை பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே திருமூலர் தம் பாடல்களின் மூலம் அரிய பல தகவல்களை அற்புதமாக அளித்துள்ளார்.

இது தமது ஏழாம் தந்திரத்தில் விந்துஜயம் என்ற பிரிவில், பஞ்சபூதங்களும் உடலில் எந்த எந்தப் பகுதியில் எனக் காட்டுகின்றார்.

| | | |
|---|---|---|
| பாதம் | - | மண் |
| பாதம் முதல் கொப்பூழ் வரை | - | நீர் |
| கொப்பூழ் முதல் மார்பு வரை | - | அனல் |
| மார்பு முதல் தோள் வரை | - | காற்று |
| கழுத்துக்கு மேல் | - | ஆகாயம் |

என்று ஐம்பூதங்களும் உடலோடு கொண்டுள்ள தொடர்பை அழகாக கூறியுள்ளார். உலகம் என்பது ஐம்பூதங்களால் படைக்கப்பட்டது எனின், மனித உடலும் அதனோடு தொடர்புடையதாகவே விளங்குகிறது.

இறைவனைக் கோயில் கோயிலாக சென்று வணங்குவதைக் கண்டிக்கிறார். இறைவன் ஒவ்வொரு உயிரின் ஆன்மாவிலும் கலந்திருப்பதை உணர வேண்டும் என்கிறார்.

"முகத்திற்கு கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்

அக்ததிற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்" [77]

என்ற இவ்வரிகள் மூலம் இறைவனை புறக்கண்கொண்டு தேடித் தேடிப் பார்க்கும் மூடர்களே என்று கண்டித்து, அகமாகிய மனத்தின் மூலம் கண்டு உணருகின்ற ஆனந்த நிலையை அனைவரும் அனுபவிக்க வேண்டும் என்கிறார். இறைவன், மனித உள்ளத்தை கோயிலாகக் கொண்டு குடியிருப்பவன், எனவே, அனைத்து உயிரும் இறைவன் கோயிலாக இருக்குமானால், அனைத்தும் ஒன்றே என்றும், உயர்வு, தாழ்வு என்ற வேறுபாடு இல்லாத நிலையை உருவாக்க இயலும் என்கிறார். பல்வேறுபட்ட சமயங்கள் மனிதர்களை பிரிவினைகளுக்குள் தள்ளி விடுகிறது. எனவே இத்தகைய நிலையை மாற்றுவதற்காகவே, அனைத்து உயிரும் இறைவன் கோயிலாக இருப்பதனால் அனைத்தும் ஒன்றே என்பதை வலியுறுத்தி, உயர்வு, தாழ்வு வேறுபாடு காட்டலாகாது என்கிறார்.

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்

நன்றே நினைமின்" [78]

என்ற இப்பாடல் மூலம் ஒற்றுமையை வலியுறுத்தி சமய வேற்றுமையை களைந்து எடுக்கிறார்.

திருமூலரது பாடல்கள் அனைத்தும் இறைவனையும் அவன் குடிகொண்ட கோயில்களைப் பற்றியுமே அல்லாமல் இறைமையையும், சமுதாயத்தினைப் பற்றியும் பாடுவனவாக உள்ளது.

"மூலன் உரைசெய்த முப்ப துபதேசம்

மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரைசெய்த மூவாயிரந் தமிழ்
மூலன் உரைசெய்த மூன்றுமொன் றாமே'' [79]

திருமூலர் பாடிய உபதேசம் முப்பது, மந்திரம், முந்நூறு, தமிழ் மூவாயிரம் என்று கூறுமாறு அமைந்துள்ள பாடல் வரிகளாக உள்ளன.

மனித சமுதாயத்தைப் பிரிக்கின்ற சமயங்களையும், சாத்திரங்களையும் அவற்றிற்கு காரணமாக இருக்கும் உருவ வழிபாட்டையும் தடுத்து,'அன்பே இறை' என்ற நிலையை வலியுறுத்துகிறார். ஆசை, பொறாமை முதலியன நீக்க வேண்டியன. ஈகை, அருள் முதலியன கைக்கொள்ள வேண்டியன என்று அவர் சுட்டிக்காட்டுவதிலிருந்து அவர் அக்காலத்தில் சமுதாயச் சீர்த்திருத்தத்தை கொண்டு வந்ததை உணர முடிகின்றது.

### 5.36 சித்தர்களின் கொள்கைகள்

சித்தர்கள் தங்களுக்கென்று கொள்கைகளை வகுத்திருந்தனர். இவர்கள் கடவுளை வெறுக்கும் நாத்திகர்களாக காணப்படவில்லை. படைத்தல், காத்தல், அழித்தல் என்று மூன்று வினைகளைச் செய்யும் கடவுளர்கள் தனித்தனியே இருக்கின்றனர் என்பது புராணக் கொள்கையாக உள்ளது. தெய்வம் ஒன்றே என்று நம்பும் மத நம்பிக்கையுள்ளவர்கள் ஒரே கடவுள்தான் இம்மூன்று தொழில்களையும் செய்து வருவதாகக் கூறுகின்றனர். சித்தர்களின் கொள்கை இதற்கு மாறானதாக விளங்குகின்றது. உலகில் உள்ள ஆண் பெண்கள்தான் உலகைப் படைப்பவர்கள், காப்பவர்கள், அழிப்பவர்கள், ஆண், பெண் கூட்டுறவால்தான் முத்தொழில்களும் நடைபெறுகின்றன. உலகத்துக்கு மூலகாரணம் சிவசக்தி சிவம் என்பது ஆண், சக்தி என்பது பெண், இத்தகு உண்மையை உணர்த்தவே சிவலிங்கங்கள் தோன்றின என்கிறார்கள். இது சித்தர்களின் கொள்கையாக விளங்குகின்றது.

### 5.37 யோகப் பயிற்சி

- மக்கள் அனைவரும் ஒழுக்கம் தவறாமல் வாழ வேண்டும் என்று சித்தர்கள் வலியுறுத்துகின்றனர்.
- பொய், சூது, கொலை, குடி, விபச்சாரம் முதலியவற்றை வன்மையாகக் கண்டிருத்திருக்கின்றனர்.
- கூடா ஒழுக்கம் உடல் நோயை உண்டாக்கும் யோகப் பயிற்சியை மேற்கொண்டு அதில் வெற்றி பெற்றவர்கள் கூடா ஒழுக்கத்தை மேற்கொள்ளாமல் இருந்தனர்.

யோகப் பயிற்சியின் அவசியத்தை சித்தர்கள், மனிதர்களுக்கு வலியுறுத்திக் கூறுகின்றனர். இப்பயிற்சியானது, மக்கள் நோயின்றி நல்வாழ்வு வாழ்வதற்கும், கவலையின்றி ஆனந்தத்துடன் வாழ்வதற்கும், நரை, திரை, மூப்பு, பிணியின்றி வாழ்வதற்கும் உறுதுணையாகின்றது என்கின்றனர்.

### 5.38 கானல்நீர் மயக்கம்

கோடைக் காலத்தில் அதிகமான வெப்பத்தின் காரணமாக, தொலைவில் நீர் போன்று காணப்படும் கானல் நீரை, அருந்தும் நீர் என்று கருதி, மான் அந்த நீரை உண்பதற்காக அதன்பின் ஓடி இளைக்கும். நீர் கிடைக்காமல் வருந்தி தவிக்கும் அது போன்று, மனிதர்கள் இவ்வுலக வாழ்வை இன்பந்தருவது என்று மூடர்கள் கண்டு மயங்கி களிப்பார்கள். அவர்களின் இன்பமானது மான் தேடிச் செல்லும் கானல் நீர் போன்றது என்பதை குறிக்கின்றது. உயர்ந்த நிலையை அறிந்தவர்கள், அழியாத இன்பந்தரும் இறைவனின் நிலையை உணர்ந்தவர்களாகிறார்கள். எனவே இறைவனது பாதத்தைத் தேடிச் செல்பவர்கள் நிரந்தரமான இன்பத்தைப் பெற்றிருப்பார்கள் என்பதை பாம்பே! நீ படம் விரித்து ஆடுக! என்றவாறு பாம்பாட்டிச் சித்தர் குறிப்பிடுகின்றார்.

"கானலை மான் நீர்எனவே கண்டுசெல்லல் போல்
காசினவாழ் வினைமூடர் கண்டு களிப்பர்
மேல் நிலைகண் டார்கள் வீணாய் வம்பு பேசிடார்
மெய்யன்பதம் நாடுவார் என்று ஆடாய் பாம்பே" [80]

### 5.39 புரட்சிகரமான சிந்தனை

பாம்பாட்டிச் சித்தர், உருவ சிலையை வணங்குவதன் மூலம் எத்தகைய பயனும் ஏற்படப் போவதில்லை என்றும், உளியிட்டுச் செய்த கருங்கற் சிலையிலே உயிரும், உணர்ச்சியும் உண்டாகாது என்றும், சிலைகளை வணங்குவதால் மக்களின் அறியாமை மாறப் போவதில்லை என்பதை உணர்ந்து ஆடுவாயாக! பாம்பே என்று சிலையை வணங்குவோரை மூடர்கள் என்று வன்மையாகக் கண்டிக்கிறார்.

"உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி?
உலகத்தின் மூடர்களுக்கு உண்டோ உணர்ச்சி?
புளியிட்ட செம்பில்குற்றப் போமோ, அஞ்ஞானம்
போகாது மூடர்க்கென்று ஆடாய் பாம்பே!" [81]

மனித சமூகத்தில் சாதி, சமயம் என்பது வேரூன்றி மக்களுக்குள் பிரிவினையை உண்டாக்கிய நிலையைக் கண்டு சித்தர்கள் அவற்றை கடுமையாகக் கண்டித்தனர். சமய வேற்றுமையும், சாதி வேற்றுமையும் பாராட்டுவோர், சமயவெறி கொண்டவர்களே ஆவார்கள். உண்மை நெறி உணர்ந்த ஞானிகளுக்கு சமய பேதமோ, சாதி பேதமோ என்பதாம்.

"சாதிப் பிரிவினிலே தீமூட்டு வோம்!
சந்தை வெளியினில் கோல்நாட்டு வோம்"[82]

சாதிப்பிரிவு என்கின்ற குப்பை மேட்டைத் தீமூட்டி எரித்து சாம்பலாக்கி விடுவோம்! பலரும் கூடும் சந்தை வெளியில் அதாவது பொது மக்கள் கூடுகின்ற இடத்தில் சாதிப் பிரிவால் நடைபெற்ற கொடுங்கோன்மை ஒழிந்தது என்று சொல்லிச் சமரசம் என்னும் செங்கோல் நிலைநாட்டுவோம்! என்கிறார் சிவவாக்கியார். பாம்பாட்டிச் சித்தர் போன்றே இவரும் உருவ வழிபாட்டைக் கண்டித்துப் பாடல்கள் பாடியுள்ளார்.

### 5.40 இடைக்காட்டுச் சித்தர்

மனம் என்ற சொல்லை மன்னுதல் என்று சொல்லிலிருந்து பிறந்த தமிழ்ச் சொல்லாகக் கூறுவர். மன்னுதல் என்றால் பொருந்துதல் என்று பொருள்படுகிறது. எந்தப் பொருளை பார்த்தாலும் அதன்மேல் சென்று படிதல் என்பது, மனத்தில் இயல்பாக உள்ளது. அத்தகைய இயல்புடைய மனத்தை அடக்கி ஆளுகின்றவன் அறிவுள்ளவன் ஆவான். எனவே மனத்தை அடக்கி ஆள வேண்டும் எனத் தம் பாடலின் மூலம் எடுத்துரைக்கிறார்.

“மனம் என்னும் மாடு அடங்கின்
தாண்டவக் கோனே ! – முத்தி
வாய்த்ததென்று எண்ணேடா
தாண்டவக் கோனே!”[83]

மனம் என்பது கட்டுக்கடங்காத ஒரு முரட்டு மாடு. அது நமது கட்டுக்குள் அடங்குமானால் விடுதலைக் கிடைத்துவிட்டது எனலாம் என்று தாண்டவக்கோன் என்பவனைப் பார்த்து இடைக்காட்டுச் சித்தர் பாடியிருக்கின்றார்.

எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் கடவுள் எல்லா இடத்திலும் இருக்கிறார் என்று கூறுவதை அறியாமை என்கிறார். கடவுள் உள்ளத்திலேயே இருக்கிறார் என்கிறார். சித்தர்கள், இறைவனை மறுத்துப் பேசவில்லை. அதற்கு மாறாக

இறைவன் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் இருக்கிறார் என்று இடைக்காட்டுச் சித்தர் உரைக்கின்றார்.

அகப்பேய்ச் சித்தரின் சாதிய நிலை

"சாதி போம் இல்லை – அகப்பேய்!
தானாக நின்றவர்க்கு
ஓதி உணர்ந்தாலும் - அகப்பேய்!
ஒன்றுதான் இல்லையடி!"[84]

என்ற இப்பாடல் மூலம் அகப்பேய்ச் சித்தர், தீமை செய்யாமல் அறநெறியால் நின்று வாழ்வோர் மக்களுள் வேற்றுமைப் பாராட்ட மாட்டார்கள். உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி என்ற பிரிவினையை மதிக்க மாட்டார்கள். மக்கள் அனைவரையும் ஒரே சாதியென்று தான் நினைப்பார்கள் என்கின்றார்.

இறைவனை பல இடங்களில் தேடி அலைந்து திரிவதைவிட, நமக்குள்ளே உறைந்திருக்கும் தன்மையை, அனைவரும் உணர வேண்டும் என்கிறார். மேலும் நீருடன் உப்புக் காத்திருப்பது போல, உன்னுடனேயே இறைவன் இருக்கின்றான். இதனை ஆராய்ந்து உணர்ந்து ஆனந்தமாக வாழ்தல் வேண்டுமென உரைக்கின்றார்.

### 5.41 கடுவெளிச் சித்தர்

நினைத்தவற்றையெல்லாம் கொடுக்கும் அந்த ஞான வள்ளலாகிய இறைவனை உள்ளத்திலே கண்டு வாழ்த்தி கொண்டாடுவாயாக! என்று கடுவெளிச் சித்தர் உபதேசம் செய்கிறார்.

### 5.42 கொங்கணச் சித்தர்

"சாதி பேதம் சொல்லுகிறீர், தெய்வம்

தான் என்பது ஒன்றுடன் பேதம் உண்டோ!
ஓதிய பால் அதில் ஒன்றாகி அதில்
உற்பத்தி நெய்தயிர் மோராச்சு”[85]

சாதி, மத பேதம் பாராட்டுவது என்பது அர்த்தமில்லாத ஒன்றாக காணப்படும். மனித சாதி என்பது ஒன்றுதான், அதில் பிரிவினையை ஏற்படுத்தி துன்பத்தை உருவாக்கக் கூடியது என்று சாதியை கண்டித்து உரைக்கிறார் கொங்கணச் சித்தர்.

மனிதனின் ஐம்புலன்களான மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவற்றை அடக்கினால், அவனது மனமானது ஒருமைபட்டு ஞான வாசலுக்கு வழிகாட்டும். அத்தகைய வாசல் வழியாக சென்று பரபிரம்மத்தை அடைந்து விடுவார்கள். அதனால் மறு பிறவி என்பது இல்லாமல் போய்விடும் என்பதே உண்மை என்கிறார் சிவவாக்கியார்.

**5.43 உலகப்பற்றை நீக்குதல்**

உலக வாழ்க்கையில் பற்றில்லாமல் இருக்க வேண்டுமென சித்தர்கள் வலியுறுத்துகின்றனர். தாமரை இலையிலே தண்ணீர் தங்காததைப் போல் உலகத்தின் மீதுள்ள ஆசையை ஒதுக்கிவிட்டு, சோதி சொரூபமாய் இருக்கும் இறைவனின் பாதத்தை மனிதர்கள் தொழுவது, பிறவியின் பயனை அடைவதற்கு சிறந்த வழியாக இருக்கும் என்கின்றனர். தாமரை இலைக்கும், தண்ணீருக்கும் உள்ள தொடர்பினை, வாழ்க்கையை எப்படி வாழ வேண்டும் என்பதற்கு சித்தர்கள் உதாரணமாக இருக்கிறார்கள்.

“தாமரையின் இலையிலே தண்ணீர் தங்காத
தன்மைபோலச் சகத்தாசைதள்ளி விட்டெங்கும்
தூமணியாய் விளங்கிய சோதி பதத்தைத்
தொழுது தொழுது தொழுது ஆடுபாம்பே!”[86]

மேலும் பாம்பாட்டிச் சித்தர். புளியம்பழத்தின் ஓடு போல, சேற்றில் திரியும் பிள்ளைப் பூச்சி சேற்றை நீக்கி வாழ்தல் போல, எண்ணெய்க்கும், தண்ணீருக்கும் உள்ள சொந்தம் போன்று, என்றவாறு உலகப் பற்றின் மீதுள்ள ஆசையை நீக்குதல் வேண்டுமென மேற்கூறப்பட்ட உவமைகளை கூறியிருக்கின்றார்.

பாம்பாட்டிச் சித்தர், ஆன்ம ஞானத்தை அடைகின்ற மார்க்கத்தை மிகவும் எளிமையான சொற்களில் எடுத்து விளக்கியிருக்கிறார். அதே சமயம் மறைபொருள் நிரம்பிய பாடல்கள் பலவற்றையும் பாடியிருக்கிறார். சித்தர்களைப் பொதுவான வழிகளை மட்டும் சொல்லவில்லை. இறைவனை உணர்வதற்குரிய முறைகளையும் அவர்கள் கூறியிருக்கின்றனர்.

### 5.44 முக்தியை உணர்த்தும் பக்தி

இறைபக்தி இல்லாதவர்கள் முக்தியை அடைய முடியாது என்றும் அதனை உணர்த்துவதற்கு அழகான ஓர் உவமையை இடைக்காட்டுச் சித்தர் விளக்கிக் கூறுகின்றார்.

> “அவித்த வித்துமுளையாதே தாண்டவக்கோனே! பக்தி
> அற்றவர் கதியடையார் தாண்டவக்கோனே!”[87]

வேகவைத்த நெல் விதைநெல் ஆவதில்லை. அதைப் போல பக்தி இல்லாதவர்கள் முக்தியை அடைய முடியாது. விதையானது இயற்கையிலேயே முளைக்கும் தன்மையுடையது. வேக வைக்கின்ற போது முளைக்கின்ற சக்தியை அது இழந்துவிடுகிறது. மனிதப் பிறவி எடுத்துவிட்டால் அதன் இயற்கை தன்மையாகப் பக்தி அமைய வேண்டும். பக்கதியை நீக்கி வாழுகின்றவர்கள்., வேக வைத்த அல்லது அவிந்து போன விதைக்கு சமமாகிப் போய்விடுகிறார்கள். பக்தி என்பதைப் பிறப்பின் தன்மையாக இடைக்காட்டுச் சித்தர் குறிப்பிடுகின்றார்.

ஒவ்வொரு மனிதனின் அகத்தினுள்ளும் மெய்விளக்கு எரிந்து கொண்டே இருக்கின்றது. அந்த விளக்கை பயன்படுத்தத் தெரியாதவர்கள், ஞானக் குருடர்களாக வாழ்ந்துக் கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு மனிதனும் தன்னுள் இருக்கும் மெய்விளக்கை உணர்ந்து கொண்டால் அஞ்ஞான இருள் அகன்று ஓடிப்போகும். இத்தகு நிலையை உணராதவர்களின் தன்மையைத் தனது பாடல் மூலம் தெரிவிக்கின்றார்.

''கைவிளக்குக் கொண்டு கடலில் வீழ்வார்போல

மெய்விளக்கின் னுள்ளிருக்க வீழ்குவதேன் புல்லறிவே'' [88]

சித்தர்கள் தத்துவங்களைச் சொல்லி இருந்தாலும் நடைமுறைக்குத் தேவையான பாமர மக்கள் அனுசரித்துப் பயன்பெறக்கூடிய, பல வி'யங்களையும் சொல்லியிருக்கிறார்கள். மனிதக்குலத்துக்கு உதவுவதே அவர்களின் நோக்கமாக இருந்திருக்கின்றது. எனவே தான் சித்தர்கள், தற்காலத்திலும் சூட்சும சரீரத்தில் வாழ்ந்து வேண்டுவோருக்கு உதவிப் புரிந்து வருகின்றனர் என்ற நம்பிக்கை மக்களிடையே இருந்து வருகின்றது.

### 5.45 உலகத்தின் தோற்றம்

பிரபஞ்சத்தின் தோற்றம் என்பது இன்று வரை புரியாத புதிராகவே உள்ளது என்றே கூறுதல் வேண்டும். உலகத் தோற்றத்திற்கு பல்வேறு நிலையிலான மற்றும் பல்வேறு வகையிலான கதைகள் அன்று முதல் இன்று வரை கூறப்படுகின்றன. படைப்பு என்பது பரப்பிரம்மத்தின் தற்செயல் என்பது சித்தர்களின் முடிவாக உள்ளது. பரப்பிரம்மம் தன்னைத் தானே மாயா சொரூபம் ஆக்கிக் கொண்டபோது உலகம் தோன்றியது. வானவெளியில் நிலைகொண்டு நிற்பது பராபரம் எனப்படுகிறது. இதனை அகப்பேய்ச் சித்தர் தனது பாடலின் மூலம் எடுத்துரைக்கிறார்.

“பராபரமானதடி அகப்பேய்

பரவையாய் வந்ததடி

தராதலம் ஏழ்புவியும் அகப்பேய்

தானே படைத்ததடி” [89]

பரவை என்பது கடல். முதலில் நீர் தோன்றிய பிறகு தான் அதிலிருந்து உயிரினங்கள் தோன்றி பரிணாம வளர்ச்சி பெற்றதாக விஞ்ஞானம் கூறுகிறது. இத்தகு மகத்தான உண்மையை அகப்பேய்ச் சித்தர் இரண்டு வரிகளில் அருமையாக எடுத்துரைத்துள்ளார்.

### 5.46 தமிழின் பெருமை

தமிழ்மொழியின் பெருமைகளை பல்வேறு அறிஞர்கள் முதற்கொண்டு அனைவரும் பெருமைப்படுத்தியுள்ளனர். அதில் சித்தர்களின் பங்கும் அளப்பற்கரியதாக உள்ளது. சித்தர்கள் சமுதாய நலனில் அதிக அக்கறை கொண்டு பல்வேறான கருத்துகளை மக்களுக்கு வழங்கியுள்ளனர். மேலும் சித்தர்கள் தமிழில் மிகுந்த புலமை பெற்றவர்களாக இருந்துள்ளனர். இறைவனை உணர்வதற்கு தமிழ்மொழி ஒரு சிறந்த கருவி என்பதை உணர்ந்திருக்கின்றனர். மூன்று தமிழையும் முறையோடு கற்று தெளிந்தவர்களுக்கு வேத கோ‘ங்கள் தேவை இல்லாதவை என்கிறார் குதம்பைச் சித்தர்.

“முத்தமிழ் கற்று முயங்கு மெய்ஞ் ஞானிக்குச்

சத்தங்கள் ஏதுக்கடி? – குதம்பாய்!

சத்தங்கள் ஏதுக்கடி? [90]

உச்சிக்கு மேற்சென்று உயர்வெளி கண்டோர்க்கு

இச்சிப்பிங்கு ஏதுக்கடி? – குதம்பாய்!

இச்சிப்பிங்கு ஏதுக்கடி?” [91]

என்றவாறு, தமிழ்மொழியை முற்றும் கற்று உணர்ந்தவர்கள், வேதங்களை கற்று உணர வேண்டிய அவசியமே இல்லை என்கின்றனர். தமிழ் மொழியின் பெருமையை நன்கு பறைசாற்றியுள்ளனர்.

### 5.47 நன்னெறியில் நிற்றல்

மனிதன் என்பவன் நல்ல நெறியின்கண் நிற்றல் வேண்டும் என்று பல நீதிநூல்கள் எடுத்தியம்புகின்றன. நீதிநூல்களில் ஒன்றான திருக்குறளில்,

> ‘‘இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
> நன்னயம் செய்து விடல்’’ [92]

என்று, தீமை செய்தோருக்கு நன்மை செய்தல் வேண்டும், அவர்களை தண்டித்தல் கூடாதென திருவள்ளுவர் மொழிந்துள்ளார். அது போன்றே கடுவெளிச் சித்தரும் உயிர்களை நேசிக்க வேண்டும் என்றும், தீங்கு செய்தோருக்கு தீமை செய்யாதே என்றும், தீய வினைகளை ஒரு போதும் செய்யாதே என்றும் அறிவுறுத்துகிறார். அவர்தம் பாடலில்

> ‘‘வைதோரைக்கூட வையாதே - இந்த
> வையம் முழுவதும் பொய்த்தாலும் பொய்யாதே,
> வெய்ய வினைகள் செய்யாதே – கல்லை
> வீணிற் பறவைகள் மீதி லெய்யாதே’’ [93]

- சாதி பேதங்களைப் பெரிதாக எண்ணக்கூடாது.
- நல்ல நீதிகளை உணர்ந்து மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லல்
- உலகத்தில் உள்ள எல்லா உயிர்களையும் ஒன்று என உணர்தல்
- கொள்ளையடித்து வாழ நினைத்தல் கூடாது
- நட்பை போற்றுதல்

- பிறரைப் பற்றி அவதூறு சொல்லல் கூடாது

என்றவாறு, நல்ல நெறிகளை மனிதர்கள் கடைபிடித்து வாழ்வதன் மூலம் இறைவனின் அருளைப் பெற முடியும் என்கிறார்.

### 5.48 சிவவாக்கியரின் சிந்தனைகள்

சிவவாக்கியரின் பாடல்களில் புதுமையான கருத்துகள், புரட்சிகரமான சிந்தனைகள், எளிய அடிகள், பாமர மக்கள் பயன்படுத்தும் வழக்குச் சொற்கள் என்பன போன்றவை அமைந்துள்ளன.

இறைவன் என்பவன் பற்றற்றவன், பரவி நிற்பவன், விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டவன். இத்தகைய இறைவனைக் கல்லில் வடித்து அதற்குப் பூசை செய்து அதன் மூலம் அவனுடைய கருணையைப் பெற முடியும் என்று நம்பும் மனிதர்களை சிவவாக்கியர் கடுமையாகச் சாடுகிறார்.

''பண்ணி வைத்த கல்லையும் பழம் பொருள் அதென்றுநீர்
எண்ண முற்றும் என்னபேர் உரைக்கீறீர்கள் ஏழைகாள்
பண்ண வும்ப டைக்கவும் படைத்து வைத்த எரிக்கவும்
ஒண்ணு மாகி உலகளித்த ஒன்றை நெஞ்சில் உன்னுமே'' [94]

என்று உள்ளத்தில் உணர வேண்டிய இறைவனைக் கல்லுக்குள் வடித்து அதனைக் கடவுளாக வணங்கும் முறையைச் சாடுகிறார். எனவே இவர் உருவ வழிபாட்டு முறையை முற்றிலுமாக எதிர்க்கிறார்.

இந்து மதத்தின் ஆணிவேரே மறுபிறவி தத்துவத்தின் உதவியினால் தான் நிலைத்து நிற்கின்றது, எனலாம். ஒவ்வொரு மானிட உயிரும் மரணத்திற்குப் பிறகும் வாழ்கின்றது. மனிதர்கள் தாம் வாழும் காலத்தில் செய்த நல்வினை, தீ வினைகளுக்கு ஏற்ப அவர்களுடைய ஆத்மா (உயிர்) மீண்டும் மண்ணில் பிறக்கின்றது. நற்செயல் செய்தால் நல்வாழ்க்கையும், தீவினை செய்தால் வறுமை,

துயரம், கவலை போன்றவற்றால் சூழப்பட்ட வாழ்க்கையையும் அடைவதாக, இந்து மதம் உணர்த்துகின்றது.

"புல்லாகி பூடாகிப் புழுவாய் மரமாகி
பல்விருகம் ஆகி பறவையாய் பம்புமாகி
கல்லாய் மனிதனாய் பேயாய் கணங்களாய்
வல்அசுரர் ஆகி முனிவராய் தேவிராய்
செல்லா நின்ற இத்தாவர – சங்கமத்துள்
எல்லா பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமானே" [95]

என்று மாணிக்கவாசகர் ஒவ்வொரு மானிட உயிரும் இத்தகைய பிறவிகளை அடைகிறது என்று உரைக்கின்றார். மேலும் இந்நிலை (மறுபிறவி) அடையாமல் இருக்க வேண்டுமாயின் இறைவனைத் தொழுது பணிதல் ஒன்றே வழியாகும் என்றும் உணர்த்தப்படுகின்றது.

சிவவாக்கியர், மறுபிறவிக் கொள்கையை மறுக்கிறார். அவர், உயிரும், உடம்பும் ஒன்றையொன்று பிரியாமல் நிற்கும். ஒன்று அழியின் இன்னொன்று அழிந்துவிடும் என்று கருத்துடையவராகவே இருந்துள்ளார். ஒருமுறை இறந்து போன உயிர் மீண்டும் உடலில் புகுவதில்லை என்று சிவவாக்கியர் வலியுறுத்திக் கூறுகின்றார்.

வேதங்களின் தொட்டியில் வளர்க்கப்பட்ட வருணப்பிரிவுகள் பின்னர் சாதி என்னும் நச்சுச் செடிகளாகச் செழித்து, வளர்ந்து ஆயிரக்கணக்கில் தழைத்தன உயர்வு – தாழ்வு உள்ள இந்தச் சமுதாய அமைப்பு உலகின் வேறு எந்த நாட்டிலும் கிடையாது.

எக்காரணத்தாலும் தன் சாதியினுடைய கர்மங்களை விட்டு மற்றச் சாதியினுடைய கர்மங்களைச் செய்யப் போகக் கூடாது என்றே கிருஷ்ணன் இங்கே உபதேசம் செய்கின்றார்.

இயற்கையின் படைப்பில் மனிதர் அனைவரும் சமமானவர்களே என்ற சீர்திருத்த கருத்துகளை ஏற்றிருந்த சித்தர்கள். சாதியக் கோட்பாட்டினை ஏற்க மறுத்தனர். இக்கருத்தினை ஏற்பதில் சிவவாக்கியர், முதன்மையானவராகக் காணப்பட்டார். மேலும் இத்தகைய சாதி பாகுபாடு ஒழிய வேண்டுமாயின் அதற்குக் கலப்புத் திருமணங்கள் அவசியம் என்பது இன்றையச் சீர்திருத்த சிந்தனையாளர்களின் கருத்து. இக்கருத்தினை தன் காலத்திலேயே சிவவாக்கியர் வலியுறுத்திக் கூறுகின்றார்.

சிவவாக்கியரின் பாடல்கள், சமுதாய சிந்தனைகளையும், பழமையையம், மூட நம்பிக்கைகளை எதிர்க்கும் நிலைகளையும், மக்கள் அறிவு மேன்மை அடைந்திட வேண்டும் என்ற விழைவும், பகுத்தறிவுக் கருத்துகளும் கொண்டதாகவே காணப்படுகின்றன.

### 5.49 தொகுப்புரை

சித்தர்களின் சிந்தனைகள் உலக மக்களின் நன்மையைப் பற்றியே அமைந்திருந்தது. மனித உடலில் தூய்மை என்பதன் அவசியத்தை திருமூலர் மிகவும் வலியுறுத்தி கூறுகிறார். பொருளையும், உணவையும், பிறர்க்கு கொடுத்து வாழும் அறவாழ்வு மேலானது என்பதாகும். மனிதன் உலக வாழ்க்கையில் சேர்த்து வைக்கும் செல்வம்,புகழ், ஆடம்பர வாழ்வு, மனித உடல் என்ற அனைத்தும் நிலையில்லாதது என உணர்த்த திருமூலர் பல பாடல்களைப் பாடியுள்ளார். சிவவாக்கியர் உருவ வழிபாட்டை வன்மையாக எதிர்த்துப் பாடல்கள் பாடியுள்ளார். சாதி, சமய வேற்றுமைகளை ஏற்பவர்கள் சமயவெறி கொண்டவர்களாக காணப்படுவர். மனிதனின் ஐம்புலன்களான மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவகைள் மனிதனை ஆசை என்னும் கூண்டுக்குள் சிக்க வைத்து அலைகழிப்பவை ஆகும். சமயப்பாகுபாடுகளால் நிலவும் ஏற்றத் தாழ்வுகள்

தேவையற்றன என்பது சித்தர்களின் கருத்தாக இருந்துள்ளது. மக்கள் வாழ்வில் பின்பற்றத் தக்க நெறிகள் எவை என்பதை சித்தர்கள் பட்டியலிட்டு தந்துள்ளனர்.

மக்களிடம் காணப்படும் தேவையில்லாத செயல்களை நீக்கி, சிலவற்றை தவிர்க்க வேண்டுமென கொங்கணச்சித்தர் வலியுறுத்துகிறார். ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பதில் சித்தர்கள் உறுதியாக இருந்தனர். சித்தர்கள் குறிப்பிட்ட எந்த சமயத்தையம் சார்ந்தவர்கள் அல்லர். இறைவன், மனித உள்ளத்தில் குடிக்கொண்டிருக்கிறான் என்பதை தம் பாடல்களில் உணர்த்தியுள்ளனர் சித்தர்கள் பெண்ணாசையத்தான் வெறுத்தார்களேயொழிய பெண்ணினத்தையே வெறுத்துப் பாடவில்லை. சித்தர்களின் சமநோக்குப் பார்வை**,** சினத்தால் உண்டாகும் தீய விளைவுகளை பற்றி அறிய முடிகின்றது. இறைவனை பல்வேறு உருவங்களில், பல்வேறு வடிவங்களில் வழிபட்டாலும் பரம்பொருள் என்பது ஒன்றேயாகும் என்பதைத் திருமூலர் தம் பாடலில் விளக்கியுள்ளார்.

சித்தர்கள் மிக ஆழமான கருத்துக்களைப் பாமரர்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் எளிய தமிழில் கூறியுள்ளனர். உடல் அரோக்கியத்துடன், நோயில்லாமல் நீண்ட ஆயுளுடன் வாழ்வதற்கான மருத்துவச் செய்திகளையும் குறிப்பிட்டுள்ளனர். சித்த மருத்துவத்தை தமிழ் மருத்துவம் என்கிறோம் ஆசை மனிதர்களுக்கு எண்ணிலடங்கா பிறவிகளைக் கொடுக்கும். எனவே, மனிதர்கள் ஆசையைத் தவிர்த்தல் வேண்டும் என்கிறார் குதம்பைச் சித்தர்.

சித்தர்கள் தாங்கள் கூற வேண்டிய கருத்துகளை மறைமொழிகள் மூலமும் உணர்த்தியுள்ளனர். அத்தகைய மறைமொழிகளை சித்த மருத்துவத்தில் பயன்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இறைபக்தி இல்லாதவர்கள் முக்தியை அடைய முடியாது என்று இடைக்காட்டுச் சித்தர் கூறுகின்ற செய்திகளும் இவவியலில் இடம் பெற்றுள்ளன.

# இயல் 5

## அடிக்குறிப்புகள்

1. திருமூலர், திருமந்திரம்., பா.709
2. மேலது.,பா.251
3. மேலது.,பா.256
4. மேலது.,பா.199
5. திருக்குறள்., 148
6. மேலது.,பா.148
7. மேலது.,பா.145
8. சிவவாக்கியர் .,பா.5
9. ஞானக் கோவையென வழங்கும் சித்தர் பாடல்கள்., அரு.இராமநாதன்., ப.266
10. சித்தர் கண்ட இறைமை.,ப.42
11. பாம்பாட்டி சித்தர் .,பா.92
12. சிவவாக்கியர் .,பா.33
13. பாம்பாட்டிச் சித்தர்., பா.99
14. பாரதியார் கவிதைகள்.,ப.36.,பா.17
15. சிவவாக்கியர். பா. 465
16. பட்டினத்தார் பா.12
17. திருக்குறள்.இ 126
18. சித்தர் பாடல்கள், த.கோ.வேந்தன் ப.360.
19. திருமந்திரம் பா.272
20. குதம்பைச் சித்தர் பா. 137
21. திருக்குறள். 306
22. கணபதிதாசர் பா. 41
23. திருமந்திரம் 3046
24. சி.எஸ்.முருகேசன்., சித்தர் பாடல்கள்.,ப.268 பா.3
25. மேலது.,பா.18
26. மேலது., ப.215.பா.13
27. திருக்குறள். :80

28. திருமந்திரம் பா: 257
29. பாம்பாட்டி சித்தர். பா:
30. சிவவாக்கியர் பா.42
31. சித்.நெ.தொ.2. ப.786
32. கோவை 2. ப.101
33. சி.எஸ்.முருகேசன்., சித்தர் பாடல்கள்.,ப.356 பா.65
34. பாம்பாட்டிச் சித்தர் பாடல், பா.34
35. மேலது.,. பா.எ.76 வ.ள.2-1
36. சி.எஸ்.முருகேசன்., சித்தர் பாடல்கள்.,ப.215 பா.15
37. அகத்தியர் ஞானம், சித்தர் பாடல்கள், பக்.2
38. திருமந்திரம். பா.எண்.2066
39. மேலது.,. பா.எ.2068
40. சிவவாக்கியர். பா.எ.20
41. திரு. பா.177
42. ஔவை.சு.துரைசாமிபிள்ளை.ப.355
43. நாலடியார்– பா.17
44. திருமந்திரம். பா.2883
45. பாம்பாட்டி பா.111
46. திருக்குறள். :948
47. குதம்பைச் சித்தர் பா. 166
48. சித். நெ.தொ. ஐ ப.126
49. திருமந்திரம். 704
50. போகர் 7000, முதலாவது காண்டம், பா.299
51. சிவவாக்கியர் பாடல்கள், பா.507
52. அகத்தியர் ஞானம் பா.4 அடி 3,4
53. மேலது பா.30, அடி 1,2
54. திருமந்திரம் பா.2615
55. சிவவாக்கியர் பாடல்கள், பா.
56. கோவை-1 ப.33
57. சிவவாக்கியர் பாடல்கள், பா

58. கொங்கணர்.பா.
59. மேலது பா.30
60. சி.எஸ்.முருகேசன்., சித்தர் பாடல்கள்.,ப.198 பா.79
61. திரு. 198
62. திரு. 199
63. இடைக்காட்டுச சித்.பா. 21
64. மேலது., பா.74
65. அறிவொளி(உ.ஆ.), சித்தர் பாடல்கள் பாகம்-1 குதம்பைச் சித்தர்,பா.197
66. பெரிய ஞானக்கோவை, சிவவாக்கியர் பாடல்.ப.131.
67. திரு. பா.252
68. தமிழிலக்கிய வகைமைகளும் வாழ்வியல் சிந்தனைகளும். ப.11
69. திருக்குறள்.,941
70. மேலது.,ப.535
71. சிவவாக்கியர் பாடல்களில் சமுதாயச் சிந்தனைகள். ப.17
72. சித்.கண். விஞ்.தத். ப.51
73. திரு. 198
74. திரு. சிற. 1
75. மேலது.,4
76. திரு.152
77. மேலது.,152
78. மேலது.,120
79. மேலது.,2904
80. திரு. சிற. 3
81. சித். கண். விஞ. தத்துவம் ப.46
82. மேலது.,ப.51
83. மேலது.,ப.53
84. மேலது.,ப.57
85. மேலது.,ப.58
86. மேலது.,ப.83
87. பாம்பாட்டிச் சித்தர் பாடல், பா.70
88. இடைக்காட்டுச் சித்.பா.24

89. மேலது., பா.74
90. அகப்பேய் சித்தர் பா.2
91. குதம்பைச் சித்தர் பா.10
92. மேலது.,பா.11
93. திருக்குறள்.314
94. கடுவெளிச் சித்தர் பா.25
95. சிவவாக்கியர் பாடல்களில் சமுதாயச் சிந்தனைகள், இராஜசூரியன், ப.57
96. மேலது.,ப.77

# முடிவுரை

சித்தர் பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள் என்னும் தலைப்பிலான ஆய்வில் இயல்கள் தோறும் கண்ட முடிபுகள் தொகுக்கப்பட்டுள்ளது.

சித்தர்கள் என்பவர்கள் வாழ வேண்டிய நெறி முறைகளை வாழ்ந்து காட்டியவர்கள் எனலாம். சித்தர்களின் வாழ்வியல் இலக்கணமே யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற கருத்தை முன்வைப்பதாக உள்ளது. சித்தர்களின் எண்ணிக்கையை அறுதியிட்டு சொல்ல முடியாது. ஒவ்வொரு கால நிலையிலும் எண்ணற்ற சித்தர்கள் வாழ்ந்துள்ளனர். இவர்களைப் பதினெண் சித்தர்கள் என்று வரையறுத்துக் கூறுவர். சித்தர் நெறியை மதங்களோடு இணைத்துக் கூறினாலும், மதங்களில் உயர்வு தாழ்வு காண்பது சித்தர் நெறிக்குப் பொருந்தாச் செயல். சித்தர்கள் தங்களுடைய இறையனுபவத்தைத் தம்மைச் சுற்றியுள்ள மக்கள் சார்ந்துள்ள மதக் கோட்டுபாடுகளின் வடிவமைப்பில் சொல்லியிருக்கிறார்கள்.

மனித உடலின் அமைப்பு என்பது, இறைவனால் உருவாக்கப்பட்டது. அத்தகைய உடலினைப் பாதுகாக்க மனிதன் போராடி வருகின்றான். அத்தகைய சூழ்நிலையில் சித்தர்கள் உடலைப் பாதுகாக்க, யோக நெறிகளை வலியுறுத்திக் கூறுகின்றனர். இவர்களின் யோகஞான சாதனங்கள்தான் இன்று யோகக்கலை, வாழும் கலை, சாகாக்கலை என்றும் அழைக்கப்படுகின்றது. திருமந்திரம், யோக நூலாகவும், அனுபவ நூலாகவும் அமைந்து, மனிதன் நிலைபேறுடைய வாழ்க்கையை வாழ்வதற்குரிய நெறிகளை எடுத்துரைக்கிறது. குதம்பைச் சித்தர் அட்டாங்க யோகத்தைச் சிறந்தது என்றும், இந்த யோகத்தைப் பெறுவதன் மூலம் மெய்ஞ்ஞானம் அடையலாம் என்கிறார்.

உடல், மனம் இரண்டையும் கட்டுப்பாட்டில் வைப்பதற்கு யோகம் சிறந்த மருந்து என சித்தர்கள் விளம்பியுள்ளனர். வெளிநாட்டினரும் விரும்பி செய்யும் அளவிற்கு யோகமானது, சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது எனலாம். தற்காலத்தில் யோகத்தை கல்வியிலும் இணைத்து அதன் முக்கியத்துவத்தை மாணவர்களும் அறியும் வண்ணம் செய்யப்பட்டுள்ளது.

மனித உடலானது 96 தத்துவங்களால் ஆனது என்றும், அத்தகைய உடலானது பொய் என்றும், அறிவினால் அறியும் ஆன்மாவே மெய் என்றும் சித்தர்கள் குறிப்பிடுகின்றனர். உலகின் உண்மைத் தத்துவத்தை விளக்கிக் கூறுவதே சித்தர் பாடலின் நோக்கமாக உள்ளது. யாக்கை, இளமை, செல்வம், உயிர் நிலையாமை கருத்துகளை சித்தர்கள் தங்களது பாடலில் வலியுறுத்திக் கூறுகின்றனர். மனித வாழ்க்கையின் தத்துவத்தை திருமந்திரம் உணர்த்துகிறது. சிவவாக்கியரின் தத்துவங்கள் சமுதாயத்தில் நிலவும் பல்வேறு வாழ்வியல் சிக்கல்களுக்குத் தீர்வு கூறுவனவாக அமைந்துள்ளன. சமுதாயத்தில் புரையோடிப் போயிருக்கின்ற பல்வேறு கருத்துருவாக்கங்களை இவர் இழிவெனக் கூறி அவற்றின் உண்மை நிலைகளைத் தம்பாடல்வழி மக்களுக்கு எடுத்துரைக்கின்றார். சமுதாயம் நலம் பெற மக்களோடு மக்களாய் இருந்து அனைத்து உயிர்களிலும் இறைவனைக் கண்டு மனித முன்னேற்றத்திற்கு வழிகாட்டுபவராக விளங்கியவர்கள் சித்தர்கள். மேலும் சமயத்துறையிலும், சமுதாயத்துறையிலும் ஒரு புரட்சியை ஏற்படுத்தி, ஓரிறைக் கொள்கையையும்,சமத்துவ நெறியையும் நிலைநாட்டியவர்கள். சித்தர்கள் இறை நம்பிக்கை கொண்டவர்கள் என்பதில் ஐயமில்லை, ஆனால் இறைவன் ஒருவன் என்ற கோட்பாடு உடையவர்கள். சித்தர்கள் இறைக்கோட்பாடு என்பது அண்டத்தில் உள்ள இறைவன் பிண்டத்திலும் உள்ளான் என்பதே ஆகும். சித்தர்களின் தத்துவக் கொள்கைகள், உலகம், சாதி, சமயம், குடும்பம், வழிபாடு எனப் பல்வேறுபட்ட நோக்குகளில் அமைகின்றது. தத்துவத்தை மையமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் சித்தர்கள் ஆவர்.

இன்றைய காலத்தில் அறிவியலின் வளர்ச்சி மனிதனே வியக்கும் வண்ணம் உள்ளது. இத்தகு வளர்ச்சியை சித்தர்கள் தங்களது அறிவாலேயே கண்டு உரைத்துள்ளனர். சித்தர்கள் பல்துறை அறிவினர். பழந்தமிழ் விஞ்ஞானிகளாகிய சித்தர்கள், மெய்ஞானத்தின் வழியாகக் கண்டு உணர்ந்த பல உண்மைகளை விஞ்ஞானம் கண்டறிந்துள்ளது.

சித்தர்கள், மெய்ஞானத்தில் வல்லவர்களாகவும், அரிய மருந்துகளை அறிந்தவர்களாகவும், இறப்பை வென்று கூடுவிட்டு கூடு பாயும் வல்லமை உடையவர்களாகவும் விளங்கியிருக்கின்றனர். பிரபஞ்ச ஆற்றலைக் கருவிகள் மூலமாகக் கிரகித்துப் பயன்படுத்த முயல்வது விஞ்ஞானம் அப்படிபட்ட மேலான ஆற்றலைத் தெய்வீக அணுகுமுறையில் மானுடம் பயனுற முயன்றது மெயஞ்ஞானம் என்றும் விஞ்ஞானம் வளர வளர அதன் முதிர்ச்சியில் மெய்ஞானம் தோன்றும். மெய்ஞானம் என்றதும் துறவு நிலையும், விஞ்ஞானம் என்றால் மேனாட்டு நாகரிக நிலையுமே மனதில் தோன்றும். இன்றைய விஞ்ஞானிகள் பொருளைக் கொண்டு தான் தெளிகிறார்கள். மெய்ஞானிகள் ஒவ்வொரு பொருளின் தத்துவார்த்தத்தை நுகர்ந்து தெளிவார்கள்.

விஞ்ஞானி, மெய்ஞானி என்ற இருவருமே மனிதர்கள் தான். அவரவர் தம் செயல்களின் மூலம் மாறுபடுகின்றனர். விஞ்ஞானியின் கண்டுபிடிப்பு என்பது மனிதனின் ஆக்க சக்திக்கும், அழிவு சக்திக்கும் பயன்படுகிறது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். ஆனால் மெய்ஞானி என்பவர் உண்மையை அறிந்தவர் என்பதால் மக்களின் மன இருளாகிய அறியாமையை போக்குகின்றவர் என்றே கூற வேண்டும்.

சித்தர்கள் மக்களுக்கு வாழ்வியல் கருத்துக்களைக் கூறுவதோடு மட்டுமல்லாமல், இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்வுகளையும் தங்கள் பாடலில் கூறியுள்ளனர். மனிதனின் ஐம்புலன்களான மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவகைள் மனிதனை ஆசை என்னும் கூண்டுக்குள் சிக்க வைத்து அலைகழிப்பவை ஆகும். மனிதனின் பலவிதமான துன்பங்களுக்கும் காரணம்

ஐம்புலன்கள் என்பதை சித்தர்கள் தம் பாடல்களில் விளக்கிக் கூறியுள்ளனர். சித்தர்கள் மானுட வாழ்க்**கைக்**கு ஒரு வழிகாட்டியாய் நின்றார்கள். சித்தர்கள் கூறிய கருத்துக்கள் எண்ணற்றவை. ஒரு சில கருத்துக்கள் மட்டுமே எழுத்து வடிவம் பெற்றவை.ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பதில், சித்தர்கள் உறுதியாக இருந்தனர். சித்தர்கள் குறிப்பிட்டு எந்த சமயத்தையம் சார்ந்தவர்கள் அல்லர். இறைவன், மனித உள்ளத்தில் குடிக்கொண்டிருக்கிறான் என்பதைத் தம் பாடல்களில் உணர்த்தியுள்ளனர்.

மனிதர்கள் அனைவரும் அகநாட்டம் கொண்டு, புறவழிபாட்டை வெறுத்து வாழ்ந்தால் சமுதாயம் ஏற்றத்தாழ்வு அற்றதாகிவிடும் என்பதை உணர்ந்தனர். என்னுள்ளே இருக்கும் ஆண்டவன்தான் பிற மனிதர்களிடமும் உறைகிறான் என்ற உணர்வு ஏற்படின், அனுபவ ரீதியாக அனைவரும் சமம் என்ற உண்மை புலப்படும்.சித்தர்கள் மிக ஆழமான கருத்துக்களைப் பாமரர்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் எளிய தமிழில் கூறியுள்ளனர். தாம் உணர்ந்தவற்றை மக்களுக்கும் உணர்த்தினார்கள்.

# துணை நூற்பட்டியல


| | |
|---|---|
| அமரகவி சித்தேஸ்வரர், | ஞானத்தின்குரல், பிரபோதரன் சுகுமார், , அயக்கிரிவா பதிப்பகம், சென்னை, 2008 |
| அகமுக சொக்கநாதர் குருஜி, | யார் அந்த தமிழ்ச் சித்தர்கள், கற்பகம் புத்தகாலயம், சென்னை, 2013. |
| அனுப்பட்டி ப.சு.மணியன், | சித்தர் நெறிகளும் சித்தி முறைகளும், விஜயா பதிப்பகம், கோயம்புத்தூர், 2011. |
| ஆச்சார்யா.பி.எஸ். | அகத்தியர் முதல் வாரியார் வரை சித்தர்கள் அறுபது பேர்: வாழ்வும் வாக்கும், , நர்மதா பதிப்பகம், சென்னை, 2012. |
| இராகவன். ஆ, | சித்தர்களின் பிரணவ சூத்திரம், அழகு பதிப்பகம், வில்லிவாக்கம், 2012. |
| இராமச்சந்திரன். எஸ்.பி, | சித்தர்கள் வரலாறு, ,தாமரை நூலகம், சென்னை, 2002. |
| இராமச்சந்திரன். எஸ்.பி, | கருவூரார் மாந்திரீகம் தாமரை நூலகம், சென்னை,1995. |
| இராமச்சந்திரன்.எஸ்.பி, | யோகஞான சாஸ்திரத்திரட்டு, தாமரை நூலகம், சென்னை, 2001. |
| இராமச்சந்திரன்.எஸ்.பி, | தட்சிணாமூர்த்தி மெய்ஞானம்- 1500, தாமரை நூலகம், சென்னை, 1995. |

| | |
|---|---|
| இராமச்சந்திரன்.எஸ்.பி, | யோகஞான சாஸ்திரத்திரட்டு, (நான்காம் பாகம்) தாமரை நூலகம், சென்னை, 1998. |
| இராமச்சந்திரன்.எஸ்.பி, | யோகஞான சாஸ்திரத்திரட்டு, (எட்டாம் பாகம்) தாமரை நூலகம், சென்னை,1996. |
| இராமகிருஷ்ணன ம. | இந்திய சித்தர் பரம்பரையில் பதினாறு பேர், நர்மதா பதிப்பகம், சென்னை, 2008. |
| இராமச்சந்திரன்.எஸ்.பி, | யோகஞான சாஸ்திரத்திரட்டு, (ஒன்பதாம் பாகம்) தாமரை நூலகம், சென்னை, 1998. |
| கலாவதி., இரா. | சித்தர் பாடல்களில் நடப்பியல்., உதயம் ஆப்செட், சென்னை. மு.பதிப்பு- டிசம்பர் – 2008. |
| கந்தசாமி., சோ.ந. | இந்தியத் தத்துவக் களஞ்சியம் (தொகுதி-ஐ)., மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்., சென்னை-21 மு.பதிப்பு. ஏபரல், 2003. |
| கந்தசாமி. சோ.ந. | இந்தியத் தத்துவக் களஞ்சியம்., மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்., சென்னை-21 மு.பதிப்பு. ஜுலை, 2003. |
| கணபதி.டி.என் | போகர் பாடல்கள், ரவி பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2007. |
| கவிஞர் பத்மதேவன் | சித்தர் பாடல்கள், கற்பகம் புத்தகாலயம், சென்னை,2013. |
| கந்தசாமி., சோ.ந. | இந்தியத் தத்துவக் களஞ்சியம் (தொகுதி -2)., மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்., சென்னை-21 மு.பதிப்பு. ஏபரல், 2003. |

| | |
|---|---|
| கட்டளை கைலாசம் வே. | சித்தர் தத்துவமும் வேதாத்திரியமும், மல்லி பதிப்பகம், திருநெல்வேலி. |
| சுனிதாபூபாலன், | நாம் போற்றும் சித்தர்கள், வானதி பதிப்பகம், சென்னை, 2008. |
| கருணாநிதி., ஆ. | சித்தர் இலக்கியங்களில் சமூகப் பார்வை., பாவை பிரிண்டர்ஸ் லிட்., சென்னை -14, மு.பதிப்பு – டிசம்பர் – 2007. |
| முருகேசன் சி.எஸ். | சதுரகிரி சித்தர்கள், சங்கர் பதிப்பகம், சென்னை,2012. |
| முருகேசன் சி.எஸ். | சித்தர் பாடல்கள் பெரிய ஞானக்கோவை, சங்கர் பதிப்பகம், சென்னை, 2012. |
| முருகேசன் சி.எஸ். | சித்தர்கள் கண்ட இறைமை, சங்கர் பதிப்பகம், சென்னை, 2008. |
| முருகன்.எஸ்.கே. | எளிய தமிழில் சித்தர் தத்துவம், சிக்ச்த்சென்ஸ் பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2011. |
| மோகன்.ஆர்.சி. | சித்தர்கள் நாற்பத்தென்மர் பெரிய ஞானக்கோவை, தாமரை நூலகம், சென்னை, 2005. |
| மோகன்.ஆர்.சி, | யோகஞான சாஸ்திரத்திரட்டு, தாமரை நூலகம், சென்னை, 2002 (முதல் பாகம்). |
| மோகன்.ஆர்.சி, | யோகஞான சாஸ்திரத்திரட்டு, (மூன்றாம் பாகம்) தாமரை நூலகம், சென்னை,2010. |

மோகன்.ஆர்.சி, யோகஞான சாஸ்திரத்திரட்டு, (ஐந்தாம் பாகம்) தாமரை நூலகம், சென்னை, 2013.

மோகன்.ஆர்.சி, மச்சமுனிவர் திருவாய் மலர்ந்தருளிய மெய்ஞானம் பெருநூல் காவியம்-800 , தாமரை நூலகம், சென்னை 2007.

மோகன்.ஆர்.சி, சதுரகிரி தலபுராணம், தாமரை நூலகம், சென்னை, 2012.

மோகன்.ஆர்.சி, கோரக்கர் சந்திரரேகை நமனாசத்திறவுகோல் ரவிமேகலை- முத்தாரம், தாமரை நூலகம், சென்னை, 2012.

மோகன்.ஆர்.சி. பதினெண் சித்தர்கள் பிர்மகற்பம், தாமரை நூலகம், சென்னை,2011.

மோகன்., ஆர்.சி. யோகஞான சாஸ்திரத்திரட்டு(ஆறாம் பாகம்) தாமரை நூலகம், சென்னை,2002.

மூலிகை மணி டாக்டர். க. வெங்கடேசன், தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம்,சக்தி பதிப்பகம்,சென்னை-17.

பதிப்பாசிரியர்கள்....., சித்தர் நெறிகள் தொகுதி-1 செம்மூதாய் பதிப்பகம், சென்னை, 2013.

பதிப்பாசியர்கள்....., சித்தர் நெறிகள் தொகுதி-2 , செம்மூதாய் பதிப்பகம், சென்னை, 2013.

பதிப்பாசியர்கள் சித்தர் இலக்கியங்களின் வாழ்வியல்,,விநாயகா கணிப்பொறி மையம், சிதம்பரம2014 (ஆய்வுக்கோவை 1).

பரசுராமன்.பி.என், சித்தர்கள் சரித்திரம்,ஜெனரல் பப்ளிஷர்ஸ், சென்னை,2010.

பாட்டுச்சித்தர் ஓம்சக்தி நாராயணசாமி பதினெண் சித்தர்களின் தசதீட்சை, ஓம்சக்தி நாராயணசாமி, நாகை,2011.

பாட்டுச்சித்தர் ஓம்சக்தி நாராயணசாமி சித்தர் சிவவாக்கியரின் ஜீவிதமும் சிந்த்தனையும், ஸ்ரீ தர்மசாஸ்தா ஐயப்பன் சேவா அன்னதான அறக்கட்டளை நாகை,, 2011.

பாட்டுச்சித்தர் ஓம்சக்தி நாராயணசாமி ஸ்ரீ கோரக்கர் சித்தர் கதையும் கருத்தும் (சந்திரரேகை 200 மூலமும் உரையும்), ஸ்ரீ தர்மசாஸ்தா அறக்கட்டளை, சீர்காழி,2012.

பாட்டுச்சித்தர் ஓம்சக்தி நாராயணசாமி சித்தர்கள் வழிகாட்டும் வாசியோகம், ஸ்ரீ தர்மசாஸ்தா அறக்கட்டளை, நாகை, 2012.

புலவர்.த.கோவேந்தன்(தொகுப்பு)., சித்தர் பாடல்கள்., பாவை பப்ளிகேஷன், சென்னை–14., மு.பதிப்பு (பட்டினத்தார் முதல் பாரதியார் வரை) டிசம்பர்-2000.

புலவர்.கோவி. இலக்குமணன்., திருமந்திர மாலை., தெனிந்திய தமிழ்ச் சங்கம், அப்பர் அச்சகம், சென்னை-08

பிரம்மதண்டி., ம.சு. சித்தர்களின் வரலாறும் வழிபடும் முறைகளும்.,சுப்ரா பிரிண்டெக், சென்னை.

நாஞ்சில் ஸ்ரீ விஷ்ணு சிந்தையுள் உறைந்த சித்தர்கள், சென்னை, லியோ புக் பப்ளிஷர்ஸ், 2013.

தாமஸ்., பி.ஆர். அட்டாங்க யோகம்.,எம்.கே.கிராபிக்ஸ்., சென்னை.

திருமுருகஜி ஞானச்சித்தர் விஜயகுமார் — சித்தர் வழியில் வாழ்க்கைத் தத்துவங்கள், மதி நிலையம், சென்னை,2013.

ஸ்ரீ தேவநாத சுவாமிகள் — பதினெட்டு சித்தர்களின் வாழ்வும் வாக்கும், நர்மதா பதிப்பகம், சென்னை, 2011.

சகுந்தலா., சி.ர. — வாழ்வியல் சிற்பிகள், ஸ்ரீ சாரதா அச்சுப்பள்ளி, சேலம், 1990.

சோமசுந்தரம்,மீ.ப., — சித்தர் இலக்கியம்., முதல், இரண்டாம் பகுதி அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர்., சிதம்பரம், 1992.

சிவவாக்கியர் பாடல் ( மூலமும் – மொழிப்புரையும்., — பூம்புகார் பதிப்பகம்., சென்னை-18., மு.பதிப்பு. ஜூலை.2003.

ஸ்வாமி விண்முகானந்த கலைஞன்., — யோகாசனமும் வாழ்க்கைத் தத்துவமும்., பதிப்பகம்., சென்னை-17 மு.பதிப்பு – 1992.

விஜயரெகுநாதன், நா. — யோகாசனங்களும் சித்த வைத்தியமும்., பாடி வெளியீடு., சென்னை.

ரிஷபானந்தர்., — சித்தர்கள் கண்ட மானுட ரகசியம்., அழகு பதிப்பகம்., சென்னை.

ஞானன்.இ.எஸ்.டி.செ. — தத்துவ தரிசனங்கள்., நெல்லை பிரிண்டர்ஸ். சென்னை, அக்., மு.பதிப்பு.உ,அக்டோபர் 1999 (ப.317-303).